# வாசகர்களுடன் ஒரு நிமிடம்

எழுத்து என்பது ஒரு தவம்.

எழுத்து என்பது ஒரு வேள்வி.

எழுத்து என்பது ஒளியை நோக்கிய ஒரு பிரார்த்தனை.

எழுத்து என்பது சத்திய வேட்கை.

எழுத்து என்பது ஒரு பயணம்.

நாம் ஒன்றை செய்கிறோம் என்பது முதல் நிலை. நம் மூலம் வெளிப்படுகிறது என்பது உண்மை நிலை. பலமுறை நான் எழுத முனையும் போதெல்லாம் அதற்கான விஷயங்கள் கிடைத்துக் கொண்டு இருக்கின்றன. ஆனால் அடுத்த விஷயங்கள் அதையும் மந்தி வெளிப்படுகிறது. அப்படி வந்ததுதான் பஞ்சாங்க நுட்பங்கள், ஜோதிடத்தில் பரிகார சூட்சுமங்கள் போன்றவை.

அப்போதுதான் யோசித்தேன், இது நம் முயற்சியால் மட்டும் விளைவது அல்ல. காலத்தின் கட்டளையும், இறை சங்கல்பமும், நமது முயற்சியும் ஒரு நேர்க்கோட்டில் வரும்போதுதான் வெளிப்பாடு நிகழ்கிறது. எனவே எனது வாசக நல் இதயங்களே, உலகியல் ஜோதிடத்திற்கான தயாரிப்புகள் தொடர்ந்து நடந்து கொண்டுதான் இருக்கிறன. வெளிவரும்போது மிகச்சிறந்த விருந்தாக இருக்கும் என்று மட்டும்தான் என்னால் உறுதிகூற முடிகிறது. எப்போது என்ற கேள்வி மட்டும் நம் கையில் இல்லை என்பது உறுதி. இருந்தால் நம் எல்லைக்கு உட்பட்டு சிந்தித்தால் தமிழ் புத்தாண்டும், உலகியல் ஜோதிடமும் ஒட்டிப் பிறந்த இரட்டையர் என்றுகூற விரும்புகிறேன்.

அன்புடன்,

**சித்தயோகி சிவதாசன்ரவி.**

# ஆசிரியர் உரை

ஜோதிடர்களின் முக்கிய கடமைகளில் ஒன்று, பரிகாரம் கூறுவதாகும். ஜாதகம் கணிப்பதற்கும், ஜாதகப் பலன்கள் கணித்துக் கூறுவதற்கும் பல வழிகாட்டி நூல்கள் உள்ளன. ஆனால், பரிகாரம் கூறுவதற்கு என ஒரு சில நூல்கள் மட்டுமே உள்ளன. என்றாலும், அவை முழுமையாக இல்லை. அல்லது, தெளிவாக இல்லை என்பது பலருடைய அபிப்பிராயம்.

என்னுடைய பிற நூல்களைப் படித்த பல வாசகர்கள், பரிகாரம் பற்றிய ஒரு முழுமையான, தெளிவான நூலின் அவசியத்தை அவ்வப்போது எனக்கு உணர்த்தி வந்தார்கள். கால அவகாசம் கிடைக்கும்போது அதுபோன்ற ஒரு நூல் எழுதி வெளியிடுவதாக நானும் உறுதிகூறி வந்தேன்.

என்னுடைய அன்பான வாசகர்களின் வேண்டுகோளுக்கிணங்கி அவர்களின் வசதிக்காக ஜோதிடத்தில் பரிகார சூட்சுமங்கள் என்னும் இந்நூலைத் தொகுத்து வழங்குகின்றேன்.

வாசகர்கள் இந்நூலை வாசித்து மகிழ்வதோடு மட்டும் விட்டுவிடாமல், அன்றாட வாழ்க்கையில் தானும் பயன்படுத்தி, பிறருக்கும் பயன்படுத்தி மகிழுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

அன்புடன்,

**சித்தயோகி சிவதாசன்ரவி.**

# பதிப்புரை

பரிகாரம் என்றவுடன் பூனையை யானையாக்கலம், எலியைப் புலியாக்கலாம் என்றுதான் நிறைய பேர் நினைக்கிறார்கள். ஆனால், பரிகாரம் என்பது உண்மையில் என்ன என்பதை சித்தயோகி சிவதாசன் ரவி அவர்கள் தெளிவாக இந்த நூலில் விளக்கியுள்ளார்.

எப்போதுமே அவரது பார்வை தெளிவாகவும் தீர்க்கமாகவும் இருக்கும். பல ஆண்டுகளாக பலரும் ரகசியமாக வைத்துக் கொண்டு, பரிகாரம் சொல்லி வந்ததை, இவர் படார் எனப்போட்டுடைத்து, அனைவரும் புரிந்து கொண்டு பரிகாரம் சொல்லும் வழியை அகலமாகத் திறந்து காட்டியுள்ளார்.

எத்தனை கன கச்சிதமான, தெளிவான விளக்கங்களைக் கொடுத்து பரிகாரத்தின் சூட்சுமங்களை வெளிச்சமாக்கியுள்ளார். சொல்லும் செய்தியும், வாதங்களும், உதாரணங்களும், விளக்கங்களும் எத்தனை ஆணித்தரமாகவும், துல்லியமாகவும் உள்ளது.

"சிகரம் மேல் ஏறு, ஏறு" என்று வேதத்தில் உள்ளதுபோல், அவரது வளர்ச்சியும் விரிவும் கண்டு, உங்களில் ஒருவனாக இருந்து மகிழ்ந்து, இந்த அரிய படைப்பை வெளியிடுவதில் பெருமகிழ்ச்சியும், ஒரு நல்ல செயலுக்கு துணை நிற்கிறோம் என்ற திருப்தியும் கொள்கிறேன்.

நிறை செயலுடன்,
**விஜய் ஹரி**
பதிப்பாசிரியர்.

# பொருளடக்கம்

# 1. கிரக தோஷ பரிகார முறைகள்

**பரிகாரம் ஒரு விளக்கம்:**

பரிகாரம் என்ற சொல்லுக்கு நீக்குகை, கேடுநீங்கக் கூறும் வாழ்த்து, பராமரிப்பு, மாற்று உபாயம் , பிராயசித்த வைத்தியம், கழுவாய், கேடுநீங்கும் வழி, பிராயசித்தம் என தமிழ் அகராதிகளில் பொருள் கூறப்பட்டுள்ளது.

ஜோதிடக் கலையின் முக்கிய பங்கே பரிகாரம் கூறுவதுதான். ஜாதகருடைய கிரக அமைப்புகளை ஆய்வு செய்து, அவருக்கு நடக்கப்போகும் நற்பலன், தீயபலன்களை கண்டறிந்து , .குறிப்பாக எத்தகைய தீய பலன்கள் ஜாதகரை நெருங்கிக் கொண்டிருக்கின்றன என்பதை கண்டறிந்து, அத்தகைய தீய பலன்களிலிருந்து விடுபட பரிகாரங்களைக் கூறுவது ஜோதிடரின் கடமையாகும்.

கிரக தோஷ ப்ரீதி, கிரக தோஷ சாந்தி, கிரக தோஷ நிவர்த்தி, கிரக தோஷ நிவாரணம், கிரக தோஷ கழிப்பு கிரக தோஷ பரிகாரம் எனப் பல்வேறு வார்த்தைகள் ஜோதிடர்களால் பயன்படுத்தப்படுகிறது. இவை அனைத்தும் ஒரே விஷயத்தையே குறிக்கின்றன.

பரிகார முறைகளுக்கு ஆதார நூல்களாக இருப்பவை வேதங்கள், ஸ்மிருதிகள், உபநிஷத்துகள், பதினெட்டு புராணங்கள், நாயன்மார்கள் அருளிய திருப்பதிகங்கள், அடியார்கள் அருளிய ஸ்தோத்திரங்கள், கவசங்கள் முதலியவை ஆகும். மேலும் பரிகாரங்கள் என்பவை காலங்காலமாக அனுபவத்தில் இருந்து வருபவையாகும் எனலே பரிகார முறைகளை ஜோதிடர்களின் கற்பனையாக யாரும் நினைக்க வேண்டாம்.

பல்வேறு பரிகார முறைகள் நடைமுறையில் உள்ளன. ஜாதகரின் வ்ாய்ப்பு வசதிகள் மற்றும் அவருடைய நம்பிக்கைகளுக்கு ஏற்ப அவற்றில் ஏதாவது ஏக பரிகார முறையை தேர்ந்தெடுத்துச் செய்தால் தீயபலன்களிலிருந்து விடுபடலாம்.

**பரிகாரம் செய்பவர் புரிந்து கொள்ள வேண்டிய விஷயம்!**

தன்னம்பிக்கை இல்லாததாலும் மனோ பயத்தினாலும் தான் பெரும்பாலானவர்கள், ஜோதிடர்களையும் சாமியர்களையும் அணுகுகின்றார்கள். தன்னை நம்பாதவர் பிறரை நம்பித் தான் ஆக வேண்டும். தன்னையும் நம்பாமல் பிறரையும் நம்ப முடியாமல் தவிப்பவன் வாழ்க்கைக் கடலில் சிக்கித் தவிக்க வேண்டியது தான்.

பரிகாரம் தேடிக் கொள்ளத்தான் ஜோதிடரை அணுகுகிறார்கள் ஜோதிட பலன் கேட்க வருகிறவர்களிடம் பரிகாரம் கூறினால், பரிகாரம் கூறுகிறவர் மீது, பரிகாரம் கேட்பவருக்கு நம்பிக்கை இருக்க வேண்டும். ஆகவே எந்த ஜோதிடர் மீது நம்பிக்கை இருகிறதோ அவரிடம் தான் பரிகாரம் கேட்க வேண்டும்.

பரிகாரம் கூறுபவன் வெறும் வழிகாட்டி மட்டும் தான், அவரவர்களுக்குரிய பரிகாரங்களை அவரவர்களே தான் செய்து கொள்ள வேண்டும். பசித்தவன் சாப்பிட்டால் தான் அவனுக்கு பசி அடங்கும். பசித்திருப்பவனுக்கு பதில் வேறு யாரவது சாப்பிட்டால் பசித்திருப்பவனுக்கு பசி அடங்காது.

இன்றைய பரபரப்பான உலகில் பத்து ரூபாய் பரிகாரததில் தன் பாவங்களைத் தொலைத்து விடலாம் என்று தவறான நம்பிக்கைகள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. பரிகாரத்தின் முக்கிய அம்சமே நம்பிகைதான். நம்பிக்கை இல்லாமல் செய்யப்படும் பரிகாரங்கள் எதுவும் பலம் தராது. பக்தி சிரத்தையுடன் செய்யப்படும் பரிகாரங்கள் மட்டுமே பலன்தரும்.

பரிகாரஸ்தலங்களில் நடப்பதைக் கவனியுங்கள் , ஆயிரம்பேர் வரிசையில் காத்துக்கிடக்க, ஆயிரத்து ஒண்ணாவதாக வந்தவன், ஆயிரம் ரூபாய்க்கு டிக்கட் வாங்கிக் கொண்டு முதல் ஆளாக தரிசனம் செய்துவிட்டு போவதைப் பார்க்கிறோம். இது ஒரு வகையான ஒழுக்கக்கேடு என்பதை இவர்கள் புரிந்து கொள்வதில்லை கோயில் நிர்வாகங்களும் புரிந்து கொள்வதில்லை.

கடவுள் என்ன ஐநூறுக்கும், ஆயிரத்திற்கும் சோரம் போகிறாவானா? இதை ஏன் இவர்கள் புரிந்து கொள்ள மறுக்கிறார்கள் , பாவத்திற்காகத்தான் பரிகாரம் செய்கிறோமே தவிர பரிகாரத்திற்காக பாவம் செய்வதில்லை.

சமுதாயத்தில் உள்ள ஒழுக்கீனங்களை சரி செய்யவே ஆன்மீகம் தேவை, ஒழுக்க கெட்டவர்களை ஊக்குவிப்பது ஆன்மீகம் இல்லை.

பாவமும், புண்ணியமும் பத்து ருபாய்க்கு வாங்கி சட்டைப் பையில் வைத்து கொண்டுப் போகும் மலிவான கடைசரக்கு அல்ல.

திருந்தி வாழ நினைப்பவனுக்கு பரிகாரம் உண்டு. திமிர்பிடித்து அலைபவனுக்கும் , திருடனுக்கும், கொலைகாரனுக்கும் பரிகாரம் என்பதே கிடையாது.

சுய ஒழுக்கத்தையும், விடாமுயற்சியையும், தன்னம்பிக்கையும், தைரியத்தையும், திடசித்தத்தையும், வளர்த்துக் கொள்வது தான் உண்மையான பரிகாரம்.

ஆகவே பரிகாரம் செய்பவர்கள் சுய ஒழுக்கத்தோடு நடந்து கொள்ள வேண்டும். சொந்த பணத்தில், சுயமாக சம்பாதித்த பணத்தில், மற்றவருக்கு தீங்கு நேராத வகையில் பரிகாரம் செய்ய வேண்டும். அனைத்து தரப்பு மக்களும் ஒரே இடத்தில் ஒன்றுகூடி பரஸ்பர மனஸ்தாபங்களை மறந்து, ஏற்றத்தாழ்வுகளை மறந்து மனித நேயத்தை வளர்த்து கொள்ள வாய்ப்பு அளிக்கும் இடமாக அமைக்கப்பட்டவை தான் ஆலயங்கள். அங்கே மனித நேயத்திற்கு எதிராக எது நடந்தாலும் அது ஆலயமாகாது.

**பரிகாரம் செய்ய ஏற்ற காலம் எது?**

பொதுவாக பரிகாரம் செய்பவருடைய ஜென்ம நட்சத்திரத் தன்று பரிகாரம் செய்வது சிறப்பு. எந்த கிரகத்திற்கு பரிகாரம் செய்கிறோமோ அந்த கிரகத்தினுடைய கிழமையில் செய்யலாம். அமாவாசை, பௌர்ணமி திதிகளில் பரிகாரம் செய்யலாம். அஸ்வினி, மகம், மூலம் ஆகிய நட்சத்திரங்களில் பரிகாரம் செய்வது உத்தமம்.

ஜென்ம நட்சத்திரத்திற்கு 4–8–12 இந்த நட்சத்திரங்களில் பரிகாரங்கள் செய்வது கூடாது. மழை பெய்து கொண்டிருக்கும் போது பரிகாரம் செய்யக்கூடாது சந்தியா காலத்தில் பரிகாரம் செய்யக்கூடாது.

நடுஇரவு நேரத்தில் பரிகாரம் செய்யக் கூடாது. பொதுவாக கிரக தோஷ பரிகாரங்களை தேய்பிறை காலங்களில் செய்ய வேண்டும். சூரியன் உச்சிப் பொழுதில் பரிகாரங்கள் செய்யக்கூடாது.

**பரிகாரம் தேடுபவர்கள் கவனத்தில் கொள்ள வேண்டிய விஷயம்!-**

ஜோதிடத்தையும் அதைச்சார்ந்த கலைகளையும் தவறாகப் பயன்படுத்துபவ்ர்கள் தான் இன்று அதிகமாகக் காணப் படுகிறார்கள். ஜோதிடரை அணுகுகிறவர்களில் பெரும் பாலானவர்கள் எதை தின்றால் பித்தம் தெளியும் என்ற நிலையிலேயே இருக்கிறார்கள். இவர்களின் இயலாமையைப் புரிந்து கொள்ளும் ஒரு சில ஜோதிடர்கள் இவர்களிடம் தவறான நம்பிக்கைகளை ஊட்டி, முடிந்த வரை பணத்தைக் கறந்துவிடுகிறார்கள், இத்தகைய ஜோதிர்களால், ஜோதிடக்கலைமீதும், ஒட்டுமொத்த ஜோதிடர்கள் மீதும் பொது மக்களுக்கு அவநம்பிக்கை ஏற்படுகிறது.

வறுமையில் வாடிய குடும்பத்தின் மீது கொண்ட கருணையில் ஆதிசங்கராச்சாரியார் கனகதாரா ஸ்தோத்திரம் பாடி, அக்குடும்பத்தின் வறுமை நீங்க அருள்புரிந்தார். இன்று நல்ல நிலையில் இருப்பவர்கள் பலர் தனம் பெருகும் என்ற நம்பிக்கையில் கனகதாரா ஸ்தோத்திரம் பாடிக் கொண்டிருக்கிறார்கள்.வறுமை என்பது ஒரு வகையான பிணி, பிணிக்கு மருந்தாகத்தான் ஆதி சங்கராச்சாரியார் கனகதாரா ஸ்தோத்திரத்தை பாடினார். செல்வ செழிப்போடு இருப்பவர்களுக்காக பாடவில்லை.

தன்னிடம் இல்லாததை, தனக்கு அவசியமானதை இறைவனிடம் கேட்பதில் ஒரு நியாயமிருக்கிறது, நியாயமற்ற வேண்டுதல்களை இறைவன் முன் வைப்பதில் நியாயமில்லை.

திருமணம் ஆகாத ஒருவன் திருமணம் ஆகாத ஒரு பெண்மீது ஆசை கொண்டு அவளை திருமணம் செய்து கொள்ள நினைப்பதில் ஒருநியாயம் இருக்கிறது. ஏற்கனவே திருமணம் ஆன ஒரு ஆணும், ஒரு பெண்ணும் ஒருவர் மீது ஒருவர் ஆசைப்படுவதில் நியாயமில்லை.

குஷ்ட நோயைக் குணப்படுத்துவது மிகவும் கடினம். பேராசை என்பது குஷ்ட நோயைப் போன்றது பேராசைக்காரர்களை திருப்தி படுத்துவதும் மிகக் கடினம். பேராசைக்காரர்களையே பெரும்பாலும் போலிகள் ஏமாற்றுகிறார்கள்.

உண்மையான ஜோதிடர் யதார்த்த நிலையிலிருந்து யதார்த்தங்களை மட்டுமே எடுத்துக் கூறுவார். அத்தகைய ஜோதிடர்களை பேராசைக்காரர்கள் கண்டு கொள்வதில்லை. ஆன்ம பலத்தையும், தெய்வ பலத்தையும் விலை கொடுத்து வாங்கவும் முடியாது, விற்கவும் முடியாது.

என்னிடம் வாருங்கள் , நான் உங்களை கோடீஸ்வரன் ஆக்கிவிடுகிறேன், குபேரன் ஆக்கிவிடுகிறேன் என்பது போன்ற விளம்பரங்கள் அண்மை காலங்களில் அதிகமாக வெளிவருவதைக் காணலாம் . இந்த விளம்பரங்களைத் தரும் பெரும்பாலான மகாபண்டிதர்கள் அன்றாடம் சோற்றுக்கே திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள் என்பது தான் கசப்பான உண்மை.

ஜோதிடம் ஒரு ஆன்மீகம் சார்ந்த கலை என்பதை மறந்து விட்டு ஒரு சிலர். இதை சீட்டாட்டம்,குதிரைப் பந்தயம் போன்ற சூதாட்டங்களில் பயன்படுத்தி வருவது வேதனைக்குரிய விஷயம்.

கொலை, களவு, விபசாரம் போன்ற கொடிய செயல்களுக்கும் ஜோதிடத்தை பயன்படுத்தாமல் இருந்தால் சரி, அப்படி ஒரு நிலை ஜோதிடத்திற்கு ஏற்படுமானால் அதைவிடக் கொடிய விஷயம் வேறு எதுவும் இருக்க முடியாது.

ஜோதிடத்தை தவறாக பயன்படுத்துபவர்கள் மனம் திருந்துவார்கள் என்று நம்புவோம்.

**பரிகாரங்கள் பலன் தருமா?**

ஜோதிடத்தின் முக்கிய பங்கு பரிகாரம் கூறுவதுதான். பரிகாரங்கள் பலன் தருமா? என பலரும் கேட்கிறார்கள். இந்த கேள்வி எப்படி இருக்கிறது என்றால் "குடை பிடித்தால் மழை நின்று விடுமா? எனக் கேட்பது போல் உள்ளது.

பரிகாரம் என்றால் என்ன? என்பதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும்.

பசிக்கு உணவு பரிகாரம்

தாகத்திற்கு தண்ணீர் பரிகாரம்

வெயிலுக்கு நிழல் பரிகாரம்

குளிருக்கு வெப்பம் பரிகாரம்.

அளவுக்கு அதிகமானதை குறைப்பதும் , தேவையான அளவைவிடக் குறைவாக இருப்பதைக் கூட்டுவதும் தான் பரிகாரம். அதாவது பரிகாரம் என்றால் சமநிலைப்படுத்துதல் என்று பொருள். அளவுக்கு அதிகமானால் அமிர்தமும் நஞ்சாகும் . நஞ்சு நஞ்சாலேயே முறிக்கப்படுகிறது . ஜாதகத்தில் தோஷம் எனக் குறிப்பிடப்படுவது ஒரு வகையான குறைபாடு ஆகும். குறைபாடுகளைக் களைவதுதான் பரிகாரம். மருந்து சாப்பிட்டால் நோய் குணமாகுமா? எனக் கேட்டுக் கொண்டிருந்தால் நோய் குணமாகுமாகாது தான் . மருந்தைச் சாப்பிட்டுப் பார்த்தால் தான் உண்மையை உணர முடியும் பரிகாரம் என்ற பெயரில் மக்கள் ஏமாற்றுப்படுவது உண்மை தான். மருத்துவத் துறையில் மக்கள் ஏமாற்றுப்படுவது உண்மை தான். மருத்துவத்துறையில் போலி மருத்துவர்களும், போலி மருந்துக்களும் மலிந்து கிடக்கும் இந்த காலகட்டத்தில் ஜோதிடத்துறை ஒருவிதிவிலக்கல்ல. இதற்காக ஜோதிடர்கள் எல்லோருமே போலிகள் என முத்திரை குத்திவிட முடியாது.

ஒரு நோய்க்கு பலவிதமான சிகிச்சைகள் இருப்பது போல், ஜாதகத்தில் உள்ள தோஷத்திற்கும் பலவிதமான பரிகாரங்கள் உண்டு. ஒரே நோயால் பாதிக்கப்பட இருவருக்கும் ஒரே மருந்து பலன் தராது. இதே போல் ஒரே தோஷமுள்ள இரு நபர்களுக்கு ஒரே விதமான பரிகாரம் பலன் தாராமல் போகலாம் . ஒரு தனி மனிதனின் ஜாதகத்தில உள்ள கிரக நிலைகளைப் பொருத்து பரிகாரங்கள் மாறுபடும்.

தண்ணீர்க் குடித்தால் தாகம்தீருமா? எனக் கேட்காதீர்கள் , தண்ணீரைக் குடித்துபாருங்கள் உண்மை விளங்கும்.



# 2. ஜோதிடத்தில் முகூர்த்தம் - ஒரு தோஷ பரிகாரம்

ஜோதிடத்தில் உள்ள ஆறு பிரிவுகளில் ஒரு பிரிவு முகூர்த்தமாகும். முகூர்த்தமானது சுபமுகூர்த்தம், அசுப முகூர்த்தம் என இருவகைப் படும். ஒரு மனிதன் பிறக்கின்ற நேரமும் ஒரு வகை முகூர்த்தம் தான், சுப முகூர்த்தம் எனப்படும் நல்ல நேரத்தில் எந்த காரியம் செய்தாலும், அந்த காரியம் மேன்மேலும் விருத்தி அடையும். அசுப முகூர்த்தம் எனப்படும் கெட்ட நேரத்தில் எந்த காரியம் செய்தாலும் அந்த காரியம் நாசமடையும் .

சுப முகூர்த்த வேளையில் ஒரு குழந்தை பிறந்தால் அக்குழந்தையின் எதிர்காலம் சிறப்பாக இருக்கும். அசுப முகூர்த்த வேளையில் ஒரு குழந்தைபிறந்தால் அக்குழந்தையின் எதிர்காலம் சிறப்பாக இருக்காது.ஒரு குழந்தை அசுப வேளையில் பிறந்திருந்தாலும், அக்குழந்தையின் எதிர்காலத்தை நல்லவிதமாக மாற்றி அமைப்பதற்கு வழிகூறுவது ஜோதிடமாகும்.

பிறப்பு முதல் இறப்பு வரை மனித வாழ்க்கையில் நடைபெறும் நல்லகாரியங்களை சுபமுகூர்த்த வேளையில் செய்தால் விதிப்பலன்களை ஓரளவுக்கு மாற்றி அமைக்க முடியும் என்ற நம்பிக்கையினாலேயே நம்முன்னோர்கள் சோடஷ கிரியைகள் என்னும் கர்ப்பதானம், பும்ஸவனம், சீமந்தம், ஜாதகர்மம், நாமகரணம், சூரிய சந்திர கோதரிசனம், அன்னபிராசனம், அட்சாராப்பியாசம், காதுகுத்தல், அரைஞாண் பூட்டுதல் சமாவர்த்தனம் , விவாகம் முதலான காரியங்களை சுபமுகூர்த்த வேளைகளில் காலங்காலமாக செய்துகொண்டு வருகிறார்கள் ஜோதிடத்தில் முகூர்த்தம் என்னும் பிரிவு தோஷ பரிகாரமாக தான் சொல்லப்பட்டிருக்கின்றது , பரிகாரம் என்பது தோஷங்களில் இருந்து விடுபடுவதற்கானமுயற்சியே ஆகும். முயற்சியில் வெற்றியும் ஏற்படலாம், தோல்வியும் ஏற்படலாம்.

நோயாளி நோய் குணமாகும் என்ற நம்பிக்கையில் தான் மருந்து சாப்பிடுகிறான். மருந்து சாப்பிடும் போது ஒரு சிலருக்கு நோய் குணமாகாமல் போகலாம். அதற்காக மருந்து சாப்பிடுவது வீணான செயல் என கருத முடியாது. முகூர்த்தம் என்பது தோஷ பரிகாரமாக தேர்ந்தெடுக்கும் காலமே ஆகும்.பரிகாரத்தால் ஒருசிலருக்கு தோஷ நிவாரணம் கிடைக்காமல் போகலாம். அதற்காக கால நேரம் பார்க்க தேவையில்லை எனவிட்டுவிட முடியாது.

வருடத்தில் ஒரு நாள் கூட தோஷமில்லாத நாளாக இருக்காது. எல்லா நாட்களுமே தோஷமுள்ள நாட்களாக தான் இருக்கும்.அதில் அதிக தோஷமுள்ள நாட்களை விலக்கி குறைந்தளவு தோஷமுள்ள நாட்களை தேர்ந்தெடுப்பதே முகூர்த்த விதானமாகும்.

பரிகாரம் என்றால் முடவனுக்கு கையில் ஒரு கம்பைக் கொடுத்து தூக்கி நிறுத்தி நடக்க வைக்கும் ஒரு முயற்சி அவ்வளவு தான் முடவனுக்கு கால் முளைக்க வைப்பதற்காக எடுக்கும் முயற்சி அல்ல. இதே போல் நல்ல முகூர்த்தம் என்பது ஜாதகத்தில் உள்ள தீய பலன்களை மாற்றி அமைக்க தேர்ந்தெடுக்கப்படும் காலமேயாகும். தீய பலன்களை முற்றிலுமாக நீக்கும் வல்லமையுடைய காலமாக கருத வேண்டாம்.

**பரிகாரப் பொருட்கள் பயன்தருமா!**

கிரக தோஷ நிவர்த்திக்காக பலவிதமான பரிகாரங்களை பரிந்துரை செய்கிறார்கள் . அவற்றில் குறிப்பாக உலோகங்களாலான வளையல்கள், மோதிரங்கள், நவரத்தினங்கள், மூலிகை ரட்சைகள் இவைகளை உடம்பில் அணிந்து கொண்டால் நவக்கிரங்களால் உண்டாகும் பாதிப்புகள் குறையும் என கூறி வருகிறார்கள். இது உண்மையா? என பலரும் கேட்கிறார்கள்.

உண்மை தான் இது எப்படி என்றால் இடிதாங்கிகள் இடி மின்னல்களிலிருந்து வெளிப்படும் மின்சக்தியை கிரகித்துக்

கொண்டு கட்டிடங்களை பாதுகாக்கின்றன.இடி தாங்கிகள் தாமிரக்கம்பிகளால் செய்யப்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது. இதுபோல் பரிகாரப் பொருட்கள் கிரக கதிர் வீச்சினால் ஏற்படும் விளைவுகளிலிருந்து நிச்சயமாக மனிதனை பாதுகாக்கும்.

பிரபஞ்சம் முழுவதும் மின்காந்த அலைகள் நிரம்பி இருக்கின்ற இந்த மின் காந்த அலைகள் மனிதனை ஏதோ ஒரு வகையில் பாதிக்கத்தான் செய்கின்றது. இதனால் மனிதனுக்கு நன்மையோ, தீமையோ ஏற்படுகின்றது. இந்த மின்காந்த அலைகளால் ஏற்படும் தீமைகளிலிருந்து மனிதனைப் பாதுகாக்க நம் நாட்டில் வாழ்ந்த முனிவர்கள் பல்லாண்டு கால அனுபவத்தின் மூலம் ஒருசில பொருட்கள் மனிதனுக்கு பாதுகாப்பு கவசம் போல் செயல்படுவதை அறிந்தார்கள் அவைகளே பரிகாரப் பொருட்களாகும்.

பரிகார பொருட்களால் மட்டுமே கிரக தோஷ பாதிப்புகளிலிருந்து விடுபட முடியும் என்று கூற முடியாது.

பரிகாரங்களில் பலவகை உண்டு அவற்றில் ஒரு வகை பரிகாரமே உலோகப்பொருட்கள், நவரத்தினங்கள் மூலிகைப் பொருட்களை உடலில் அணிந்து கொள்வதாகும்.

ஒருவர் தன்னுடைய மனவலிமையால் கூட கிரகத் தாக்கத்தால் ஏற்படும் விளைவுகள் இருந்து தப்பித்து கொள்ளலாம்.

ஜெபம், தவம், பிரார்த்தனைகள் மூலம் பிரச்சனைகளிலிருந்து விடுபடலாம். பூமியில் ஒருசில இடங்களில் இயற்கையாகவே கிரக தோஷத்தை எதிர்கொள்ளும் சக்திகள் நிரம்பி இருக்கின்றன. அந்த இடங்களுக்கு சென்று வருவதன் மூலம் கிரகதாக்கத்திலிருந்து தப்பித்துக் கொள்ளலாம் . அத்தகைய இடங்களிலேயே நம் முன்னோர்கள் ஆலயங்கள் கட்டி வைத்தார்கள்,

இது தவிர சித்தர்கள், யோகிகள், இவர்களுக்கு கிரகத்தால் எந்த பாதிப்பும் ஏற்படுவதில்லை. ஆகவே , சித்தர்கள் யோகிகளுக்கு அருகில் இருந்தாலும் கிரக தோஷங்கள் பாதிப்பில்லை.

இவை எல்லாம் அனுபவப் பூர்வமான உண்மைகள். பரிகார பொருட்கள் பயன் தருமா என கேள்விகள் கேட்பதை தவிர்த்து அவற்றை பயன்படுத்தி பார்த்து, உண்மையை தெரிந்து கொள்வது தான் சிறப்பு.

**பரிகாரம் செய்ய ஏற்ற இடம் எது?**

1. குளக்கரை
2. நதிக்கரை
3. கிணற்றங்கரை
4. கடற்கரை
5. அருவிக்கரை
6. கோ சாலை
7. நாயன்மார்களால் பாடல் பெற்ற சிவாலயங்கள்
8. ஆழ்வார்களால் மங்களசாசனம் செய்யப்பட்ட விஷ்ணு ஆலயங்கள்
9. அடியார்கள் , மகான்களால் பாடல் பெற்ற முருகன் ஆலயங்கள்
10. அடியார்கள், மகான்களால் பாடல் பெற்ற அம்மன் திருத்தலங்கள்
11. பாடல் பெற்ற விநாயகர் ஆலயங்கள்.
12. சித்தர்கள் சமாதி அடைந்ததிருத்தலங்கள்
13. குரு முகம்
14. குரு பாதுகாஸ்தலம்
15. குரு ஆலயம்
16. யோகிகள், ஞானிகள் தவம் செய்த இடங்கள்
17. மலை ஸ்தலங்கள்
18. கிறிஸ்தவ தேவாலயங்கள்
19. முஸ்லீம் மசூதிகள்

**பரிகாரம் செய்பவர் கடைபிடிக்க வேண்டிய விதிமுறைகள்:-**

பரிகாரம் செய்பவர் பரிகாரம் செய்வதற்கு முன், முதலில் தன் தாய், தந்தை மற்றும் வீட்டில் உள்ள பெரியவர்களின் காலில் விழுந்து

வணங்கி ஆசி பெற வேண்டும். தன் முன்னோர்களை நினைத்து பிரார்த்தனை செய்ய வேண்டும் . அதன் பின் தன் வீட்டிற்கு அருகிலுள்ள விநாயகர் ஆலயத்திற்குச் சென்று அர்ச்சனை செய்து வழிபட வேண்டும். வீட்டின் அருகில் விநாயகர் ஆலயம் இல்லாத பட்சத்தில் வீட்டிலேயே விநாயகரை நினைத்து பிரார்த்தனை செய்ய வேண்டும். பிறகு ஊர்காவல் தெய்வம் அல்லது கிராம தேவதையை வழிபட வேண்டும்.

தன் குலதெய்வம் வீட்டருகே இருக்குமானால் அங்கு சென்று வழிபட வேண்டும். அதன்பின் தன் இஷ்ட தெய்வத்தை வழிபட வேண்டும். குலதெய்வம் இருக்குமிடம் வெகு தொலைவாக இருக்குமானால், வீட்டிலிருந்த படியே குலதெய்வம் இருக்கும் திசையை நோக்கி வணங்கி மனதில் பிராத்தனை செய்து கொள்ள வேண்டும். இஷ்ட தெய்வத்றிக்கும் இதுபோலவே செய்து கொள்ள வேண்டும். இவைகளை யெல்லாம் செய்தபின்பு தான் பரிகாரம் செய்ய வேண்டிய ஸ்தலத்திற்குச் செல்ல வேண்டும்.

பரிகாரப் பொருட்கள் வாங்கும் போது பேரம்பேசச் கூடாது. பரிகாரப் பொருட்களின் அளவை குறைந்து வாங்கக்கூடாது.

ஒருவருக்குப் பதிலாக மற்றொருவர் பரிகாரம் செய்யக்கூடாது. அதாவது ஜாதகருக்காக அவருடைய தாய், தந்தையரோ அல்லது சகோதர, சகோதரிகளோ பரிகாரம் செய்யக்கூடாது.

பரிகாரம் செய்யும் போது வாக்கு வாதங்களிலோ, சண்டைச் சச்சரவுகளிலோ ஈடுபடக்கூடாது. தனக்குப் பிடிக்காதவர்கள், எதிரிகள் இவர்களைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு பரிகாரம் செய்யக்கூடாது. பொறாமை பிடித்தவர்கள், பேராசைக் காரர்கள் இவர்களை பக்கத்தில் வைத்துக் கொண்டு பரிகாரம் செய்யக்கூடாது. திருமணம் ஆகாத பெண்களின் முன்னிலையில் தன் பெண்ணுக்கு திருமணம் ஆவதற்காக பரிகாரங்கள் செய்யக்

கூடாது. கணவன் இல்லாமல் மனைவி மட்டும் தனியே பரிகாரம் செய்யக்கூடாது.

பரிகாரம் செய்து கொண்டிருக்கும் போது எக்காரணத்தைக் கொண்டும் அதை பாதியில் நிறுத்தக்கூடாது. பரிகாரப் பொருட்கள் எதையும் தன் வீட்டிற்கு திருப்பி எடுத்து வரக்கூடாது. தானப்பொருட்களை ஆசாரமில்லாத பிராமணர்களுக்கு ஆசார மில்லாத பிராமணர்களைக் கொண்டு பரிகாரம் செய்யக்கூடாது. மற்றும் அலிகளுக்கும் வழங்கக்கூடாது.

பரிகாரம் செய்தபின் நேராக வீட்டிற்கு வந்து விட வேண்டும். வழியில் வேறு எங்கும் தங்கக்கூடாது. பரிகாரஸ்தலங்களுக்குச் செல்லும் போது வேறு ஆலயங்களுக்குச் செல்லக்கூடாது.

**பரிகார சூட்ச மங்கள்:-**

1. ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் நில ராசியில் நின்றால் அக்கிரகத்திற்குரிய ரத்தினம் அல்லது ரக்ஷைகளை உடலில் அணிந்து கொள்ள வேண்டும்.
2. ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் நெருப்பு ராசியில் நின்றால், அக்கிரகத்திற்கோ அல்லது அக்கிரக்த்தின் அதிதேவதைகளுக்கோ, தீபாராதனை அல்லது ஹோமாதி காரியங்களைச் செய்யவேண்டும்.
3. ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் காற்று ராசியில் நின்றால், அக்கிரகத்திற்குரிய மந்திரம், ஸ்லோகம் , அஷ்டோத்திரம் , சகஸ்ரநாமம், இவைகளைப் பாராயணம் செய்ய வேண்டும்.
4. ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் நீர் ராசியில் நின்றால் , அக்கிரகத்திற்குரிய பொருட்க்களை தலையை சுற்றி தண்ணீரில் எறியவேண்டும் அல்லது யாருக்காவது தானமாக கொடுக்க வேண்டும்.

5. ஆதிபத்திய ரீதியான ஒரு பாவக்கிரகம் ஜாதகத்தில் மிகவும் வலிமை பெற்று நின்றால், அக்கிரகத்திற்குரிய பரிகாரப் பொருட்களை தண்ணீரில் வீசி எறிய வேண்டும், அல்லது தானம் செய்ய வேண்டும்.

6. ஆதிபத்திய ரீதியாக சுபத்தன்மை பெற்ற கிரகம் ஜாதகத்தில் வலுக்குன்றி இருந்தால், அக்கிரகத்திற்குரிய ரத்தினம் அல்லது ரக்ஷைகளை அணிய வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் தானம் செய்யக்கூடாது.

7. ஆதிபத்திய ரீதியாக அசுபத்தன்மை பெற்ற கிரகத்திற்குரிய, பொருட்களை யாரிடமிருந்தும் தான்மாகப் பெறக்கூடாது.

8. ஆதிபத்திய ரீதியாக சுபத்தன்மைப் பெற்ற கிரகத்திற்குரிய பொருட்களை தாராளமாக தானமாகப் பெற்றுக் கொள்ளலாம்.

9. ஜாதகத்தில் குறிப்பிட்ட தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் லக்னத்திலிருந்து கணக்கிட எத்தனை யாவது வீட்டில் அமர்ந்துள்ளதோ அத்தனை முறை பரிகாரம் செய்ய வேண்டும் (அல்லது)

10. ஜாதகத்தில் குறிப்பிட்ட தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் எந்த ராசியில் நிற்கிறதோ அந்த ராசிநாதன் லக்னத்திற்கு எத்தனை யாவது வீட்டில் நின்கின்றதோ அத்தனை முறை பரிகாரம் செய்ய வேண்டும்.

11. ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் எந்தராசியில் நிற்கின்றதோ அந்த ராசியின் இருப்பிடத்திற்கு பொருத்தமான ஆலயங்களைத் தேர்ந்தெடுத்து, அந்த ஆலயங்களிலேயே பரிகாரம் செய்ய வேண்டும். உதாரணமாக செவ்வாய் சிம்ம ராசியில் நின்றால் சுவாமி மலை முருகனை வழிபட வேண்டும். சிம்மம் சூரியனின் வீடாகும். சூரியனை அதிதேவதை சிவனாகும். செவ்வாயின் அதிதேவதை முருகனாகும். செவ்வாய் சிம்மத்தில் நின்றால் முருகன் தன் தகப்பனான

சிவனின் மடியில் அமர்ந்திருப்பதாக எடுத்துக்கொள்ள வேண்டும். சுவாமி மலையில் சிவனின் மடியில் முருகன் அமர்ந்துக் கொண்டு சிவனுக்கு ஓங்காரப் பொருளை விளக்கினான் என்பது புராணச் செய்தியாகும்.

12 . ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகத்துடன் மற்றொரு கிரகம் சேர்க்கைப் பெற்று நின்றால் அந்த கிரகத்திற்கும் சேர்த்து பரிகாரம் செய்யவேண்டும்.

**பரிகார வகைகள்**

ஜோதிடத்தின் முக்கியப் பங்கு என்னவென்றால் ஜாகத்தில் உள்ள சாதக, பாதக நிலைகளைக் கண்டறிந்து அதற்கு தகுந்த ஆலோசனைகளை வழங்குவதாகும். பாதகமான சூழ்நிலைகளி லிருந்து விடுபடுவதற்கான வழிமுறைகளே பரிகாரங்களைப் பரிந்துரை செய்ய வேண்டும் . பரிகாரங்களில் பல வகைகள் உள்ளன, அவைகளைப் பார்போம்.

1. நவதானியங்களை தானம் செய்தல்.
2. நவகிரகங்களை வழிபடுதல்
3. நவரத்தினம் தரித்தல்
4. நவரத்தினங்களை தானம் செய்தல்
5. நவகிரக அதி தேவதைகளை வழிபடுதல்
6. நவகிரக பிரீத்தி அதிதேவதைகளை வழிபடுதல்
7. நவகிரக மந்திரங்கள் ஜெபித்தல்.
8. நவகிரக ஸ்தோத்திரங்களைப் படித்தல்
9. நவகிரக அதிதேவதைகளுக்குரிய மந்திரங்களை ஜெபித்தல்.
10. நவகிரக அதிதேவதைகளுக்குரிய ஸ்தோத்திரங்களை படித்தல்.
11. நவகிரக ஸ்தலங்களுக்குச் சென்று வழிபடுதல்.
12. நவகிரக ஹோமம் செய்தல்

13. நவகிரக யந்திரங்களைப் பூஜித்தல், தரித்தல்.
14. நவகிரக அதிதேவதைகளின் யந்திரங்களைப் பூஜித்தல், தரித்தல்.
15. நவகிரகங்களின் நிறங்களுக்கு ஒத்த வஸ்திரங்களைத் தரித்தல், தானம்செய்தல்.
16. நவகிரகங்கள் குறிக்கும் விலங்குகள், பறவைகளை பராமரித்தல்.
17. நவகிரகங்கள் குறிக்கும் மரம், செடி கொடிகளை வளர்த்தல், பராமரித்தல்.
18. நவகிரகங்கள் குறிக்கும் உறவு முறையினரைப் பேணிக் காத்தல்.
19. நவக்கிரங்களுக்குரிய உலோகப் பொருட்களை தரித்தல், தானம் செய்தல்.
20. நவக்கிரகங்களுக்குரிய மூலிகை ரட்சைகளை அணிந்து கொள்தல்.
21. நவக்கிரக சமித்துகளைக் கொண்ட ஹோமம் செய்தல்.
22. நவகிரக அதிதேவதைகளின் ஆலயங்களுக்குச் சென்று வழிபடுதல்.
23. நவகிரக பிரதி அதிதேவதைகளின் ஆலயங்களுக்குச் சென்று வழிபடுதல்.

பரிகாரங்களை பரிந்துரை, செய்யும் போது ஜாதகர் பிறந்த குடும்ப சூழ்நிலைகள், ஜாதி , மதம், குடியிருக்கும் இடம், சமுதாயச் சூழ்நிலைகள், ஜாதகரின் நம்பிக்கைகள், பண்பாடு, கலாச்சாரம், பொருளாதார நிலை இவைகளை அனுசரித்து பரிகாரம் கூற வேண்டும்.

உதாரணமாக ஜாதகர் பாமரனென்றால், அவரால் மந்திரம் ஜெபித்தல், ஹேமாதி காரிகங்களைச் செய்தல்,ஸ்தோத்திரங்கள் படித்தல் போன்றவை சாத்தியப்படாது. பணப்பற்றாக்குறை

உள்ளவர்களால் தான தர்மம் செய்ய முடியாது. நீண்ட தூரத்தில் உள்ள பரிகார ஸ்தலங்களுக்கு சென்று பரிகாரங்கள் செய்ய முடியாது. ஆகவே ஜாதகரின் தகுதி மற்றும் சாத்தியக் கூறுகளை அனுசரித்து பரிகாரங்களை பரிந்துரை செய்யவேண்டும்.

பரிகார முறைகளை விளக்கும் பல புத்தகங்கள் வெளி வந்துள்ளன. அவற்றைப் படித்து விட்டு சிலர் தாங்களே ஏதாவது ஒரு பரிகாரத்தை செய்து கொள்கிறார்கள்.

அத்தகைய பரிகாரங்கள் பலன் தராது. தானாகவே ஒரு மந்திரத்தை தேர்வு செய்து ஜெபிப்பதை விட ஏதாவது ஒரு குரு வினிடத்தில் மந்திர உபதேசம் பெற்று ஜெபித்தாலே மந்திரங்கள் பலிக்கும். வாக்கு சித்தி, மந்திர சித்தி பெற்றவர்களுக்கு மட்டுமே பரிகாரம் கூறும் யோக்கியதை உண்டு. இதை அனுபவத்தில்தான் உணர முடியும் பரிகாரங்களைக் கேட்டு விட்டு செய்யாது விட்டால் நிலைமை மேலும் மோசமாகும். இதையும் அனுபவத்தில் உணரலாம்.

பரிகாரம் என்ற பெயரில் பலர் ஏமாற்றப்படுகிறார்கள் என்பது உண்மையே. உண்மையான ஜோதிடர்களை கண்டு கொள்வது எப்படி என்றால் அவர்களிடம் தற்புகழ்ச்சி இருக்காது. தட்சனை என்று கேட்டு வாங்க மாட்டார்கள் . கொடுத்ததை வாங்கிக் கொள்வார்கள்.எளிமையாக இருப்பார்கள் சவால் விட மாட்டார்கள். அடக்கமாக நடந்து கொள்வார்கள். போட்டி, பொறாமை எதுவும் அவர்களிடத்தில் இருக்காது. தன்னை எல்லோரும் மதிக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு அவர்களிடத்தில் இருக்காது.

ஜோதிட பலன் கேட்கும்போது ஜோதிடரை குறுக்கு கேள்விகள் கேட்கக் கூடாது. ஜோதிடரின் மனம் புண்படும் விதமாக வாக்கு வாதங்கள் புரியக்கூடாது. அவ்வாறு செய்தால் ஜாதக பலன்கள் நடைபெறுவதில் தீமைகள் உண்டாகும். வாக்கு சித்தி உடையவர்கள் உங்களை சபித்துவிட்டால் அது பலித்து விடும்.ஆகவே ஜோதிடர்களிடம் ,குறிப்பாக வாக்குசித்தி உடையவரிடம் பேசும் போது மரியாதையுடனும், அடக்கத்துடனும் நடந்து கொள்வது நலம். வாக்கு

சித்தியுடைய ஜோதிடர்கள் உங்களை மனதார ஆசீர்வதித்தாலே போதும் பல தோஷங்கள் விலகிவிடும்.

ஒரே விதமான தோஷங்கள் பல ஜாதகர்களுக்கு இருந்தாலும் அவர்கள் அனைவருக்கும் ஒரே விதமான பரிகாரங்கள் பலன் தராது. ஜாதகள் பலன் கேட்கும் சமயத்தில் ஜோதிடரின் உள்மனதில் என்ன தோன்றுகிறதோ அதுதான் பரிகாரம்.

ஜாதகத்தில் பல கிரக தோஷ அமைப்புகள் இருந்தாலும் அந்த கிரக தோஷ அமைப்பிற்கு குருப்பார்வை இருந்தால் மட்டுமே பரிகாரம் உண்டு. குருப்பார்வை இல்லாத கிரக தோஷ அமைப்புகளுக்கு பரிகாரம் கிடையாது. ஆகவே சாத்தியக்கூறுகளை அனுசரித்து பரிகாரம் கூறவேண்டும்.



# 3. நவகிரக ஸ்தலங்கள்

நவகிரக தோஷங்களிலிருந்து விடுபட மிகவும் சிறந்த வழிமுறை எதுவென்றால் ஸ்தலவழிபாட்டு முறையே ஆகும். நவகிரக வழிப்பாட்டிற்கென்று பிரத்யேகமான ஸ்தலங்கள் தமிழ்நாட்டில் உள்ளன. எந்தகிரகத்தால் ஏற்படும் தோஷத்தை நீக்க வேண்டுமோ, அந்த கிரகத்திற்குரிய ஸ்தலம் எதுவோ, அந்த ஸ்தலத்திற்கு , அந்த கிரகத்திற்குரிய கிழமையில் சென்று முறைப்படி வழிப்பட்டு வந்தால் கிரக தோஷம் நீங்கி நன்மைகள் ஏற்படும்.

தஞ்சை மாவட்டத்தை சுற்றியுள்ள நவகிரக ஸ்தலங்களின் விவரங்கள் கீழே தரப்பட்டுள்ளது.

**சூரியன்- (ஆடுதுறை)**

தஞ்சை மாவட்டம், திருவிடை மருதூர் வட்டம், திருமங்கலக்குடிக்கு அடுத்து சூரியனார் கோயில் உள்ளது. ஆடுதுறை ரயில் நிலையத்திலிருந்து சுமார் 3 கி.மீ தூரத்தில் உள்ளது.

**சந்திரன் - (திங்களூர்)**

கும்பகோணத்திலிருந்து திருவையாறு செல்லும் வழியில், கும்பகோணத்திலிருந்து 38 கி.மீ. தொலைவில் உள்ளது திங்களூர்.

**செவ்வாய்- (வைத்தீஸ்வரன் கோயில்)**

வைத்தீஸ்வரன் கோயில் மயிலாடுதுறைக்கு 15 கி.மீ தொலைவிலும், சீர்காழிக்கு 6கி.மீ தொலைவில் தெற்கே அமைந்துள்ளது.

**புதன்-(திருவெண்காடு)**

மயிலாடு துறையிலிருந்து மங்கை மடம் செல்லும் வழியில் திருவெண்காடு அமைந்துள்ளது.

**குரு- (ஆலங்குடி)**

கும்பகோணம் – மன்னார் குடி சாலையில் 17கி.மீ தொலைவில் ஆலங்கடி அமைந்துள்ளது.

**சுக்கிரன் -(கஞ்சனூர்)**

கும்பகோணத்திற்கு கிழக்கே 18 கி.மீ தொலைவில் காவிரியின் வடகரையில் கஞ்சனூர் அமைந்துள்ளது மயிலாடு துறையிலிருந்து 22கி.மீ தொலைவில் உள்ளது. சூரியனார் கோவிலிருந்து 3 கி.மீ தொலைவில் உள்ளது.

**சனி- (திருநள்ளாறு)**

திரு நள்ளாறு திருத்தலம் காரைக்கால்அருகில் உள்ளது.

**ராகு- (திருநாகேஸ்வரம்)**

கும்ப கோணத்திற்கு கிழக்கே காரைக்கால் செல்லும் நெடுஞ்சாலையில் பிரிந்து 6 கி.மீ தொலைவில் திருநாகேஸ்வரம் என்ற திருத்தலம் உள்ளது.

**கேது- ( கீழ் பெரும் பள்ளம்)**

நாகப்பட்டினம் மாவட்டம் பூம்புகாருக்குத் தெற்கில் ஒரு கல் தொலைவில் உள்ளது கீழ்பெரும் பள்ளம் என்ற திருத்தலம்.

**நெல்லை, தூத்துக்குடி மாவட்டத்தை சுற்றியுள்ள நவகிரக ஸ்தலங்கள் கீழே தரப்பட்டுள்ளன.**

**சூரியன் - (பாபநாசம்)**

திருநெல்வேலி மாவட்டத்தில் அமைந்துள்ள பாபநாசம் திருநெல்வேலியிலிருந்து 45 கி,மீ தூரத்தில் அமைந்துள்ளது. முக்கூடல் வழியாகவும், சேரன் மகா தேவி வழியாகவும் செல்லாம்.

**சந்திரன் - (சேரன் மகாதேவி)**

திருநெல் வேலியிலிருந்து பாபநாசம் செல்லும் வழியில்

சேரன்மகாதேவி அமைந்துள்ளது.

**செவ்வாய்- (கோடக நல்லூர்)**

திருநெல்வேலி மாவட்டம் சேரன் மகாதேவி,முக்கூடல் செல்லும் சாலையில் நடுக்கல்லூர என்ற ஊரிலிருந்து தெற்கே ஒருகிலோ மீட்டர் தொலைவில் கோடகநல்லூர் கிராமம் அமைந்துள்ளது.

**புதன் - (தென்திருப்பேரை)**

திருநெல்வேலியிலிருந்து 38 கி.மீ தொலைவில் திருச்செந்தூர் செல்லும் சாலையில் அமைந்துள்ளது. இத்தலம் தூத்துக்குடி மாவட்டத்தில் அமைந்துள்ளது.

**குரு- (முறப்பநாடு)**

திருநெல்வேலியிருந்து 17கி,மீ தொலைவில் தூரத்துக் குடி செல்லும் சாலையில் முறப்ப நாடு அமைந்துள்ளது.

**சுக்கிரன் - (சேர்ந்த பூ மங்கலம்)**

தாமிரபரணி நதி கடலுடன் சங்க மிக்கும் இடத்தில் சேந்த பூமங்கலம் அமைந்துள்ளது. இத்தலம் தூத்துக்குடி மாவட்டத்தில் அமைந்துள்ளது. ஆத்தூர் அருகே உள்ளது.

திருநெல்வேலியிலிருந்து ஆத்தூர்க்கு வரலாம்.

**சனி - (ஸ்ரீவைகுண்டர்)**

திருநெல்வேலியிலிருந்து 30 கி.மீ தொலைவில் திருச்செந்தூர் செல்லும் வழியில் ஸ்ரீ வைகுண்டம் அமைந்துள்ளது. இத்தலம் தூத்துக்குடி மாவட்டத்தில் அமைந்துள்ளது.

**ராகு - (குன்னத்தூர்)**

திருநெல்வேலி மாவட்டத்தில இக்கோயில் அமைந்துள்ளது. மேலத்திரு வேங்கடநாதபுரம் செல்லும் வழியில் அமைந்துள்ளது.

**கேது- (ராஜபதி)**

தூத்துக்குடி மாவட்டம் தென் திருப்பேரையை அடுத்த மணத்தி என்ற ஊரிலிருந்து ஒரு கிலோ மீட்டர் வடக்கே அமைந்துள்ளது ராஜபதி என்னும் திருத்தலம்.

**சென்னை நகரை சுற்றியுள்ள நவகிரகஸ்தலங்கள் கீழே தரப்பட்டுள்ளன!-**

**சூரியன் -**

சென்னை செங்குன்றம் அருகே உள்ள ஞாயிறு கோயில்.

**திங்கள் (சந்திரன்)**

சென்னை தியாகராஜ நகர் பாண்டிபஜார் அகஸ்தியர்கோயில்

**செவ்வாய்-**

சென்னை வில்லிவாக்கம் அகத்தீஸ்வரர் கோயில்

**புதன்-**

சென்னையை அடுத்துள்ள திருவாலங்காடு.

**குரு-**

சென்னை– ஆவடி வழியில் அமைந்துள்ள பாடி என்னும் திருத்தலம்.

**சுக்கிரன்-**

சென்னை மயிலாப்பூரில் உள்ள வெள்ளீஸ்வரம் கோயில்

**சனி-**

சென்னை பல்லாவரம் அருகேயுள்ள பொழிச்சலூர்

சென்னை பூக்கடை, தங்கசாலையில் அமைந்துள்ள ஏகாம்பரஸ்வரல் கோயில்.

சென்னை மேற்கு மாம்பலத்தில் உள்ள சனீஸ்வரன் கோயில்.

**ராகு-**

சென்னை பாரிமுனை மண்ணடியில் அமைந்துள்ள மல்லீஸ்வரர் ஆலயம்

குன்றத்தூர் நாகேஸ்வரர் ஆலயம் (வடதிருநாகேஸ்வரம்)

**கேது-**

திருவொற்றியூர் படபக்கநாதர்.

**திருநாங்கூரை சுற்றியுள்ள கீழ் கண்ட வைனாவத்தலங்கலில் குறிப்பிட்ட கிரக ப்ரிதிக்காக வழிபடலாம்.**

**(திருநாங்கூர் திருப்பதிகள்)**

**சூரியன்:- (திருவெண் புருடோத்தமம்)**

இத்திருத்தலம் சீர்காழி ரயில் நிலையத்திற்கு கிழக்கே 10 கி.மீ தொலைவில் உள்ள திருநாங்கூருக்குள்ளேயே உள்ளது திருவண்புருடோத்தமம் என்னும் திருத்தலம்.

**சந்திரன் :- (திருமணிக்கூடம்)**

சீர்காழியிலிருந்து 10கி.மீ தூரத்தில் உள்ள திருநாங்கூர் எல்லையில் இருந்து கிழக்கே 1 கி.மீ தொலைவில் உள்ளது. திருமணிக்கூடம் என்னும் திருத்தலம்.

**செவ்வாய் :- (திருபார்த்தன் பள்ளி)**

சீர்காழியிலிருந்து 11 கி.மீ தூரத்தில் உள்து திருப்பார்த்தன் பள்ளி என்னும் சிற்றூர். திருவெண்காட்டிலிருந்து 3கி.மீ தொலைவில் உள்ளது.

**புதன் :- (திருகாவளம் பாடி)**

சென்னை– மயிலாடுதுறை ரயில் பாதையில் வைத்தீஸ்வரன் கோயில் ரயில் நிலையத்திலிருந்து கிழக்கே 4கி.மீ தூரத்தில் திருக்காவளம் பாடி அமைந்துள்ளது.

**குரு :- (திருமணி மாடக் கோயில்)**

சீர்காழியிலிருந்து 10 கி.மி தூரத்தில் உள்ள திருநாங்கூருக் குள்ளே திருமணி மாடக்கோயில் அமைந்துள்ளது.

**சுக்கிரன் :- (திருதெற்றியம்பலம்)**

சீர்காழியிலிருந்து 8 கி.மீ தூரத்தில் உள்ள திருநாங்கூருக்குள்ளேயே திருதெற்றியம் என்னும் திருத்தலம் அமைந்துள்ளது.

**சனி :- (திருவெள்ளக்குளம்)**

சீர்காழி ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கில் 8கி.மீ தொலைவில் அமைந்துள்ளது திருவெள்ளக்குளம் என்னும் திருத்தலம்.

**ராகு :- (திரு அரிமேய விண்ணகரம்)**

சீர்காழி ரயில் நிலையத்திற்கு கிழக்கே 10 கி.மீ தொலைவில் உள்ள திருநாங்கூருக்குள்ளேயே அமைந்துள்ளது திரு அரிமேய விண்ணகரம் என்னும் திருத்தலம். குடமாடு கூத்தர் என்று கூறினால் தான் பலருக்கும் தெரியும். இத்தலத்தில் ராகு, கேது ஆகிய இரண்டு கிரகங்களுக்கும் பரிகாரம் செய்யலாம்.

**கேது :- (திரு வைகுந்த விண்ணகரம்)**

சீர்காழியிலிருந்து 8 கி.மீ அமைந்துள்ளது திருவைகுந்த விண்ணகரம்என்னும்திருத்தலம்.இத்திருத்தலம் திருநாங்கூரு க்குள்ளே அமைந்துள்ளது. இங்கு கேதுவைத் தவிர சனித் கிரகத்திற்கும் பரிகாரம் செய்யலாம்.

**குளிகன் :- (திரு தேவனார் தொகை)**

சீர்காழி ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்கே 8 கி.மீ சீர்காழி திருவெண்காடு பேருந்து மார்க்கத்தில் திருவாலியில் இறங்கி முக்கால் மைல் வண்டியில் வரலாம். திருநாங்கூரிலிருந்து 4கி.மீ தூரத்தில் திருதேவனார் தொகை என்னும் திருத்தலம் அமைந்துள்ளது.

**நவக்கிரங்களும் பரிகாரம் செய்ய ஏற்றஸ்தலம் :-(திருசெம்பொன் செய்கோயில்)**

சீர்காழியிலிருந்து 10கி.மீ தூரத்தில் அமைந்துள்ள திருநாங்கூக்குள்ளேயே திருச்செம்பொன் செய் கோவில் அமைந்துள்ளது . இங்கு ஒன்பது கிரகங்களுக்கும் பரிகாரம் செய்யலாம் குறிப்பாக குருவிற்கு பரிகாரம் செய்யலாம்.

**தூத்துக்குடி மாவட்டத்தில் அமைந்துள்ள நவதிருப்பதிகளில் குறிப்பிட்ட கிரக ப்ரீதிக்காக வழிபடலாம்.**

**சூரியன் :- (ஸ்ரீவை குண்டம்)**

திருநெல்வேலி– திருச்செந்தூர் ரயில் பாதையில் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து ஸ்டேஷனிலிருந்து 1.5 மைல் தூரத்தில் இத்திருத்தலம் அமைந்துள்ளது. திருநெல்வேலியிலிருந்து பேருந்து வசதி உண்டு.

**சந்திரன் :- திருவரகுண மங்கை (நத்தம்)**

திருநெல்வேலி– ஸ்ரீ வைகுண்டம் ரயில் பாதையில் ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து கிழக்கே 2.5 கி. மீ தூரத்தில் திருவரகுணமங்கை என்னும் திருத்தலம் அமைந்துள்ளது. நத்தம் என்று கூறினால் தான் பலருக்கும் தெரியும்.

**செவ்வாய் :-(திருக்கோளூர்)**

தென் திருப்பேரையிலிருந்து ஆழ்வார் திருநகரி வரும் வழியில் சுமார்2.5 கி.மீதூரத்தில் தெற்கே ஒரு கிளைப் பாதையில் திரும்ப1/2 மைல் சென்று திருக்கோளூர் என்னும் திருத்தலத்தை அடையலாம்.

**புதன் :- (திருப்புளியங்குடி)**

திருவரகுண மங்கையிலிருந்து சுமார் முக்கால் மைல் தூரம் அதே பாதையில் சென்றால் திருப்புளியங்குடி என்னும் திருத்தலத்தை அடையலாம். ஸ்ரீவைகுண்டத்திலிருந்து 3 கி.மீ தொலைவில் இத்திருத்தலம் அமைந்துள்ளது.

**குரு :- திருக்குருகூர் ( ஆழ்வார் திருநகரி )**

ஸ்ரீவைகுண்டம்–திருச்செந்தூர்சாலையில் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து கிழக்கே 5கி.மீ தொலைவில் ஆழ்வார் திருநகரி என்னும் திருத்தலம் அமைந்துள்ளது.

**சுக்கிரன் :- (தென்திருப்பேரை)**

ஸ்ரீ வைகுண்டம் – திருச்செந்தூர் சாலையில் ஆழ்வார் திருநகரியிலிருந்து கிழக்கே 5கி.மீ தொலைவில் தென் திருப்பேரை என்னும் திருத்தலம் அமைந்துள்ளது.

**சனி :- ( பெருங்குளம்) திருக்குளந்தை**

திருப்புள்ளிங்குடியிலிருந்து அதே சாலையில் இன்னும் 9.5 கி.மீ சென்று பெருங்குளம் என்னும் திருத்தலத்தை அடையலாம்.

ஸ்ரீ வைகுண்டம் – தூத்துக்குடி சாலையில் பேட்மாறகரிலிருந்து சிவகளை வழியாகச் செல்ல்லாம்.

**ராகு :-( திருதொலைவில்லி மங்கலம் வடக்கு கோயில்)**

ஸ்ரீ வைகுண்டம் – தூத்துக்குடி சாலையில் திருப்புளியால் குடிக்கு கிழக்கே இரண்டு கி.மீ தொலைவிலுள்ள ஆயத்துறையில் இருந்து கால்வாய் ஓரமாக 7கி.மீ சென்று பாலம் வழியாக கால் வாயைக் கடந்து சென்று இத்திருத்தலத்தை அடையலாம் இரட்டை திருப்பதியால் இது முதல் கோயிலாகும்.

**கேது :- (திரு தொலைவில்லி மங்கலம் தெற்கு கோயில்)**

ஸ்ரீவைகுண்டம் – தூத்துக்குடி சாலையில் திருப்புளியங்குடிக்கு கிழக்கே இரண்டு கி.மீ தொலைவிலுள்ள ஆலயத்துறையில் இருந்து கால்வாய் ஓரமாக இரட்டைத்திருப்பதியில் இரண்டாவது கோயிலான இக்கோயிலை அடையலாம்.

**மற்ற நவகிரகஸ்தலங்கள் :-**

**(நவக்கிரகங்கள் வழிபட்ட ஸ்தலங்கள்)**

**சூரியன் :-**

1. தென்னாற்காடு மாவட்டம்– திருவரங்கம் அருகே ஐம்பை என்ற ஊரில் சூரியனுக்குத் தனிக்கோவில் உள்ளது.
2. கும்பகோணம் நாகேஸ்வர சுவாமி கோவிலில் சூரியனுக்கு தனிச் சன்னதி உள்ளது.
3. ஆந்திராவில் ஸ்ரீகாகுளம் அருகில் அரசவில்லியில் சூரிய நாராயணர் ஆலயம் உள்ளது.
4. ஒரிசாவில் உள்ள கோனார்க்கில் சூரியனுக்கு ஆலயம் உள்ளது.
5. விழுப்புரம் அருகிலுள்ள திருப்புறவார் பனங்காட்டூர்
6. தஞ்சையிலிருந்து திருவையாறு போகும் வழியில் அமைந்துள்ளது திருக்கண்டியூர் வீரட்டானம்.
7. பூம்புகார் அருகிலுள்ள சூரியனார் உச்சிகிளான் கோட்டம்.

**சந்திரன் :-**

1. ஆந்திர பிரதேசத்தில் உள்ள திருப்பதி
2. திருவாரூர்
3. குட வாசல் அருகில் உள்ள சந்திரசேகரபுரம்
4. திருக்கருகாவூர்
5. திருவிடை மருதூர் (கும்பகோணம் அல்லது மயிலாடுதுறை சாலையின் 7 கி.மீ தொலைவில் உள்ளது)
6. திருக்கோவலூர்
7. திருவான்மியூர்
8. திருக்கட்டளை
9. வடநாட்டில் உள்ள சோமநாதபுரம்.

**செவ்வாய் :-**

1. பழநி தண்டாயுதபாணி கோயில்
2. மாயவரம் அருகே உள்ள திருச்சிறுகுடி.
3. ஸ்ரீ முஷ்ணம்
4. திருப்புடை மருதூர்–சேரன் மகாதேவி திருநெல்வேலி சாலையில் உள்ள நடுக்கல்லூருக்குத் தெற்கே 1. கி.மீ தொலைவில் உள்ளது.
5. ஆறுபடை வீடுகள்.
6. பூவரசன்குப்பம், அபிஷேக பாக்கம், பரிக்கல், நாமக்கல், அத்திலி போன்ற ஊர்களில் உள்ள நரசிம்மர் கோவில்கள்.

**புதன்**

1. மதுரை மாநகரில் உள்ள மீனாட்சி ஆலயம்
2. திருப்புவனம்– (மதுரை அருகில் உள்ளது. மதுரையிலிருந்து 18 கி.மீ தொலைவில் உள்ளது)

**குரு :-**

1. திருச்செந்தூர்
2. திருத்தேவூர் (நாகப்பட்டினம் – திருவாரூர் சாலை)
3. தென் குடி திட்டை (கும்பகோணம் – தஞ்சாவூர் சாலை)
4. மயிலாடுதுறை
5. கோவிந்த மாடி அகரம்
6. பட்ட மங்களம் – (திருப்புத்தூர் , காரைக்குடி, சிவகங்கையி லிருந்து வரலாம்)
7. திருவஹீந்திரபுரம் (ஹயக்ரீவர் கோவில்)
8. புதுச்சேரி ராமகிருஷ்ணா நகரில் உள்ள ஹயக்ரீவர் கோவில்.
9. செட்டி புண்ணியத்தில் உள்ள ஹயக்ரீவர் கோவில்.

சுக்கிரன்

1. திருவெள்ளியங்குடி
2. திருநாவலூர் – (பண்ருட்டி அருகே உள்ளது)
3. ஸ்ரீரங்கம் ரங்கநாதர் கோயில்
4. தபசு மலை – (புதுக் கோட்டை அருகில் உள்ளது)

சனி :-

1. குச்சனூர் – (மதுரை மாவட்டம் உத்தமபாளையம் தாலுக்காவில் அமைந்துள்ளது)
2. ஆரணி ஏரிகுப்பத்தில் சனி பகவானுக்கு தனிச் சன்னதி உள்ளது.
3. விழுப்புரம் அருகே உள்ள கல்பட்டு
4. ஸ்ரீ வாஞ்சியம்– (நன்னிலம் அருகில் உள்ளது)
5. நாமக்கல் – (ரங்கநாதர் கோயில்)
6. திருக்கொள்ளிக்காடு
7. திருப்பரங்குன்றம் (மதுரை அருகே உள்ளது)
8. திருவானைக் காவல் (திருச்சி அருகே உள்ளது)
9. சோழ வந்தான்
10. கொடுமுடி (கரூர் – ஈரோடு பாதையில் உள்ளது)
11. திருச்செங்கோடு
12. திருவையாறு
13. ஏமாம் புலியூர்
14. சீவலப்பேரி (பாளையங்கோட்டை அருகே உள்ளது)

ராகு

1. திருப்பாம்புரம் – (கும்பகோணம் அருகில் உள்ளது)
2. காஞ்சி ஊரகம் ( காஞ்சி காமாட்சி கோயிலுக்கு அருகில்)
3. திருக்காளஹஸ்தி – (திருப்பதி அருகே உள்ளது)

4. திருமுருகன் பூண்டி– (திருப்பூர் – அவிநாசி சாலையில் 8கி.மீ தொலைவில் உள்ள)
5. சிதம்பரம் (தில்லை)
6. நாகேஸ்வர சுவாமிக் கோயில் – கும்பகோணம்
7. பாமணி – (மன்னார் குடியிலிருந்து 2கி.மீ தொலைவில் உள்ளது)
8. திருச்செங்கோடு – (ஈரோடு அருகில் உள்ளது)
9. சங்கரன் கோவில்– ( திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது)
10. நாகர் கோவில் – ( கன்னியாகுமாரி மாவட்டத்தில்)
11. மருத மலை – (கோவை அருகில் உள்ளது)
12. நாகப்பட்டினம் – (திருவாரூர் அருகில் உள்ளது)
13. பேரையூர் – நாகநாதசாமி கோயில் (புதுக்கோட்டை பொன்னராவதி சாலையில் உள்ளது.)
14. நயினார் கோயில் – (பரமக்குடி அருகில் உள்ளது ராமநாதபுரம் மாவட்டம்)
15. மானா மதுரை – (சிவகங்கை அருகில்)
16. திருச்சி– தத்தமங்கலம் பாம்பலம்மன் கோயில்
17. பாபநாசம் – தஞ்சாவூர் அருகில் உள்ளது.
18. வேதா ராண்யம்
19. அருப்புக்கோட்டை

(மேற்கண்டஸ்தலங்களில் கேதுவிற்கும் பரிகாரம் செய்யலாம்)

**கேது :-**

1. திருக்காள ஹஸ்தி
2. திருமுருகன் பூண்டியில் கேதுவுக்கு தனிச் சன்னதி உள்ளது.
3. காஞ்சிபுரம் – சித்திர குப்தர் கோவில்
4. திருவண்ணாமலை – சித்தர குப்தர் சன்னிதி
5. ராமேஸ்வரம்.

# 4. ராசிகளுக்குத் தகுந்தவாறு நவகிரக ஸ்தலங்களை தேர்ந்தெடுத்தல்

சூரியன் :-

| | | |
|---|---|---|
| மேசம் | – | திருவண்ணாமலை |
| ரிஷபம் | – | காஞ்சி ஏகாம்பரேஸ்வர் |
| மிதுனம் | – | சிதம்பரம் |
| கடகம் | – | சீர்காழி |
| சிம்மம் | – | சூரியனார் கோயில் |
| கன்னி | – | சங்கரன் கோயில் |
| துலாம் | – | திருநள்ளாறு |
| விருச்சிகம் | – | திருகாளஹஸ்தி |
| தனுசு | – | ஆலங்குடி |
| மகரம் | – | பேரூர் (கோயம்புத்தூர்) |
| கும்பம் | – | திருநாகேஷ்வரம் |
| மீனம் | – | ராமேஸ்வரம். |

சந்திரன் :-

| | | |
|---|---|---|
| மேசம் | – | திருவண்ணாமலை உண்ணாமுலையம்மன் |
| ரிஷபம் | – | காஞ்சி காமாக்ஷி அம்மன் |
| மிதுனம் | – | சிதம்பரம் சிவகாமி அம்மன் |
| கடகம் | – | சங்கரன் கோயில் கோமதி அம்மன் |
| சிம்மம் | – | நெல்லை காந்திமதி அம்மன் |
| கன்னி | – | கன்யாகுமரி பகவதி அம்மன் |
| துலாம் | – | மதுரை மீனாக்ஷி அம்மன் |
| விருச்சிகம் | – | காளஹஸ்தி ஞானாம்பிக்கை அம்மன் |
| தனுசு | – | பாபநாசம் உலகம்மை |

| | | |
|---|---|---|
| மகரம் | – | திருவானைக் காவல் அகிலாண்டேஸ்வரி |
| கும்பம் | – | திருக்கடையூர் அபிராமி |
| மீனம் | – | ராமேஸ்வரம் பர்வதவர்த்தினியம்மன். |

**செவ்வாய்:-**

| | | |
|---|---|---|
| மேசம் | – | பழனி |
| ரிஷபம் | – | திருப்பரங்குன்றம் |
| மிதுனம் | – | திருத்தனி |
| கடகம் | – | திருச்செந்தூர் |
| சிம்மம் | – | சுவாமி மலை |
| கன்னி | – | வள்ளியூர் |
| துலாம் | – | பழமுதிர்ச் சோலை |
| விருச்சிகம் | – | சிக்கல் |
| தனுசு | – | வைத்தீஸ்வரன் கோயில் |
| மகரம் | – | வயலூர் |
| கும்பம் | – | மருத மலை |
| மீனம் | – | கழுகுமலை. |

**புதன்:-**

| | | |
|---|---|---|
| மேசம் | – | திருநீர்மலை நரசிம்மர் (சென்னை அருகில்) |
| ரிஷபம் | – | காஞ்சி புரம் வரதாஜப்பெருமாள் |
| மிதுனம் | – | ஸ்ரீவில்லிப்புத்தூர் வடபத்ரசாயி |
| கடகம் | – | ஸ்ரீரங்கம், ரங்கநாதர் |
| சிம்மம் | – | உப்பிலியப்பன்கோவில் (கும்பகோணம் அருகில்) |
| கன்னி | – | திருப்பதி வேங்கடநாதன் |
| துலாம் | – | திருவெள்ளியங்குடி(கும்பகோணம்அருகில்) |

| | | |
|---|---|---|
| விருச்சிகம் | – | திருத்தண்கால் (திருத்தலங்கல்விருதுநகர் அருகில்) |
| தனுசு | – | திருவஹிந்தி புரம் ஸ்ரீஹயக்ரீவர் (கடலூர் அருகில்) |
| மகரம் | – | திருநரையூர் ( நாச்சியார் கோயில் அருகில்) |
| கும்பம் | – | திருகோஷ்டியூர் |
| மீனம் | – | திருவனந்தபுரம் பத்மநாப சுவாமி. |

குரு:-

| | | |
|---|---|---|
| மேசம் | – | திருவண்ணாமலைஅருணாச்சலேஸ்வரர் ஆலயத்தில் உள்ள தக்ஷிணா மூர்த்தி |
| ரிஷபம் | – | காஞ்சி ஏகாம்பரேஸ்வர் ஆலயத்தில் உள்ள தக்ஷிணா மூர்த்தி |
| மிதுனம் | – | சிதம்பரம் நடராஜர் கோயிலிலுள்ள தக்ஷிணாமூர்த்தி |
| கடகம் | – | திருச்செந்தூர் முருகன் கோயிலுள்ள தக்ஷிணாமூர்த்தி |
| சிம்மம் | – | கும்பகோணம் கும்பேஸ்வரர் ஆலயத்தில் உள்ள தக்ஷிணமூர்த்தி |
| கன்னி | – | சங்கரன் கோயில் தக்ஷிணமூர்த்தி |
| துலாம் | – | மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுள்ள தக்ஷிணமூர்த்தி |
| விருச்சிகம் | – | திருப்புடை மருதூர் தக்ஷிணமூர்த்தி (திருநெல்வேலி அருகில்) |
| தனுசு | – | ஆலங்குடி தக்ஷிணமூர்த்தி |
| மகரம் | – | திருவாணைக்காவல் ஜலகண்டேஸ்வரர் ஆலயத்தில் உள்ள தக்ஷிணமூர்த்தி |

| | | |
|---|---|---|
| கும்பம் | – | திருக்கடையூர் அமிர்தகடேஸ்வரர் ஆலயத்திலுள்ள தக்ஷிணமூர்த்தி |
| மீனம் | – | ராமேஸ்வரம் ராமநாத சுவாமி ஆலயத்திலுள்ள தக்ஷிணமூர்த்தி. |

**சுக்கிரன்:-**

| | | |
|---|---|---|
| மேசம் | – | திருக்கோளுர், கோளுர் வல்லி |
| ரிஷபம் | – | திருமாலிருஞ்சோலை சுந்தரவல்லி (வ்ருஷபாத்ரி) |
| மிதுனம் | – | திருக்கோட்டியூர் திருமாமகள் நாச்சியர் (திருமந்திர ரஹஸ்யம் வெளிப்பட்ட ஸ்தலம் |
| கடகம் | – | ஸ்ரீ ரங்கம் ரங்க நாச்சியார் |
| சிம்மம் | – | திருநாகேஸ்வரம் லட்சுமி |
| கன்னி | – | ஒப்பிலியப்பன் கோவில் பூமி நாச்சியர் |
| துலாம் | – | மதுரை திருக்கூடல் மதுர வல்லி நாச்சியார் |
| விருச்சிகம் | – | திருத்தண்கால் செங்கமலத் தாயார் |
| தனுசு | – | திருச்செம்பொன் செங்கோவில் அல்லிமாமலர் நாச்சியார் |
| மகரம் | – | திருக்கவித்தலம் ரமாமணி வல்லி |
| கும்பம் | – | திருக்குடைந்தை கோமள வல்லி |
| மீனம் | – | திருக்கச்சி –அத்திகிரி பெருந்தேவி தாயா |

**சனி:-**

| | | |
|---|---|---|
| மேசம் | – | ஆரணி ஏரிகுப்பம் |
| ரிஷபம் | – | திருப்பரங்குன்றம் |
| மிதுனம் | – | விழுப்புரம் அருகில் உள்ள கல்பட்டு |
| கடகம் | – | திருவானைக்காவல் |
| சிம்மம் | – | ஸ்ரீவாஞ்சியம் |

| | | |
|---|---|---|
| கன்னி | – | திருவையாறு |
| துலாம் | – | திருநள்ளாறு |
| விருச்சிகம் | – | திருக்கொள்ளிக்காடு |
| தனுசு | – | கொடுமுடி |
| மகரம் | – | திருச்செங்கோடு |
| கும்பம் | – | நாமக்கல் |
| மீனம் | – | குச்சனூர் |

ராகு:-

| | | |
|---|---|---|
| மேசம் | – | திருவேற்காடு கருமாரி |
| ரிஷபம் | – | சென்னை காளிகாம்பாள் |
| மிதுனம் | – | தில்லைக் காளி |
| கடகம் | – | சமயபுரம் மாரியம்மன் |
| சிம்மம் | – | கும்பகோணம் ஸ்ரீ படவேட்டு மாரிம்மன் |
| கன்னி | – | புன்னைநல்லூர் மாரியம்மன் |
| துலாம் | – | இருக்கன்குடி மாரியம்மன் |
| விருச்சிகம் | – | கோவை கோனியம்மன் |
| தனுசு | – | பண்ணாரி மாரியம்மன் |
| மகரம் | – | ஆமாத்தூர் (விழுப்புரம் ) வட்டப் பாறையம்மன் |
| கும்பம் | – | சேலம் கோட்டைமாரி |
| மீனம் | – | தொட்டியம் – மதுரை காளியம்மன் |

கேது:-

| | | |
|---|---|---|
| மேசம் | – | திருமுருகன் பூண்டி கூப்பிடு விநாயகர் |
| ரிஷபம் | – | காஞ்சி விகடசக்கர விநாயகர் |
| மிதுனம் | – | சிதம்பரம் திருமுறை காட்டிய விநாயகர் |

| | | |
|---|---|---|
| கடகம் | – | சீர்காழி ஆபத்து காத்த விநாயகர் |
| சிம்மம் | – | திருச்சிராபள்ளி உச்சி பிள்ளையார் |
| கன்னி | – | திருக்கருகாவூர் கற்பகவிநாயகர் |
| துலாம் | – | திருநள்ளாறு சொர்ண விநாயகர் |
| விருச்சிகம் | – | நாகப்பட்டினம் நாகாபரண பிள்ளையார் |
| தனுசு | – | திருவீழிமிழலை படிக்காசு விநாயகர் |
| மகரம் | – | குமாரவயலூர். பொய்யாக் கணபதி |
| கும்பம் | – | குடந்தை கீழ்கோட்டம் – கங்கை கணபதி |
| மீனம் | – | திருப்புறம்பயம் பிரளயங்காத்த விநாயகர். பிள்ளையார்பட்டி கற்பக விநாயகர். |

ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் அந்த ராசியில் நிற்கின்றதோ, அந்த ராசிக்குரிய ஸ்தலத்தை ரேர்ந்தெடுத்து, அங்கு சென்று வழிபட தோஷ பரிகாரம் ஏற்படும். உதாரணமாக தோஷத்தை ஏற்படுத்தும் செவ்வாய் மீன ராசியில் நின்றால் கழுகு மலை முருகன் ஆலயம் சென்று வழிபட வேண்டும். ஒவ்வொரு கிரகத்திற்கும் கொடுக்கப்பட்டுள்ள ராசித்தலங்கள் கிரக காரகத்துவம், ராசி காரகத்துவம் இவைகளை அடிபடையாக கொண்டு நிர்ணயம் செய்யப்பட்டவையாகும்.



## 5. ராசிகளுக்குத் தகுந்தவாறு தானப் பொருட்களைத் தேர்ந்தெடுத்தல்

ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் எந்தராசியில் நிற்கிறதோ அந்த ராசிக்குத்தகுந்தவாறு தானப்பொருட்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் தாது ராசியில் நின்றால் , தங்கம், வெள்ளி, நவரத்தினம் இவைகளைத் தானம் செய்ய வேண்டும்.

ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் மூல ராசியில் நின்றால், நவதானியம், விருட்சம், மலர், காய், கனி இவைகளை தானம் செய்ய வேண்டும்.

ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் ஜீவராசியில் நின்றால், பசு, எருமை, காளைமாடு, சேவல், கோழி , ஆடு போன்ற ஜீவராசிகளை தானம் செய்யவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| ஜீவன் | தாது | மூலம் | ஜீவன் |
| மூலம் | | | தாது |
| தாது | | | மூலம் |
| ஜீவன் | மூலம் | தாது | ஜீவன் |

| | | | |
|---|---|---|---|
| நீர் | நெருப்பு | நிலம் | காற்று |
| காற்று | | | நீர் |
| நிலம் | | | நெருப்பு |
| நெருப்பு | நீர் | காற்று | நிலம் |

ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் நிலராசியில் நின்றால் நவரத்தினங்களைத் தானம் செய்ய வேண்டும்.

ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் நீர் ராசியில் நின்றால் நவதானியங்களைத் தானம் செய்யவேண்டும்.

ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் நெருப்பு ராசியில் நின்றால் நவகிரகங்களுக்குரிய உலோகங்களைத் தானம் செய்ய வேண்டும்.

ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் காற்று ராசியில் நின்றால் ஞான தர்னம் செய்ய வேண்டும். கோவில்களுக்கு ஒலி பெருக்கி, மேள வாத்தியம் தானமும் செய்யலாம்.

**நவகிரக தானப் பொருட்கள்**

**சூரியன்:-**

மேசம் – தாமிர பாத்திரம் தானம்
ரிஷபம் – கோதுமை தானம்
மிதுனம் – மயில் இறகு தானம்
கடகம் – நெய் தானம்
சிம்மம் – வில்வ இலைகளை சிவாலயத்திற்கு தானம்செய்தல்
கன்னி – பாம்பு புற்றுகளில் பால்விடுதல்
துலாம் – சந்தனம் தானம்
விருச்சிகம் – தாமரை மலர் தானம்
தனுசு – காளைமாடு தானம்
மகரம் – மாணிக்கக் கல் தானம்
கும்பம் – மிளகு தானம்
மீனம் – மீன்களுக்கு கோதுமை சாதம் போடுதல்.

**சந்திரன்:-**

மேசம் – ஈய பாத்திரம் தானம்
ரிஷபம் – அரிசி தானம்
மிதுனம் – வாத்து தானம்
கடகம் – உப்பு தானம்
சிம்மம் – முருங்கைக்காய் தானம்

கன்னி – பசு தானம்

துலாம் – சாம்பிரணி தானம்

விருச்சிகம் – அல்லி மலர் தானம்

தனுசு – கோழி தானம்

மகரம் – முத்து தானம்

கும்பம் – தேங்காய் தானம்

மீனம் – மீன்களுக்கு அரிசிசாதம் போடுதல்

**செவ்வாய்:-**

மேசம் – செம்புப்பாத்திரம் தானம்

ரிஷபம் – துவரை தானம்

மிதுனம் – சேவல் தானம்

கடகம் – மோர் தானம்

சிம்மம் – கத்தரிக்காய் தானம்

கன்னி – ஆடுதானம் (வெள்ளாடு)

துலாம் – குங்குமம் தானம்

விருச்சிகம் – செண்பக மலர் தானம்

தனுசு – குதிரை தானம்

மகரம் – பவளம் தானம்

கும்பம் – பாக்கு தானம்

மீனம் – மீன்களுக்கு துவரை கலந்த சாதம் போடுதல்

**புதன்:-**

மேசம் – பித்தளைப்பாத்திரம் தானம்

ரிஷபம் – பச்சைப்பயிறு தானம்

மிதுனம் – குரங்குகளுக்கு பச்சை வாழைப்பழங்கள் வாங்கித் தருதல்

கடகம் – பாதரச மணி தானம்
சிம்மம் – துளசி இலைகள் தானம்
கன்னி – காடை தானம் (பறவை)
துலாம் – கற்பூரம் தானம்
விருச்சிகம் – மரிக்கொழுந்து தானம்
தனுசு – பசுதானம்
மகரம் – மரகதக் கல் தானம்
கும்பம் – வெற்றிலை தானம்
மீனம் – மீன்களுக்கு பச்சை பயிறு கலந்த சாதம் போடுதல்.

குரு:-

மேசம் – தங்க ஆபரண தானம்
ரிஷபம் – கடலை தானம்
மிதுனம் – மயில் இறகு தானம்
கடகம் – ஔஷதி தானம் (மருந்து தானம்)
சிம்மம் – சோளம் தானம், மஞ்சள் தானம்
கன்னி – யானைகளுக்கு மஞ்சள் வாழைப்பழம் வாங்கித் தருதல்
துலாம் – ஆம்பல் தானம்
விருச்சிகம் – முல்லை மலர் தானம்
தனுசு – பசு தானம்
மகரம் – புஷ்ப ராகக் கல் தானம்
கும்பம் – பலாப்பழம் தானம்
மீனம் – மீன்களுக்கு கடலைப் பொடி கலந்த சாதம் போடுதல்

**சுக்கிரன்:-**

| | | |
|---|---|---|
| மேசம் | – | வெள்ளிப்பாத்திரம் தானம் |
| ரிஷபம் | – | மொச்சை தானம் |
| மிதுனம் | – | காதல் பறவை தானம் |
| கடகம் | – | சர்க்கரை தானம் |
| சிம்மம் | – | மாம்பழம் தானம் |
| கன்னி | – | குதிரை தானம் |
| துலாம் | – | லவங்கம் தானம் |
| விருச்சிகம் | – | வெண் தாமரை மலர் தானம் |
| தனுசு | – | காளை மாடு தானம் |
| மகரம் | – | வைரக்கல் தானம் |
| கும்பம் | – | பப்பாளிப்பழம் தானம் |
| மீனம் | – | மீன்களுக்கு மொச்சைப்பயிறு மாவு கலந்த சாதம் போடுதல். |

**சனி:-**

| | | |
|---|---|---|
| மேசம் | – | இரும்புப் பாத்திரம் தானம் |
| ரிஷபம் | – | எள் தானம் |
| மிதுனம் | – | காகத்திற்கு அன்னமிடுதல் |
| கடகம் | – | எருமைப்பால் தானம் |
| சிம்மம் | – | கேழ்வரகு தானம் |
| கன்னி | – | பன்றி தானம் |
| துலாம் | – | கருங்காலி தானம் |
| விருச்சிகம் | – | கருங்குவளை மலர் தானம் |
| தனுசு | – | எருமை தானம் |
| மகரம் | – | நீலக்கல் தானம் |
| கும்பம் | – | நொங்கு தானம், பனைமரம் தானம் |

மீனம் – மீன்களுக்கு எள்பொடி கலந்த சாதத்தைப் போடுதல்.

ராகு:-

மேசம் – இரும்புப்பாத்திரம் தானம்
ரிஷபம் – உளுந்து தானம்
மிதுனம் – சிட்டுக்குருவிகளுக்கு கேழ்வரகு அளித்தல்
கடகம் – கழுதைப்பால் தானம்
சிம்மம் – எலுமிச்சைப்பழம் தானம்
கன்னி – கறுப்புக்கோழி தானம்
துலாம் – கடுகு தானம்
விருச்சிகம் – மந்தாரைப் புஷ்ப்ம் தானம்
தனுசு – எருமை தானம்
மகரம் – கோமேதகக் தானம்
கும்பம் – நெல்லிக்காய் தானம்
மீனம் – மீன்களுக்கு உளுந்து சாதம் போடுதல்.

கேது:-

மேசம் – வெண்கல பாத்திரம் தானம்
ரிஷபம் – கொள்ளுதானம்
மிதுனம் – புறாதானம்
கடகம் – ஔஷரி தானம்(மருந்து தானம்)
சிம்மம் – அத்திப்பழம் தானம்
கன்னி – செம்மறி ஆடு தானம்
துலாம் – செந்தூரம் தானம்
விருச்சிகம் – செவ்வல்லி மலர் தானம்
தனுசு – சிவப்பு நிற சேவல் தானம்
மகரம் – வைடூர்யக் கல்தானம்

கும்பம் – புடலங்காய் தானம்

மீனம் – மீன்களுக்கு கொள்ளுப்பொடி கலந்த சாதம் போடுதல்.

ஜாதகத்தில் தோஷத்தை ஏற்படுத்தும் கிரகம் எந்த ராசியில் நிற்கின்றதோ, அந்த ராசிக்குரிய தானப் பொருட்களைத் தேர்ந்தெடுத்து தானங்கள் செய்ய வேண்டும். உதாரணமாக தோஷத்தை ஏற்படுத்தும் சூரியன் மகர ராசியில் நின்றால் சூரியனுக்குரிய மாணிக்க கல்லை தானம் செய்ய வேண்டும். தோஷத்தை ஏற்படுத்தும் கேது ரிஷப ராசியில்நின்றால் கொள்ளுதானம் செய்ய வேண்டும்.



# 6. வியாசர் அருளிய நவக்கிரக ஸ்தோத்ரம்

ஜபாகுஸீம ஸங்காசம் காச்ய பேயம் மஹாத்ய
தமோரிம் ஸர்வபா பக்னம் ப்ரணதோஸ்மி திவாகரம்

1. செம்பருத்திப் பூப்போல் பிரகாசிப்பவரும் காச்யபமுனிவரின் புதல்வரும் மிகுந்த காந்தியுடையவரும் இருட்டின் சத்துருவும் ஸகல பாபங்களையும் போக்குகிறவருமான சூரியனை வணங்குகிறேன்.

ததிசங் துஷாராபம் க்ஷீரார்ணவ ஸமுத்பவம்
நமாமி சசி நம் ஸோமம் சம்போர் மகுட பூஷணம்

2. தயிர், சங்கு, பனி போன்ற நிறமுள்ளவரும் பாற்கடலில் உதித்தவரும் பரமேச்வரனின் கீரிடத்தை அலங்கரிப் பவருமான சந்திரனை வணங்குகிறேன்.

தரணி கர்ப்பஸம் பூதம் வித்யுத் காந்தி ஸமப்ரம்
குமாரம் சக்தி ஹஸ்தம்ச மங்கள ப்ரணமாம்யகம்

3. பூமியின் குமாரரும் மின்னலைப் போல் பிரகாசிப் பவரும குமாரனும் சக்தியை கையில் உடையவருமான அங்காரகனை நமஸ்கரிக்கிறேன்.

ப்ரியங்கு கலிகா சீயாமம் ரூம்பணாப்ர திமம் புதம்
ஸௌம்யம் ஸெம்ய குணோபேதம் தம்புதம் ப்ரணமாம்.

4. ஞாழல் மொட்டு போன்ற கருநிற முள்ளவரும் உவமையில்லாத ரூபமுடையவரும் ஞானஸ் வரூபரும் சந்திரபுத்தி சாந்த குணங்கள் உடையவருமான அந்த புதனை நமஸ்கரிக்கிறேன்.

தேவாநாம்ச ரிஷிணாம்ச குரும் காஞ்ன ஸந்நிப்ம்
வத்ந நீயம் த்ரிலோகா நாம் தந்தமாமி ப்ருஹஸ்பதிகம்

5. தேவர், ரிஷிகளுக்கு ஆசார்யரும் ஸ்வர்ணகாந்தி உடையவரும் மூவுலகத்து அதிபதியான அந்த குருவை நமஸ்கரிக்கிறேன்.

ஹிமகுந்த ம்ருணாளாபம் தைத்யநாம் பரமம் குரும்
ஸர்வ சாஸ்ர் ப்ரவக்தாரம் பார்க்கவம் ப்ரணமாம் யஹ ம்

6. பனி, தும்பை, தாமரைத்தண்டு போன்ற நிறமுள்ளவரும் அசுரர்களுக்கு குருவாயும் ஸகல சாஸ்திரங்களை உணர்ந்தருமான ப்ருகுவின் குமாரரை நான் நமஸ்கரிக்கிறேன்.

நீலாஞ்ஜன ஸமாபாஸம் ரவிபுத்ரம் யமாக்ரஜம் .
சாயா மார்த்தாண்ட ஸம்பூதம் தந்நமாமி சனைஸ்சரம்

7. நீலமை போன்று பிரகாசிப்பவரும் ஸீர்யனுடைய புத்ரரும் யமனுக்கு மூத்தவரும் சாயா ஸீர்யன். இவர்களின் குமாரருமான அந்த சனைஸ்சரனை நமஸ்கரிக்கிறேன்.

அர்த்த காயம் மஹாவீர்யம் சந்தரா தித்ய விமர்த்தனம்
ஸிம்ஹிகா கர்ப்ப ஸம்பூதா தம்ரஹீம் ப்ரணமாம்யஹம்

8. பாதி சரீரமுள்ளவரும் அதி வீரரும் சந்திரசூரியனை கலக்க மடையச் செய்பவரும் ஸிம்ஹிகையின் கர்ப்பத்தில் தோன்றியவருமான அந்த ராகுவை நான் வணங்குகிறேன்.

பலாச புஷ்ப ஸ்ங்காசம் தாரகாக்ரஹ மாய்தகம்
ரௌதீரம் ரௌத்ராத் மகம் கோரம், தம்கேதும் ப்ரணமாம்யஹம்

9. பலாச புஷ்ப போல் பிரகாசிப்பவரும் நக்ஷத்திரங்களுக்கு தலைமையானவரும் ருத்ரகுமாரரும் பயங்கரமான அந்த கேதுவை நான் வணங்குகிறேன்.

# நவக்கிரக காயத்ரி

**சூரியன்:-**

அச்வத்வஜாய வித்மஹே பாச ஹஸ்தாய தீமஹி
தன்னோ சூர்ய ப்ரசோதயாத்

**சந்திரன்:-**

பத்மத்வஜாய வித்மஹே ஹேமரூபாய தீமஹி
தன்னோ ஸோம ப்ரசோதயாத்

**செவ்வாய்:-**

வீரத்வஜாய வித்மஹே விக்ன ஹஸ்தாய தீமஹி
தன்னோ பௌம ப்ரசோதயாத்

**புதன்:-**

கஜத்வாஜய வித்மஹே சுகஹஸ்தாய தீமஹி
தன்னோ புத ப்ரசோதயாத்.

**குரு:-**

விருஷபத்வஜாய வித்மஹே க்ருணி ஹஸ்தாய தீமஹி
தன்னோ குரு ப்ரசோதயாத்

**சுக்கிரன்:-**

அச்வத்வஜாய வித்மஹே தனுர் ஹஸ்தாய தீமஹி
தன்னோ சுக்ர ப்ரசோதயாத்

**சனி:-**

காகத்வஜாய வித்மஹே கட்க ஹஸ்தாய தீமஹி
தன்னோ மந்த ப்ரசோதயாத்

**ராகு:-**

நகத் வஜாய வித்மஹே பத்ம ஹஸ்தாய தீமஹி
தன்னோ ராகு ப்ரசோதயாத்

**கேது:-**

அச்வத்வஜாய வித்மஹே சூல ஹஸ்தாய தீமஹி
தன்னோ கேது ப்ரசோதயாத்

## நவகிரக காய்த்ரி (வேறு)

**சூரியன் :-**

பாங்கராய வித்மஹே மஹத்யுதிகராய தீமஹி
தன்னோ ஆதித்ய: ப்ரசோதயாத்

**சந்திரன்:-**

நிசாகராய வித்மஹே சுதா ஹஸ்தாய தீமஹி
தன்னோ சந்த்ர: ப்ரசோதயாத்.

**செவ்வாய்:-**

அங்காரகாய வித்மஹே ரக்த வர்ணாய தீமஹி
தன்னோ பௌம: ப்ரசோதயாத்.

**புதன்:-**

ரௌகிணேயாய வித்மஹே சந்த்ர புத்ராய தீமஹி
தன்னோ ஸௌம்ய: ப்ரசோதயாத்.

**குரு:-**

ஆங்கீரசாய வித்மஹே வாகீசாய தீமஹி
தன்னோ ஜீவ: ப்ரசோதயாத்

**சுக்கிரன்:-**

பார்கவாய வித்மஹே வித்யாதீசாய தீமஹி
தன்னோ சுக்ர: ப்ரசோதயாத்.

**சனி:-**

சனைச்சராய வித்மஹே சாயா புத்ராய தீமஹி
தன்னோ மந்த: ப்ரசோதயாத்

**ராகு:-**

ஸைம்ஹிகேயாய வித்மஹே தூம்ர வர்ணாய தீமஹி
தன்னோ ராஹு: ப்ரசோதயாத்

**கேது:-**

ப்ரம்ம புத்ராய வித்மஹே சித்ர வர்ணாய தீமஹி
தன்னோ கேது: ப்ரசோதயாத்.

# நவக்கிரக ஸ்தோத்திரம்

**காப்பு:-**

மண்ணுள் உயிர்கட்கு அனைத்தும் மாறாது அளித்து நல
நண்ணு நவக்கிரக நண்பு சொலத் – தண்ணுலவு
திங்கள் அணி தங்கும் உயர் செஞ்சடையார் உள் மகிழ்செய்
கங்கை அருள் ஐங்கரனார் காப்பு.

**சூரியன்:-**

காசினியிருளை நீக்கும் கதிர் ஒளி ஆகி எங்கும்
பூசனை உலகோர் போற்றப் புசிப்பொடு சுகத்தை நல்கும்
வாசி ஏழுடைய தேர்மேல் மகாகிரி வலமாய் வந்த
தேசிகா எனை ரட்சிப்பாய் செங்கதிரவனே போற்றி!

**சந்திரன்:-**

அலைகடல் அதனில் நின்றும் அன்று வந்து உதித்தபோது
கலைவளர் திங்களாகிக் கடவுள் எவரும் ஏத்தும்
சிலை முதல் உமையாள் பங்கன் செஞ்சடைப் பிறையாய் மேரு
மலை வலமாக வந்த மதியமே போற்றி! போற்றி!

**செவ்வாய்:-**

வசன நல்தைர்யத்தோடு மன்னவர் சபையில் வார்த்தை
புஜபல பராக்ர மங்கள் போர்தனில் வெற்றி ஆண்மை
நிஜமுடன் அவரவர்க்கு நீள் நிலம் தனில் அளிக்கும்
குசன் நில கோனாம் செவ்வாய் குரைகழல் போற்றி! போற்றி!

**புதன்:-**

மதன நூல் முதல் நான்கு மறை புகல் கல்வி மானம்.
விதமுடன் அவரவர்க்கு விஞ்சைகள் அருள்வோன் திங்கள்
சுதன் பசு பாரி பாக்கியம் சுகம் பல கொடுக்க வல்லான்
புதன் கவி புலவன் சீர்மால் பொன்னடி போற்றி! போற்றி!

குரு:-

மறைமிகு கலைநூல் வல்லோன் வானவர்க்கு அரசன் மந்திரி
நறை சொரி கற்பகப் பொன் நாட்டினுக்கு அதிபனாகி
நிறைதனம் சிவிகை மண்ணில் நீடுபோகத்தை நல்கும்
இறையவன் குரு வியாழன் இருமலர்ப் பாதம் போற்றி!

சுக்கிரன்:-

மூர்க்கவான் சூரன் வாணன் முதலினோர் குருவாய் வையம்
காக்க வான் மழை பெய்விக்கும் கவிமகள் கனகம் ஈவோன்
தீர்க்க வானவர்கள் போற்றச் செத்தவர் தமை எழுப்பும்
பார்க்கவன் சுக்கிரன் தன் பாதபங்கயங்கள் போற்றி!

சனி:-

முனிவர்கள் தேவரேமும் மூர்த்திகள் முதலினோர்கள்
மனிதர்கள் வாழ்வும் உன்றன் மகிமையது அல்லால் உண்டோ
கனிவுற தெய்வம் நீயே கதிர்சேயே காகம் ஏறுஞ்
சனியனே உனைத் துதிப்பேன் தமியனேற்கு அருள் செய்வாயே!

ராகு:-

வாகுசேர் நெடுமான் முன்னம் வானவர்க்கு அமுதம் ஈயப்
போகும் அக்காலை உன்றன் புணர்ப்பினால் சிரமே அற்றுப்
பாகுசேர் மொழியாள் பங்கன் பரன்கையில் மீண்டு பெற்ற
ராகுவே உனைத் துதிப்பேன் ரட்சிப்பாய்! ரட்சிப்பாயே!

கேது:-

பொன்னையின் னுரத்தில் கொண்டோன் புலவர்தம் பொருட்டால் ஆழி
தன்னையே கடந்து முன்னம் தண்அமுது அளிக்கல் உற்ற
பின்னை நின் கரவால் உண்ட பெட்டினில் சிரம் பெற்று உய்ந்தாய்
என்னை ஆள் கேதுவே இவ்விரு நிலம் போற்றத்தானே!

**பொது:-**

சூரியன், சோமன் , செவ்வாய் , சொற்புதன், வியாழன், வெள்ளி
காரியும், ராகுகேது கடவுளர் ஒன்பானாமத்
தாரியில் சக்கரத்தைப் தரித்திரர் பூசித்தாலும்
பாரினில் புத்திரர் உண்டாம் பாக்கியம் நல்கும் தானே!

## நவநாயகர்கள் போற்றி பாமாலை

**சூரியன்:-**

உலகத்தின் இருளைப் போக்கி ஒளியினை வழங்கும் தேவே
பலருமே தொழுது போற்றும் பகலவா அருள் வழங்க
குலவிடும் வாசித் தேரில் குதிரைகள் ஏழு பூட்டி
உலாவரும் ஆதவா நின் உயர்கழல் போற்றி போற்றி

**சந்திரன்:-**

பாற்கடல் கடைந்த போது பட்டொளி கதுவத்தோன்றி
போற்றுவோர் தொழுவே நிற்கும் பொன்மய சோம தேவா
ஏற்றமும் உடைய கோவே இமகிரி வலமாய் வந்து
தோற்றமே நல்கும் சோம தேவனே போற்றி போற்றி

**செவ்வாய்:-**

சொல்லுக்கு வலிமை நல்கி தைரியம் ஆண்மை வீரம்
நல்லவை அனைத்தும் நல்கி நலிவெலாம் போக்கி வைக்கும்
வல்லதோர் சக்தி கையில் வைத்துமே அருள் வழங்கும்
அல்லல்கந்தமை அகற்றும் அங்காரக போற்றி போற்றி

**புதன்:-**

திங்களின் சுதனாம் தேவா சுகமெலாம் வழங்கும் நேயா
தங்கிடும் ஞானம், விஞ்சை தமர்களுக் கருளும் கோவே
எங்கிலும் சாந்தம் கொண்டு ஈடில்லா புலவனான
மங்கள புதனாம் தேவன் மலரடி போற்றி போற்றி

குரு:-

வேத நூல் சாஸ்திரம் மேன்மையை அறிந்தோனாகி
சாதனையால் கற்பகத்தனிநாட்டின் இறைவன் ஆகி
சோதியாய் குருவு மாகி சொர்க்கத்தை மண்ணில் நல்கும்
ஆதியாம் குருவே நின்தாள் அடைக்கலம் போற்றி போற்றி

சுக்கிரன்:-

பிருகுவின் சுதனே யானான் பேரரக்கரின் குருவாய் மண்ணில்
தருகின்ற மழையுமாகி அதை தடுப்பவன் தானே யாகி
கருவன விளங்கும் சாத்திரம் கற்றவன் தானு மான
பெரியவன் சுக்ராச் சாரி பொன்னடி போற்றி போற்றி

சனி:-

வள்ளலாய் கொடுமை செய்யும் மன்னனாய் எவர்க்கும் செல்வம்
அள்ளியே கொடுப்போனாகி அனைவரும் துதிக்க நின்று
தெள்ளிய தேவர் மூவர் தெளிந்திட நடுங்க வைக்கும்
கள்ளமிங் சனிச்சரண் கழல்களே போற்றி போற்றி

ராகு:-

அமுத்திற்காக தன் சிரம் அற்றவன் ஆனபோதும்
விமலனால் விரமும் பெற்று வியத்தகு பலமும் பெற்று
வெம்மை சேர் கதிரோன் திங்கள் வெருண்டிட செய்யவல்ல
செம்மை சேர் ராகுதேவன் திருக்கழல் போற்றி போற்றி

கேது:-

வானவர் நடுவில் நின்று வார்கடல் அமுதமுண்டு
தான் சிரம் அற்றபோதும் தனிச்சிரம் உடைய கேது
வானமீன்தன்னில் தனிவளர் அரசு ஆன தேவன்
தேன் கமழ் கேது தேவன் திருக்கழல் போற்றி போற்றி.

**பொது:-**

நவனெத்திகழுகின்ற நாயகர் தம்மை நாளும்
த்வநெறி தவறிடாமல் சந்ததம் துதி செய்வோர்கள்
பவவினை அனைத்தும் நீங்கி பாரினில் வாழ்வாரென்றே
சிவபிரான் அருளினாலே கவி செப்பினான் செந்தமிழோன்.

## நவக்கிரக வாழ்த்து

**சூரியன்:-**

வாழி பகல் செய்வோன் வாழி ஒளி உருவன்
வாழியோர் ஆழித்தேர் மன்னுசுடர் – வழியரோ
ஞாலம் விழிதிறப்ப நல்லோர் புகழுரைப்பக்
காலம் விளக்கும் கதிர்.

**சந்திரன்:-**

தண்ணென் நிலவால் சராசரத்துக் கின்புதவித்
கண்ணெகிழும் பூங்குவளை கட்டவிழ்த்து – விண்ணவர்கள்
ஆரமுதம் உண்ண அருளோடோளி பரப்பிச்
சீறுருவான் திங்கட்புத் தேள்.

**செவ்வாய்:-**

செங்கண்ணன், செம்மேனிச் செல்வன் செம்மாலையிளான்
அங்கையில் வேல், சூலம் , அடற்கதைகொள்ள மங்கலத்தான்
மோகந்த தகரேறும் மூர்த்தி நிலமகட் குத்
தூது காதற்சேய் அங்காரகன்

**புதன்:-**

புந்தி வலி சேரப் புரிவான் பொன் மேனியினான்
சந்திரன் சேய் வாள் பரிசை தாங்கு கதை – உந்துகையான்
வெம்புரவி ஊர்தியான் மேனாள் இளை தழுவும்
அம்புதன் என்றோதும்அவன்.

**குரு:-**

வாசவனார் போற்று குரு வாக்குக் கொரு தலைவன்
தேசுறு பொன் போன்ற திருமெய்யன் – மாசில் அக்க
மாலை தண்டம் குண்டிகை சின் முத்திரைகை வைத்த குண
சீலன் வியாழனென்று தேர்

**சுக்கிரன்:-**

வல்லவுணர் தம் குரவன் மாய்ந்தார் உயிர்பெறவே
சொல்லு மனு வை அறிவான்; சுக்கிரன் என்றெல்லவரும்
சாற்றும் பெரியான்; சடை முடியான்; மாரிக்கோள்
போற்றும் வெள்ளி என்றே புகல்.

**சனி:-**

முனிவர்கள் தேவர் ஏனை மூர்த்திகள் முதலானோர்கள்
மனிதர்கள் சகல, வாழ்வுன் மகிமையல்லால் வேறுண்டோ
கனிவுள தெய்வம் நீயே கதிர்சேயே, காகம் ஏறும்
சனியனே உனைத்துதித்தேன், தமியனேற் கருள் செய்வாயே.

**ராகு:-**

கரவின் அமுதுண்டான், கார்நிறத்தான், மேனி
அரவம் முகம் அமரன் ஆனான் – மருவுமுறம்
ஆகும் இருக்கையான்; அஞ்சு தகு தோற்றத்தான்
ராகு நிழற்கோளென் திசை.

**கேது:-**

பொன்னங் கிரி இடமாப் போதுவான்; மோகினியாள்
முன்னம் தலையிழந்த மூர்த்தியான் – மன்னுகையில்
மோதுகதை அஞ்சல் உள்ளான் மூண்ட கருநிறத்தான்
கேது என்று சொல்வர் கிளர்ந்து.

# நவக்கிரக பாராயணங்கள்

**சூரியன்:-**

ஆதித்ய ஹ்ருதயம், ஸ்ரீ ருத்ரம், சூரிய அஷ்டடோத்திரம்.

**சந்திரன்:-**

சௌந்தர்ய லஹரி, லலிதா சக்ஸ்ர நாமம், சந்திர அஷ்டோத்திரம்.

**செவ்வாய்:-**

கந்த சஷ்டி கவசம், செவ்வாய் அஷ்டோத்திரம், நரசிம்மம் ஸ்தோத்திரம்

**புதன்:-**

விஷ்ணு சகஸ்ர நாமம், நாலாயிர திவ்ய பிரபந்தம், புத அஷ்டோத்திரம், சரஸ்வதி அஷ்டோத்திரம்.

**குரு:-**

தக்ஷிணா மூர்த்தி ஸ்தோத்திரம், ஹயக்ரீவ ஸ்தோத்திரம், குரு அஷ்டோத்திரம்

**சுக்கிரன்:-**

அஷ்டலக்ஷ்மி ஸ்தோத்திரம் , சக்கிர அஷ்டோத்திரம், மகா லக்ஷ்மி அஷ்டகம்.

**சனி:-**

ருத்ர சூத்தம், சனீஸ்வரகவசம், சனி ஸ்தோத்திரம், சனி அஷ்டோத்திரம்

**ராகு:-**

துர்கா கவசம், ராகு அஷ்டோத்திரம்.

**கேது:-**

ஹனுமான் சாலிசா, கணேச ஸ்தோத்திரம், கேது அஷ்டோத்திரம்.

# நவக்கிரக போற்றி பாமாலை

**சூரியன்:-**

சீலமாய் வாழ சீரருள் புரியும்
ஞாலம் புகழும் ஞாயிறே போற்றி
சூரியா போற்றி சுதந்திரா போற்றி
வீரியா போற்றி வினைகள் களைவாய்

**சந்திரன்:-**

எங்கள் குறைகள் எல்லாம் தீர்க்கும்
திங்களே போற்றி திருவருள் தருவாய்
சந்திரா போற்றி சற்குரு போற்றி
சங்கடம் தீர்க்கும் சதுரா போற்றி

**செவ்வாய்:-**

சிறப்புறு மணியே செவ்வாய் தேவே
குறைவிலாது அருள் வாய் குணமுடன் வாழ
மங்களச் செவ்வாய் மலரடி போற்றி
அங்காரகனே என் அவதிகள் நீக்கு

**புதன்:-**

இதமுறு வாழ இன்னல்கள் நீக்கு
புதபகவானே பொன்னடி போற்றி
பதந்தந்தருள்வாய் பண்ணொளி யானே
உதவியே அருளும் உத்தமா போற்றி

**குரு:-**

குணமிகு வியாழ குரு பகவானே
மணமுள வாழ்வு மகிழ்வுடனருள் வாய்
ப்ரகஸ்பதி வியாழ பரகுரு நேசா
க்ரஹ தோஷமின்றி கடாக்ஷித் தருவாய்.

**சுக்கிரன்:-**

சுக்கிர மூர்த்தி சுபமிக ஈவாய்
வக்கிர மின்றி வரமிகு தருவாய்
வெள்ளிச் சுக்ர வித்தக வேந்தே
அள்ளிக் கொடுப்பாய் அடியார்க்கருளே

**சனி:-**

சங்கடந் தீர்க்கும் சனி பகவானே
மங்கலம் பொங்க மனம் வைத்தருள்வாய்
சச்சரவின்றி சாகா நெறியில்
இச்செகம் வாழ இன்னருள் தா! தா!

**ராகு:-**

அரவெனும் ராகு அய்யனே போற்றி
கரவா தருள்வாய் கஷ்டங்கள் நீக்கி
ஆகவருள் புரி அனைத்திலும் வெற்றி
ராகு கனியே ரம்யா போற்றி

**கேது:-**

கேது தேவே கீர்த்தித் திருவே
பாதம் போற்றி பாபம் தீர்ப்பாய்
வாதம் வம்பு வழக்குகள் இன்றி
கேதுத் தேவே கேண்மையாய் ரக்ஷி!

# 7. நவக்கிரகங்களுக்குரிய பொதுவான பரிகாரங்கள்

**சூரியனுக்குரிய பரிகாரங்கள்:-**

1. தினமும் அதிகாலையில் சூரிய நமஸ்கரம் செய்தல்
2. கோதுமை தானம் செய்தல்
3. சிவனை வழிபடுதல்
4. சிவாலயங்களைப் பராமரித்தல்
5. சிவாச்சாரியார்களை உபசரித்தல்
6. ஆதித்ய ஹ்ருதயம் பாராயணம் செய்தல்
7. சூரிய அஷ்டோத்திரம் படித்தல்
8. சூரிய காயத்ரி மந்திரம் ஜெபித்தல்
9. சிவப்பு வர்ண வஸ்திரம் தானம் செய்தல்
10. தகப்பனை நன்றாக கவனித்துக் கொள்தல்.
11. மாணிக்கக் கல் அணிதல்
12. சூரியனார் கோயில் சென்று வழிபடுதல்
13. சிவாலயங்களில் அமைந்துள்ள நவகிரக சன்னதிக்குச் சென்று சூரியனுக்கு அர்ச்சனை செய்து வழிபடுதல்.
14. பிரதோஷ வழிபாடு செய்தல்
15. சிவ அஷ்டோத்திர பாராயணம் செய்தல்
16. சூரிய கவசம் பாராயணம் செய்தல்.
17. ஞாயிற்றுக் கிழமை தோறும் விரதம் அனுஷ்டித்தல்.
18. ஞாயிற்றுக் கிழமை வீட்டிலுள்ள பூஜையறையில் அரிசி மாவைக் கொண்டு சூரியனுக் சூரிய கோலமிட்டு ஸௌந்தர்ய லஹரியில் சூரியனுக்கென கொடுக்கப்பட்டுள்ள ஸ்லோகத்தை பாராயணம் செய்தல்.

19. தீபதானம் செய்தல்
20. தாமிர பாத்திரம் தானம் செய்தல்.
21. ருத்ர சூக்தம் பாராயணம் செய்தல்
22. சூரிய யந்திரம் தரித்தல் (தினகர யந்திரம்)
23. ருத்ர கவச யந்திரம் தரித்தல்.
24. சூரிய சதகம் பாராயணம் செய்தல்.
25. மாணிக்க வாசகர்–சிவபுராணம், திருநாவுக்கரசர்–போற்றித் திருத்தாண்டகம், திருஞான சம்பந்தர்–நமச்சிவாயப் பதிகம் பாராயணம் செய்தல்.

**சந்திரனுக்குரிய பரிகாரங்கள்:-**

1. இரவு நேரங்களில் சந்திரதரிசனம் செய்தல்.
2. அரிசி, நெல் தானம் செய்தல்.
3. அம்மன் வழிபாடு செய்தல்.
4. அம்மன் ஆலயங்களை பராமரித்தல்
5. அம்மன் பக்தர்களை உபசரித்தல்.
6. சோமவார விரதம் அனுஷ்டித்தல்.
7. அமாவாசை, பௌர்ணமி நாட்களில் விரதம் அனுஷ்டித்தல்
8. லலிதா சஹ்ஸ்ரநாம பாராயணம் செய்தல்.
9. ஸௌந்தர்ய லஹரி பாராயணம் செய்தல்.
10. சந்திர அஷ்டோத்திர பாராயணம் செய்தல்.
11. சந்திர காயத்ரி மந்திர ஜெபம் செய்தல்.
12. வெள்ளை வஸ்திர தானம் செய்தல்.
13. அன்ன தானம் செய்தல்
14. முத்து அணிதல்
15. பால்தானம், பசுதானம் செய்தல்.
16. உப்பு தானம் செய்தல்
17. திங்களூர் சென்று சந்திர அம்சத்தில் உள்ள இறைவனை வழிபடுதல்.

18. திருப்பதி சென்று பெருமாளை தரிசித்தல்
19. தாயை நன்றாக கவனித்துக் கொள்தல்
20. சந்திர கவசம் பாராயணம் செய்தல்
21. திங்கள் கிழமையில் வீட்டிலுள்ள பூஜை அறையில் அரிசி மாவைக் கொண்டு சந்திரனுக்குரிய கோலமிட்டு ஸௌந்தர்ய லஹரியில் சந்திரனுக்கென கொடுக்கப்பட்டுள்ள ஸ்லோகத்தை பாராயணம் செய்தல்.
22. ஈய பாத்திரம் தானம் செய்தல்.
23. சந்திர யந்திரம் தரித்தல்.
24. ஸ்ரீசக்ர யந்திர வழிபாடு செய்தல்.
25. சிவாலயங்களில் அமைந்துள்ள நவகிரக சன்னதிக்கு சென்று சந்திரனுக்கு அர்ச்சனை செய்து வழிபடுதல்.

**செவ்வாய்க்குரிய பரிகாரங்கள்:-**

1. முருகனை வழிபடுதல்.
2. முருகன் ஆலயங்களை பராமரித்தல்.
3. முருக பக்தர்களை உபசரித்தல்.
4. துவரை தானம் செய்தல்.
5. பவளக்கல் அணிதல்.
6. சிவப்பு வர்ண வஸ்திர தானம் செய்தல்
7. வைத்தீஸ்வரன் கோயில் சென்று வழிபடுதல்
8. சஷ்டி விரதம், கிருத்திகை விரதம் அனுஷ்டிந்தல்
9. செவ்வாய் அஷ்டோத்திர பாராயணம் செய்தல்.
10. கந்த சஷ்டி கவசம் பாராயணம் செய்தல்.
11. செவ்வாய் அஷ்டோத்திர பாராயணம் செய்தல்.
12. செவ்வாய் காயத்ரி மந்திர ஜெபம் செய்தல்.
13. இளைய சகோதரர்களை நன்றாக கவனித்துக் கொள்தல்.

14. செம்பு பாத்திரம் தானம் செய்தல்
15. முருகனுக்கு வேல் காணிக்கை செலுத்துதல்
16. செவ்வாய் யந்திரம் தரித்தல்
17. சுப்பிரமணியர் யந்திரம் – வழிபாடு செய்தல்
18. குங்கும தானம் செய்தல்.
19. ருத்ர யந்திரம் தரித்தல் , வழிபாடு செய்தல்.
20. சிவாலயங்களில் அமைந்துள்ள நவகிரக சன்னதிக்குச் சென்று செவ்வாய்க்கு அர்ச்சனை செய்து வழிபடுதல்.
21. செவ்வாய்க் கிழமை வீட்டிலுள்ள பூஜையறையில் அரிசி மாவைக் கொண்டு செவ்வாய்க் குரிய கோலமிட்டு ஸௌந்தர்ய லஹரியில் செவ்வாய்க்கு கொடுக்கபட்டுள்ள ஸ்லோகத்தை பாராயணம் செய்தல்.
22. அங்காரக கவசம் பாராயணம் செய்தல்.
23. நரசிம்ம ஸ்தோத்திரம் பாராயணம் செய்தல்
24. கந்த புராணம் படித்தல்.
25. செவ்வாழைப் பழம் தானம் செய்தல்.

**புதனுக்குரிய பரிகாரங்கள்:-**

1. விஷ்ணுவை வழிபடுதல்
2. விஷ்ணு ஆலயங்களை பராமரித்தல்
3. விஷ்ணு பக்தர்களை உபசரித்தல்.
4. விஷ்ணு சஹஸ்ரநாம பாராயணம் செய்தல்
5. ராமாயணம் படித்தல்
6. ஏகாதசி விரதம் அனுஷ்டித்தல்
7. புதன் கிழமைகளில் விரதம் அனுஷ்டித்தல்
8. புத அஷ்டோத்திரம் பாராயணம் செய்தல்
9. புத காயத்ரி மந்திர ஜெபம் செய்து

10. விஷ்ணு கவசம் பாராயணம் செய்தல்
11. புதகவசம் பாராயணம் செய்தல்
12. மரகதக் கல் அணிதல்
13. பச்சைப் பயறு தானம் செய்தல்
14. பச்சை வர்ண வஸ்திரம் தானம் செய்தல்
15. புத யந்திரம் தரித்தல்
16. சுதர்சன யந்திர வழிபாடு செய்தல்.
17. சிவாலயங்களில் அமைந்துள்ள நவகிரக சன்னதிக்குச் சென்று புதனுக்கு அர்ச்சனை. செய்து வழிபடுதல்.
18. நாலாயிர திவ்ய பிரபந்த பாராயணம் செய்தல்
19. திருவெண்காடு சென்று புத அம்சத்தில் உள்ள இறைவனை வழிபடுதல்.
20. மதுரை சொக்க நாதரை வழிபடுதல்.
21. பித்தளைப் பாத்திரம் தானம் செய்தல்
22. ஏழை எளிய மாணவர்களுக்கு படிப்புதவி செய்தல்
23. ஆன்மீக நூல்களை அச்சிட்டு இலவசமாக விநியோகம் செய்தல்.
24. புதன்கிழமை வீட்டிலுள்ள பூஜை அறையில் அரிசி மாலைக் கொண்டு புதனுக்குரிய கோலமிட்டு ஸௌந்தர்ய லஹரியில் புதனுக் கென கொடுக்கப்பட்டுள்ள ஸ்லோகத்தை பாராயணம் செய்தல்.
25. விஷ்ணு புராணம் படித்தல்.

**குருவுக்குரிய் பரிகாரங்கள்:-**

1. தட்சிணா மூர்த்தியை வழிபடுதல்.
2. குலகுருவை வழிபடுதல்
3. தட்சிணா மூர்த்திஸ்தோத்திர பாராயணம் செய்தல்.

4. மஞ்சள் வர்ண வஸ்திரம் தானம் செய்தல்.
5. கடலை தானம் செய்தல்
6. புஷ்பராகக் கல் அணிதல்.
7. பொன் தானம் செய்தல்.
8. பசுதானம் செய்தல்.
9. ஆலயத்திருப்பணிகள் செய்தல்.
10. குரு அஷ்டோத்திர பாராயணம் செய்தல்
11. குரு காயத்ரி மந்திர ஜெபம் செய்தல்
12. குரு கவசம் பாராயணம் செய்தல்
13. குரு யந்திரம் தரித்தல்
14. வியாழக்கிழமை விரதம் அனுஷ்டித்தல்
15. ஆலங்குடிசென்று குரு அம்சத்தில் உள்ள இறைவனை வழிபடுதல்
16. திருச்செந்தூர் சென்று குரு அம்சத்தில் உள்ள முருகனை வழிபடுதல்.
17. சிவாலயங்களில் அமைந்துள்ள நவகிரக சன்னதிக்குச் சென்று குருவுக்கு அர்ச்சனை செய்து வழிபடுதல்.
18. மஞ்சள் தானம் செய்தல்
19. வியாழக்கிழமை வீட்டிலுள்ள பூஜை அறையில் அரிசி மாவைக் கொண்டு குருவிற்குரிய கோலமிட்டு ஸௌந்தர்ய லஹரியில் குருவிற்கென கொடுக்கப்பட்டுள்ள ஸ்லோகத்தை பாராயணம் செய்தல்.
20. குரு ஸ்தானத்தில் உள்ள பெரியவர்களுக்கு பணிவிடைகள் செய்தல்.
21. ஏழை எளிய பிராமணர்களுக்கு பொருள் உதவி செய்தல்.
22. குரு மார்களின் சமாதிகளை பராமரித்தல்.

23. சிறு குழந்தைகளுக்கு இனிப்பு வழங்குதல்
24. நெய் தானம்
25. தீப தானம் , கதளிப்பழம் தானம்.

**சுக்கிரனுக்குரிய பரிகாரங்கள்:-**

1. மகா லட்சுமியை வழிபடுதல்
2. லட்சுமி அஷ்டோத்திர பாராயணம் செய்தல்
3. ஸ்ரீ சூக்த பாராயணம் செய்தல்
4. ஸ்ரீ ரங்கம் சென்று ரங்கநாதப் பெருமானை வழிபடுதல்
5. மொச்சை தானம் செய்தல்
6. வைரக்கல் தரித்தல்
7. வெள்ளிப் பாத்திரம் தானம் செய்தல்
8. சுக்கிர அஷ்டோத்திர பாராயணம் செய்தல்
9. சுக்கிர காயத்ரி மந்திரம் ஜெபம் செய்தல்
10. ச்ர்க்கரை தானம் செய்தல் ( இனிப்பு வழங்குதல்)
11. குதிரை தானம் (அல்லது) வாகன தானம் செய்தல்
12. கட்டில், மெத்தை தானம் செய்தல்
13. வெள்ளை வர்ண வஸ்திர தானம் செய்தல்
14. வெள்ளிக்கிழமை விரதம் அனுஷ்டித்தல்
15. கஞ்சனூர் சென்று சுக்கிர அம்சத்தில் உள்ள இறைவனை வழிபடுதல்
16. சிவாலயங்களில் அமைந்துள்ள நவகிரக சன்னதிக்குச் சென்று சுக்கிரனுக்கு அர்ச்சனை செய்து வழிபடுதல்.
17. திருமணம் ஆகாத ஏழை எளிய கன்னிப் பெண்களின் திருமணத்திற்கு பொருள்உதவி செய்தல்.
18. சுக்கிர யந்திரம் தரித்தல்
19. சௌபாக்கிய லட்சுமி யந்திரம், மகாலட்சுமி யந்திரம், அஷ்ட

லட்சுமி யந்திரம் இவைகளை பூஜித்தல்

20. வெள்ளிக் கிழமை வீட்டிலுள்ள பூஜை அறையில் அரிசி மாவு கொண்டு சுக்கிரனுக்குரிய கோல மிட்டு ஸௌந்தர்ய லஹரியில் சுக்கிரனுக் கென கொடுக்கப்பட்டுள்ள ஸ்லோகத்தை பாராயணம் செய்தல்.

21. மாம்பழம் தானம் செய்தல்

22. மனைவி, மகள், சகோதரி, அத்தை, மருமகள் இவர்களிடம் கண்ணியமாக நடந்து கொள்தல் ,இவர்கள் நன்றாக கவனித்துக்கொள்தல்

23. மலர், வாசனைத் திரவியங்கள் , அழகு சாதனப் பொருட்களை தானம் செய்தல்.

24. கனக தாராஸ்தோத்திர பாராயணம் செய்தல்.

25. தான வேஜ்ய தவசம் பாராயணம் செய்தல்.

**சனிக்குரிய பாரிகாரங்கள்:-**

1. சனி அஷ்டோத்திர பாராயணம் செய்தல்
2. சனி காயத்ரி மந்திர ஜெபம் செய்தல்
3. நீலக்கல் தரித்தல்
4. எள் தானம் செய்தல்
5. காகத்திற்கு அன்னமிடுதல்
6. நீலநிறம் அல்லது கருப்பு நிற வஸ்திர தானம் செய்தல்.
7. கருமை நிற பசு தானம் செய்தல்.
8. எருமை தானம் செய்தல்
9. இரும்பு பாத்திர தானம் செய்தல்
10. திருநள்ளாறு சென்று சனிப்பகவானை வழிபடுதல்
11. சிவாலயங்களில் அமைந்துள்ள நவகிரக சன்னதிகளில் சனி பகவானுக்கு எதிரே நல்லெண்ணெய் தீபம் ஏற்றி வழிபடுதல்.

12. ருத்ர சூக்தம் பாராயணம் செய்தல்.
13. ம்ருத்யுஞ் செய ஹோமம் செய்தல்
14. சனிக்கிழமைகளில் விரதம் அனுஷ்டித்தல்
15. பிரதோச வழிபாடு செய்தல்
16. ஊன முற்றவர்களுக்கு பொருள் உதவி செய்தல்
17. உறவினர்கள் இல்லாத கைவிடப்பட்ட முதியோர்களுக்கு பொருள் உதவி செய்தல்
18. செருப்பு தானம் செய்தல்
19. ஸ்ரீ ஐயப்பனை துதித்தல்
20. ஸ்ரீ ஆஞ்சநேயரை வழிபடுதல்
21. சனிக்கிழமை வீட்டில் உள்ள பூஜை அறையில் அரிசி மாவைக் கொண்டு சனிக்குரிய கோலமிட்டு ஸௌர்ந்தர்ய லஹரியில் சனிக்கென கொடுக்கப்பட்டுள்ள ஸ்லோகத்தைப் பாராயணம் செய்தல்.
22. சனி யந்திரம் தரித்தல்.
23. சுந்தர காண்டம், பாராயணம் செய்தல்
24. சனிக்கிழமைகளில் கரிய நிற பசு மாட்டிற்கு அகத்திக்கீரை வாங்கி தருதல்.
25. சந்திரன் துலாம் ராசியில் சஞ்சரிக்கும் நாட்களில் விரதம் அனுஷ்டித்தல்.

ராகுவிற்குரிய பாரிகாரங்கள்:-

1. உளுந்து தானம் செய்தல்
2. கோமேதகக்கல் தரித்தல்
3. கறுப்பு, சாம்பல் நிற வஸ்திர தானம் செய்தல்
4. செறுப்பு தானம் செய்தல்
5. ராகு அஷ்டோத்திர பாராயணத் செய்தல்

6. ராகு காயத்ரி மந்திர ஜெபம் செய்தல்
7. திரு நாகேஷ்வரம் சென்று ராகு பகவானை வழிபடுதல்
8. துர்கையை வழிபடுதல்
9. துர்கா கவசம் பாராயணம் செய்தல்
10. ராகு கவசம் பாராயணம் செய்தல்
11. வெள்ளியினால் செய்த சர்ப்ப உருத்தை ஜோதிடர் ,சாஸ்திரம் அறிந்தவர், அல்லது ஏழை பிராமணருக்கு தாம்பூல தட்சணையுடன் தானம் செய்தல்.
12. ராகு யந்திரம் தரித்தல்
13. அஷ்டமி நாட்களில் விரதம் அனுஷ்டித்தல்
14. அரச மரத்தின் கீழ் அமைந்துள்ள நாக பிரதிஷ்டைகளை வழிபடுதல், அல்லது அரசமரத்தின் கீழ் நாக பிரதிஷ்டை செய்து வழிபடுதல்.
15. பிரதோஷ வழிபாடு செய்தல்.
16. ஊனமுற்றவர்களுக்கு பொருள் உதவி செய்தல்
17. விதவைப் பெண்களுக்கு பொருள் உதவி செய்தல்
18. கறுப்பு ஆடு தானம் செய்தல்
19. கறுப்பு நிற கம்பளி தானம் செய்தல்
20. சிவாலயங்க்ளில் அமைந்துள்ள நவக்கிரக சன்னதிக்குச் சென்று ராகுவிற்கு அர்ச்சனை செய்து வழிபடுதல்
21. சனிக்கிழமை வீட்டிலுள்ள பூஜை அறையில் அரிசி மாவைக்கொண்டு ராகு பகவானுக்குரிய கோலமிட்டு ஸௌந்தர்ய லஹரியில் ராகுவிற்கென கொடுக்கப்பட்டுள்ள ஸ்லோகத்தைப் பாராயணம் செய்தல்.
22. வெண் பூசணிக்காயை வாங்கி வந்து அதன் மீது கற்பூரம் ஏற்றி மூன்று முறை தலையை சுற்ற முச்சந்தியில் போட்டு உடைத்தல்.

23. பாம்பு புற்றுகளில் பாலூற்றி வழிபடுதல்.

24. மாரியம்மனை வழிபடுதல்

25. ஆகாச கிழங்கை விட்டு வாசலில் கட்டி தொங்கவிட ராகுதோஷம் அகலும்.

**கேதுக்குரிய பரிகாரங்கள்**

1. வைடூரியம் தரித்தல்
2. கொள்ளு தானம்செய்தல்
3. விநாயகர் வழிபாடு செய்தல்
4. விநாயகர் அகவல் படித்தல்
5. சங்கடஹர சதுர்த்தி அன்று விரதம் அனுஷ்டத்தில்
6. விநாயகர் அஷ்டோத்திர பாரர்யணம் செய்தல்
7. விநாயகர் ஆலயங்களைப் பராமரித்தல்
8. கீழப் பெரும்பள்ளம் சென்று கேது அம்சத்தில் உள்ள இறைவனை வழிபடுதல்
9. காளஹஸ்தி சென்று கேது பகவானுக்கு சாந்தி பரிகாரம் செய்தல்.
10. பலவர்ண வஸ்திரம் தானம் செய்தல்
11. கேது அஷ்டோத்திர பாராயணம் செய்தல்
12. கேது காயத்ரி மந்திர ஜெபம் செய்தல்
13. வெண்கலப் பாத்திரம் தானம் செய்தல்
14. சித்தர் சமாதிகளில் வழிபாடு செய்தல்
15. ஹனுமான் சாலிசா பாராயணம் செய்தல்
16. துறவிகளுக்கு பணிவிடைகள் செய்தல்
17. சிவாலயங்களில் அமைந்துள்ள நவக்கிரக சன்னதிக்குச் சென்று கேதுபகவானுக்கு அர்ச்சனை செய்து வழிபடுதல்

18. செவ்வாய்க்கிழமை வீட்டிலுள்ள பூஜையறையில் அரிசி மாவு கொண்டு கேதுவுக்குரிய கோலமிட்டு ஸௌந்தர்ய லஹரியில் கேதுவுக்கென – கொடுக்கப்பட்டுள்ள ஸ்லோகத்தைப் பாராயணம் செய்தல்.
19. கோயில் தெப்பக் குளங்களில் வாழும் மீன்களுக்கு பொரி வாங்கிப் போடுதல்.
20. ஆஞ்ச நேயரை வழிபடுதல்
21. கோயில் யானைக்கு வாழைப்பழம் வாங்கித்தருதல்
22. கோயில்களில் சுற்றித்திரியும் குரங்குகளுக்கு திண்பண்டங்கள் வாங்கித் தருதல்.
23. யானை முடி மோதிரம் அணிந்து கொள்தல்
24. துளசி மாலை ருத்ராட்ச மாலை, ஸ்படிக மாலை தானம் செய்தல்.
25. ஆலயங்களில் காணிக்கை செலுத்துதல்.



# 8. ஆதிசங்கரர் அருளிய ஸௌந்தர்ய லஹரியில் நவக்கிரக ஸ்லோகங்கள்

**சூரியன் :-**

தநீயாம்ஸம் பாம்ஸீம் தவசரண பங்கேரஹ பவம்
விரிஞ்சி: ஸஞ்சிந்வந் விரசயதி லோகா நவிகலம்!
வஹத்யே நம் ஸௌரி : கதமபி ஸஹஸ்ரேண சிரசாம்
ஹரஸ் ஸங்ஷீத்யை நம் பஜதி பஸிதோத் தூளநவிதிம்!!

**சந்திரன் :-**

சிவ; சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த; ப்ரபவிதும்
நசேதேவம் தேவோ நகலு குசல; ஸ்பந்திதுமபி!
அதஸ்த்வா மாராத்யாம் ஹரிஹர விரிஞ்சாதி பிரபி
ப்ரணந்தும் ஸ்தோதும் வா கத மக்ருத புண்ய; ப்ரபவதி!!

**செவ்வாய்:-**

க்வணத் காஞ்சீதாமா கரிகலப கும்ப ஸ்தன நதா
பரி க்ஷீணா மத்தயே பரிணத சரச்சந்த்ர வதனா!
தனுர் பாணான் பாசம் ஸ்ருணி மபிததானா கரதலை;
புரஸ்தா தாஸ்தாம் ந; புரமதிது ராஹோ புருஷிகா!!

**புதன்:-**

ஸவித்ரீபிர் வாசாம் சசிமணி சிலாபங்க ருசிபி;
வசிந்யாத்யாபிஸ் த்வாம் ஸஹ ஜநதி ஸஞ்சிந்தயதிய;!
ஸகர்த்தா காவ்யாநாம் பவதி மஹதாம் பங்கி ஸீபகை;
வசோபிர் வ்ாக்தேவி வதந கமலாமோத மதுரை;!!

**குரு:-**

அவித்யாநா மந்தஸ்திர மிஹிச த்வீப நகரீ
ஜடாநாம் சைதந்ய ஸ்தபக மகரந்த ஸ்ருதி ஜரீ!
தரித்ராணாம் சிந்தாமணி குணநிகா ஜந்ம ஜ்லதௌ
நிமக் நாநாம் தம்ஷ்ட்ரா முராரிடி வராஹஸ்ய பலதீ!!

**சுக்கிரன்:-**

சதுர்ப்பி; ஸ்ரீ கண்டை; சிவயுவதிபி; பஞ்சபிரபி
ப்ரபிந்நாபி; சம்போர் நவபிரபி மூலப்ரப்ருதிபி;!
த்ரயச் சத்வாரிம்சத் வஸீதல கலாச்ர த்ரிவலய
த்ரிரேகாபி; ஸார்தம் தவசரண கோணா; பரிணதா; !!

**சனி:-**

ஜகத்ஸூதே தாதா ஹரி ரவதி ருத்ர; க்ஷபயதே
திரஸ்குர்வன் னேதத் ஸ்வமபி வுபரீசஸ் திரயதி!
ஸதா பூர்வ! ஸர்வம் ததிதமனுக்கு ஹ்ணாதி சசிவஸ்
தவாஜ்ஞா மாலம்ப்ய க்ஷண சலிதயோர் ப்ருலதிகயோ:!!

**ராகு:-**

விரிஞ்சி; பஞ்சத்வம் வ்ரஜதி ஹரிராப்நோதி விரதிம்
விநாசம் கீநாசோ பஜதிதநதோ யாதிநிதநம்!
விதந்த்ரா மாஹேந்த்ரீ விததிரபி ஸம்மீலதி த்ருசாம்
மஹா ஸம்ஹாரே ஸ்மிந்விஹரதி ஸதித்வத்பதி ரஸௌ!!

**கேது:-**

த்வதந்ய; பாணிப்யா மபயவரதோ தைவதகண;
த்வமேகா நைவாஸி ப்ரகடித வராபீத்ய பிநயா!
பயாத் திராதும் தாதும் பலமபிச வாஞ்ச்சா ஸமதிகம்
சரண்யே லோகாநாம் தவஹி சரணா வேவ நிபுணௌ!!



## 9. சிவாலயங்களில் மட்டும் பரிகாரம் செய்வதேன்?

தேவர்களுக்கு இப்பொழுது இருக்கும் உடலோடு எப்போதும் இருக்க ஆசை. குரு பகவானிடம் இதற்கான வழியைக் கேட்டனர். பாற்கடலைக் கடைந்து, அமுதத்தைப் பருகினால், என்றும் இறவா நிலை பெறலாம் என்றார். அசுரர்களின் உதவியை நாடி, பாற்கடலைக் கடைய ஆரம்பித்தனர்.

அமுதம் வருவதற்குப் பதிலாக, விஷம் வரத்தொடங்கியது. அனைவரும் சிவபெருமானிடம் சென்று காக்குமாறு முறையிட்டனர். சிவபெருமான், விஷத்தை எடுத்துப் பருகி, அனைவரையும் காத்தார். அடுத்து, காமதேனு, கற்பகத்தரு, மஹாலக்ஷ்மி, உஜ்ஜைசிரவம், ஐராவதம் என தோன்றினர்.

காமதேனுவை ரிஷிகளும், கற்பகத்தரு தேவலோகத்திலும், மஹாலக்ஷ்மியை மஹாவிஷ்ணுவும், உஜ்ஜைசிரவத்தையும், ஐராவதத்தையும் இந்திரனும் எடுத்துக் கொண்டனர்.

இதனைக் கொண்டு நாம் அறியும் உண்மை என்னவெனில், நமது கஷ்டங்களை சிவபெருமான் பெற்றுக்கொண்டு, நன்மைகளை நமக்கு அளிக்கிறார் என்பதாகும். பெருமாள், நமது வளங்களை சிறக்க வைக்கிறார். எனவேதான் சிவாலயங்களில் மட்டும் பரிகாரம் செய்கிறோம். பெருமாள் கோவில் சென்று சுகங்களை அதிகரிக்க வேண்டுகிறோம். இதனை உணர்த்தவே அட்டைப்படத்தை இவ்வாறு வடிவமைத்துள்ளோம்.



## 10. பரிகார ஸ்தலங்களில் பரிகாரம் செய்யும் முறை

பரிகாரம் செய்பவர் பரிகார ஸ்தலத்தில் உள்ள தீர்த்த குளத்தில் கட்டாயம் ஸ்நானம் செய்யவேண்டும். ஸ3ானம் செய்தபின் இறைவனுக்கு அபிசேகம், அர்ச்சனை தீபாராதனைகளைச் செய்ய வேண்டும் தீபாராதனைக்குப் பின் ஆலய பிரதக்ஷிணம் செய்ய வேண்டும்.

பிரதக்ஷிணத்திற்குப்பின் சிறிது நேரம் ஆலயத்திற்குள்ளேயே அமர்ந்து மந்திர ஜெபம், தியானம் செய்ய வேண்டும். ஆலயத்தைவிட்டு வெளியே வருவதற்கு முன் ஆலய உண்டியலில் தன்னால் இயன்ற காணிக்கையைச் செலுத்த வேண்டும்.

ஆலயத்தைவிட்டு வெளியே வந்தபின் , ஆலய வாசலில் அமர்ந்திருக்கும் பண்டாரம், பரதேசிகளுக்கு தான தர்மங்கள் செய்யவேண்டும். இதன்பிறகு நேராக வீட்டிற்கு வந்துவிட வேண்டும் . வழியில் எங்கும் தங்கக்கூடாது.

**நவக்கிரகங்களுக்குரிய உலோக பாத்திரங்களை தானம் செய்யும் முறை:-**

எந்த கிரகத்திற்கு பரிகாரம் செய்ய வேண்டும் அந்தகிரகத்திற்குரிய உலோக பாத்திரத்தில் அந்தகிரகத்திற்குரிய தானியத்தை சிறிது நிரப்பி, பின் அந்த பாத்திரத்தை கையில் எடுத்து மூன்று முறை தலையைச் சுற்றி, பின் அதை யாருக்காவது தானமாகக் கொடுத்துவிட வேண்டும்.

பொதுவாக் பரிகாரப்பொருட்களைவாழ்க்கையில் நல்ல நிலையில் இருப்பவர்கள் வாங்க மாட்டார்கள் எனவே ஏழை எளியவர்களுக்கு தானம் கொடுப்பது நல்லது.

**வஸ்திரம் தானம் செய்யும் முறை:-**

அந்த கிரகத்திற்கு பரிகாரம் செய்ய வேண்டுமோ அந்தகிரகத்திற்குரிய நிறத்தில் ஒரு சேலை, ஒரு ரவிக்கை துணி,

மற்றும் அந்த கிரகத்திற்குரி நிறத்தில் கரை போடப்பட்ட ஒரு வேஷ்டி, துண்டு இவைகளை ஒரு தாம்பளத்தில் வைத்து அத்துடன் வெற்றிலை பாக்கு, ஒரு தேங்காய், வாழைப்பழம் , ஒரு ரூபாய் நாணயம் இவைகளையும் வைத்து, நல்ல அன்யோன்யமான தம்பதியரை அழைத்து வந்து அவர்கள் காலில் விழுந்து வணங்கி மேற்கண்ட பொருட்களை தாம்பளத்துடன் அவர்களுக்கு தானமாக கொடுத்து விட வேண்டும்.

**நவதானியங்களை தானம் செய்யும் முறை:-**

எந்த கிரகத்திற்குரிய தானியத்தை தானம் செய்ய வேண்டுமோ, அந்த தானியத்தை புதிய முறம் ஒன்றில் பரப்பி, அதன் மீது அகல்விளக்கு ஒன்றை ஏற்ற வைத்து, அந்த முறத்தை ஒன்பது முறை வலம் வர வேண்டும். முறத்தை சுற்றி வலம் வரும்போது எந்தகிரகத்திற்குரிய காயத்ரி மந்திரத்தை ஜெபிக்க வேண்டும் ஒன்பது முறை வலம் வந்தபின் முறத்துடன் தானியத்தை பசுமாடு வைத்திருப்பவர்களுக்கு தானமாகச் கொடுத்து அந்த தானியத்தை பசு மாடுகளுக்கு தீவனமாக கொடுக்கச் செய்ய வேண்டும். முடிந்தால் பரிகாரம் செய்பவரே அந்த தானியத்தை தண்ணீரில் ஊறவைத்து ஊறிய தானியத்தை பசுமாடுகளுக்கு தீவனமாகக் கொடுக்கலாம்.

**நவரத்தினங்களை அணியும்முறை:-**

எந்த கிரகத்திற்குரிய ரத்தினம் அணிய வேண்டுமோ அந்த கிரகத்திற்குரிய கிழமைக்கு முந்தையநாள் இரவு அந்த கிரகக்திற்குரிய ரத்தினம் பத்தித் மோதிரத்தை பால்,துளசி தீர்த்தம், பஞ்ச கவ்யம் இவை ஏதாவது ஒன்றில் ஊறவைக்க வேண்டும் . மறுநாள் மோதிரம் அணிய வேண்டிய கிழமைகளில் அந்த மோதிரத்தை சுத்த நீரில் கழுவி எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு தாம்பளத்தில் அந்தகிரகத்திற்குரிய வஸ்திரம் எதுவோ அதை வைத்து, அந்த வஸ்திரத்தின்மீது நாம் சுத்த படுத்தி

வைத்திருக்கும் மோதிரத்தை வைத்து அதன் முன்பு தீபம் ஏற்றி வைத்து அந்த கிரகத்திற்குரிய காயத்திரி மந்திரத்தை 108 முறை ஜெபித்து பின் தீபாராதனை, தூபங்காட்டவேண்டும். அதன்பிறகு அந்த மோதிரத்தை எடுத்து கையில் அணிந்து கொள்ளலாம்.

**மந்திர ஜெபம் செய்யும் முறை:-**

எந்த கிரகத்திற்கு பரிகாரமாக மந்திரம் ஜெபிக்க வேண்டுமோஅந்த கிரகத்திற்குரிய யந்திரம் தயார் செய்து அதை பூஜை அறையில் வைத்து, தீபம் ஏற்றி தீபத்திற்கு முன் அமர்ந்து கொண்டு மந்திர ஜெபம் செய்ய வேண்டும் . மந்திர ஜெபம் செய்யும் போது அந்த கிரகத்திற்குரிய மலரை யந்0திரத்தின் மீது வைக்க வேண்டும். ஒரு மந்திரத்திற்கு ஒரு மலர் வீதம் வைத்து 108 முறை அந்த கிரகத்திற்குரிய மந்திரத்தை ஜெபிக்க வேண்டும். தீபம் ஏற்றாமல் மந்திரஜெபம் செய்யக்கூடாது.



# 11. கிரக சேர்க்கைகளும் வணங்க வேண்டிய தெய்வங்களும்

| | |
|---|---|
| சனி +சூ | – சனீஸ்வரர் |
| சனி+ சந் | – காளி |
| சனி+செ | – முருகன், பைரவர்,வீரபத்ரர் |
| சனி+ பு | – சத்திய நாராயணர் |
| சனி +சு | – லக்ஷ்மி |
| சனி+ குரு | – தர்ம சாஸ்தா, |
| சனி+ரா | – கால பைரவர் |
| சனி + கே | – முனீஸ்வரர் |
| சனி+ சூ+ சந் | – அர்த்தநாரீஸ்வரர் |
| சனி+ சூ+ செ | – கார்த்திகேயன் |
| சனி+ சூ+பு | – சங்கரநாராணயர் |
| சனி+சூ+குரு | – தட்சிணா மூர்த்தி |
| சனி+ சூ+ சு | – காமேஷ்வரர், விஜயலட்சுமி |
| சனி+சூ+ரா | – சரவேஸ்வரர், மிருத்யுஞ்சயர், மகேஸ்வரன், |
| சனி+சூ+ கே | – முனீஸ்வரர், வைத்தீஸ்வரன், யோகேஸ்வரன் |
| சனி+ சந்+ செ | – பத்ரகாளி, பால முருகன் |
| சனி+ சந்+ பு | – சரஸ்வதி, விஷ்ணு துர்க்கை |
| சனி+ சந்+குரு | – பார்வதி |
| சனி + சந்+ சு | – காமாட்சி, அன்ன லட்சுமி |
| சனி+ சந்+ ரா | – துர்க்கை, சாமுண்டி, மகாகாளி |
| சனி+ சந் + கே | – யோகேஸ்வரி, கணேசர் |
| சனி+செ+ பு | – நரசிம்மர், ராமர், குமார சுவாமி |
| சனி+ செ+ குரு | – பழனி முருகன், சுவாமி நாதன். |
| சனி+செ+சு | – வள்ளி முருகன், வீரலட்சுமி |

| | |
|---|---|
| சனி+ செ+ ரா | – வீர பத்ரர் |
| சனி+செ+ கே | – ஆஞ்சநேயர் |
| சனி+ பு+ குரு | – கிருஷ்ணர் |
| சனி+ பு+ சு | – லட்சுமி நாராயணர் |
| சனி+ பு + ரா | – மஹாவிஷ்ணு |
| சனி+ பு + கே | – அனந்த நாராயணர் |
| சனி +குரு+ சு | – தனலட்சுமி |
| சனி+ குரு+ ரா | – சரபேஸ்வரர் |
| சனி + குரு + கே | – குருதட்சிணா முர்த்தி |
| சனி + சு+ ரா | – மஹாலட்சுமி |
| சனி+ சு+ கே | – யோகலட்சுமி |
| குரு + சூ + பு | – தத்தாத்ரேயர் |
| சுக்+ சந் +கே | – அபிராமி, காமாக்ஷி, ராஜேஸ்வரி |
| சனி+குரு+ சந்+ கே | – சந்திர மௌலீஸ்வரர் |
| சந்+ செ+ ரா | – திரி சூலி அம்மன் |
| சூ+ செ+ ரா | – ருத்ரன் |
| பு+ செ+ ரா | – நரசிம்மன் |
| குரு+ செ+ ரா | – ம்ருத்யுஞ்சயன் |
| சு+ செ+ ரா | – துர்க்கை |
| பு+ செ+ கே | – ராமன் |
| சூ+ செ+ கே | – முருகன் |

கிரகச் சேர்க்கை என்பது ஒன்றுக்கு மேற்பட்ட கிரகங்கள் ஒரே ராசியில் இணைந்து நிற்பது அல்லது ஒன்றுக்கொன்று திரிகோணமாக நிற்பதாகும். அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கிரகங்கள் சம சப்தமமாக நின்று ஒன்றை ஒன்று பார்த்துக் கொள்வதாகும்.

# நவக்கிரகங்களுக்குரிய விருட்ச வேர்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | வில்வம் |
| சந்திரன் | – | பாலை |
| செவ்வாய் | – | நாயுருவி |
| புதன் | – | புங்கன் |
| குரு | – | கண்டு பரங்கி |
| சுக்கிரன் | – | அத்தி |
| சனி | – | வன்னி |
| ராகு | – | சந்தனம் |
| கேது | – | அஸ்வகந்தி |

பரிகாரத்திற்காக நவரத்தினங்கள் அணிய முடியாதவர்கள் மேற்குறிப்பிட்டுள்ள அந்தந்த கிரகங்களுக்குரிய விருட்ச வேர்களை அந்தந்த கிரகத்திற்குரிய மந்திரங்களை ஜபித்து ரட்சையாக அணிந்து கொள்வதன் மூலம் கிரக தோஷங்களிலிருந்து விடுபடலாம்.



# 12. முகூர்த்தம் விதானம்

எந்த ஒரு காரியத்தை செய்தாலும் நல்லநேரம் பார்த்து அந்த காரியத்தை தொடங்கும் வழக்கம் இந்துமதசடங்கு சம்பிரதாயங்களில் காலங்காலமாக இருந்து வருகிறது. இதற்காகவே ஜோதிடத்தில் முகூர்த்தம் என்னும் ஒரு பிரிவு ஏற்பட்டுத்தப்பட்டுள்ளது. அதில் பல்வேறு சடங்கு சம்பிரதாயங்களை செய்வதற்கு ஏற்ற நேரத்தை தேர்ந்தெடுப்பதற்கும் விதிமுறைகள் கொடுக்கப்பட்டுள்ளன.

ஒரு குறிப்பிட் காரியத்தை தொடங்குவதங்கு ஏற்ற முகூர்த்த நேரமானது அயனம், மாதம், பாஷம், வாரதி, திதி, நட்சத்திரம், யோகம், கரணம் , லக்னம், தியாஜ்யம், ராகுகாலம், யமகண்டம், காலஓரை கௌரிபஞ்சாங்கம் வாரசூலை, போன்ற விசயங்களை அடிப்படையாக கொண்டு தேர்ந்தெடுக்கப் படுகிறது.

மேற்குறிப்பிட்ட விசயங்களை அடிப்படையாக கொண்டு ஒரு குறிப்பிட்ட நாளில் சுப, அசுபதன்மைகளைக் கணக்கிட்டுப் பார்த்தால் எந்த ஒரு நாளுமே முழு சுபநாளாக அமையாது. ஒரு வருடத்தில் உள்ள 365 நாட்களும் சுபதன்மை, அசுபத்தன்மை இரண்டும் கலந்த நாட்களாகத்தான் இருக்கும். அப்படிஎன்றால் ஒரு குறிப்பிட்ட நாளை சுப முகூர்த்த நாள் என்றோ அல்லது அசுபநாள் என்றோ எப்படி நிர்ணயிக்கிறார்கள் என வினா எழலாம். அதாவது ஒரு குறிப்பிட்ட நாளின் சுப, அசுப தன்மைகளைக் கணக்கிட்டு அந்த நாளில் சுபதன்மை அதிகமாகவும் , அசுபத்தன்மை அதிகமாகவும், சுபதன்மை குறைவாகவும் இருந்தால்அந்த நாள் சுப நாள் என கருதப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட நாளில் அசுப தன்மை அதிகமாகவும், சுப தன்மை குறைவாகவும் இருந்தால் அந்த நாள் அசுபநாளாக கருதப்படுகிறது. எனவே சுபமுகூர்த்தநாள் என்றால் சுபதன்மை அதிகமாக உள்ள நாள் என எடுத்து கொள்ள வேண்டும் தவிர முற்றிலும் சுபநாள் என எடுத்துக் கொள்ள கூடாது.

முகூர்த்த நூல்களில் ஒரு குறிப்பிட்ட சடங்கை செய்வதற்கு தகுந்த நாட்கள் மட்டுமல்லாது, அந்த சடங்கை செய்வதற்கு தகாத நாட்களும் அதாவது விலக்கப்பட வேண்டிய நாட்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. எனவே முகூர்த்த நாள் தேர்ந்தெடுக்கும் போது இவ்விரண்டு விசயங்களையும் கணக்கில் கொள்ள வேண்டும்.

மேலும் சுப காரியங்களுக்கென சுபமுகூர்த்தங்களை தேர்ந்தெடுப்பதுபோல் அசுபகாரியங்கள் செய்வதற்கு அசுப முகூர்த்தங்களையும் தேர்ந்தெடுத்து செய்யலாம்.

முகூர்த்த நிர்ணயத்தில் கீழ்கண்ட காலங்கள் தோஷமில்லாத காலங்களாகக் கருதப்படுகிறது.

1. உதய காலத்தில் திதி தோஷமில்லை.

2.அபிஜித் காலத்தில் நட்சத்திர தோஷமில்லை.

3.அஸ்தமனக்காலத்தில் லக்ன தோஷமில்லை

4. இரவில் வார தோஷமில்லை.

முகூர்த்த நிர்ணயத்தில் திதியாதிகளின் குணவிஷேசம் கீழ்கண்டவாறு கொடுக்கப்பட்டுள்ளது.

திதி ஒரு பங்கு குணம்

கரணம் இரண்டு பங்கு குணம்

யோகம் மூன்று பங்கு குணம்

நட்சத்திரம் நான்கு பங்கு குணம்

வாரம் எட்டு பங்கு குணம்

வாரயோகம் பதினாறு பங்கு குணம்

நல்ல சுபலக்னம் நூறு பங்கு குணம்

இவையெல்லாம் நல்லனவாகவும், கிரகங்களும் நல்ல ஸ்தானங்களில் இருக்க பெற்ற சுபமுகூர்த்தம் பதினாயிரம் பங்கு குணம்.

மேற்கண்ட விசயங்களிலிருந்து நாம் அறிந்து கொள்வது என்னவென்றால் முகூர்த்த நிர்ணயத்தில் லக்னமும், லக்னத்தைப்பார்க்கும் சுபகிரகங்களுமே முக்கிய இடத்தைப் பிடிக்கின்றன. அதற்கு சற்று தாழ்ந்தநிலையில் பார்த்தால் வாரமும், நட்சத்திரமும் முகூர்த்த நிர்ணயத்தில் லக்னம், வாரயோகம் , வாரம், நட்சத்திரம் இவை சுபமாக அமைந்தால் சுப முகூர்த்தமாக எடுத்து கொள்ளலாம் மற்ற விசயங்கள் சுபமாக அமையாவிட்டாலும் அந்த நாளை சுபநாளாக எடுத்துக்கொள்ளலாம்.



# 13. சுபமுகூர்த்த நிர்ணயத்தில் கவனிக்க வேண்டிய விசயங்கள்

முகூர்த்த நூல்களில் ஒரு குறிப்பிட்ட சுபகாரியத்தை செய்வதற்கு தகுந்த நாட்கள் மட்டுமல்லாது அந்த சுபகாரியத்தை செய்வதற்கு தகாதநாட்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. எனவே முகூர்த்த நாளை தேர்ந்தெடுக்கும் போது இவ்விரண்டு விசயங்களையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

சுபகாரியங்கள் செய்வதற்கு தகுந்த நேரத்தை தேர்ந்தெடுக்கும் போது ரிஷிகளால் சுபம் என நிர்ணியிக்கப்பட்ட விசயங்களை கீழே தரப்பட்டுள்ளன.

1. சுபமாதம்
2. சுப பக்ஷம் (வளர்பிறை)
3. சுப வாரம் ( கிழமை)
4. சுப திதிகள்
5. சுப நட்சத்திரங்கள்
6. சுப யோகங்கள்
7. சுப கரணங்கள்
8. லக்னத்திற்கும் சந்திரன் நிற்கும் ராசிக்குமான நிலை.
9. சுப முகூர்த்த லக்னம்
10. ஸ்தான சுத்தம் உள்ள லக்னம்
11. பஞ்சக சுத்தி உள்ள லக்னம்
12. தாராபலம் உள்ள நாள்
13. சந்திர பலம் உள்ள நாள்
14. முகூர்த்த லக்னத்திற்கு கிரக நிலைகள் (சுபஸ்தானம் பெற்ற கிரக நிலைகள்)
15. அமிர்த கடிகை

16. அமிர்தாதி யோகம் (அமிர்தயோகம், சித்தயோகம்)
17. நேத்திரம் – ஜீவன் உள்ள நாள்
18. சந்திராஷ்டமம் இல்லாத நாள்
19. குரு – சுக்கிரன் அஸ்தமனம் பெறாத நாட்கள்
20. சுப கால ஓரை
21. தியாஜ்யம் இல்லாத காலம்
22. சுபகௌரி வேளை

சுபகாரியங்கள் செய்வதற்கு தகுந்த நேரத்தை தேர்ந்தெடுக்கும் போது தவிர்க்கப்பட வேண்டியவை என ரிஷிகளால் நிர்ணயிக்கப்பட்ட விசயங்கள் கீழே தரப்பட்டுள்ளது.

1. அசுபமாதம்
2. அசுபபக்ஷம் (தேய்பிறை)
3. அசுப வாரம் (கிழமை)
4. அசுப திதிகள்
5. அசுப நட்சத்திரங்கள்
6. அசு யோகம்
7. அசுப கரணம்
8. வார– நட்சத்திர – திதி – லக்னதியாஜ்ஜியங்கள்
9. விஷகடிகை
10. குரு – சுக்கிரன், மூடம் (அஸ்தமனம்)
11. அமிர்தாதி யோகங்களில் மரணயோகம் – பிரபலாரிஷ்டயோகம்
12. கிரகண நாள்
13. நேத்திரம் – ஜீவன் இல்லாத நாள்
14. பஞ்சக சுத்தி இல்லாத லக்னங்கள்
15. ஸ்தான சுத்தி இல்லாத லக்னங்கள்

16. சந்திராஷ்டம தினங்கள்

17. ஜென்ம – அனுஜென்ம – திரி ஜென்ம நட்சத்திரங்கள்

18. அசுப கால ஓரை

19. அசுப கௌரி வேளை – (ரோகம் – சோரம் – விஷம்)

20. ராகு காலம், எமகண்டம்

21. அசுபகிரகம் அமர்ந்த அல்லது பார்த்த லக்னம்.

**தாரா பலம்-**

ஜென்ம நட்சத்திரத்திலிருந்து முகூர்த்த தினத்தன்று நட்சத்திரம் வரை எண்ணிக்கண்ட தொகையை 9ஆல் வகுத்து, ஈவுபோக வரும் மீதி 0,2,4,6,8, என வந்தால் உத்தமம், மீதி 1,3,5,7 என வந்தால் நல்ல தல்ல.

தாராபலம் பார்க்கும்போது மீதியாக 1,3,5,7 என் எண்கள் வந்தால் அதற்கென சில பரிகாரங்களைச் செய்து விட்டு சுபகாரியங்களை செய்யலாம் எனக்கூறப்படுகிறது அந்த பரிகாரங்கள் என்ன என்பதைப் பார்ப்போம்.

மீதி 1– வாழைக்காய் தானம் செய்ய தாராதோஷம் நீங்கும்

மீதி 3– பழம் தானம் செய்ய தாரா தோஷம் நீங்கும்

மீதி 5– உப்புதானம் செய்ய தாரதோஷம் நீங்கும்

மீதி 7– எள் தானம் செய்ய தாராதோஷம் நீங்கும்.

**சந்திரபலம்-**

ஜென்ம ராசி முதல் முகூர்த்த தினத்தன்று சந்திரன் நின்ற ராசி வரை எண்ணிக்கண்ட தொகை, 1,3,6,7,10, 11 என வந்தால் சந்திர பலம் உண்டு,உத்தமம், 2,4,5,8,9,12 என வந்தால் சந்திரபலம் இல்லை, அதமம்.

**சந்திராஷ்டமம்-**

முகூர்த்த தினத்தன்று சந்திரன் நின்றராசி , ஜென்மராசிக்கு எட்டாவது ராசியாக அமைந்தால்,அன்றையதினம் சுபமுகூர்த்தத்திற்கு உகந்த நாள் அல்ல எனக்கூறப்படுகிறது.

**ஸ்தான சுத்தி-**

சுபகாரியங்கள் செய்வதற்காக சுபமுகூர்த்தம் நிர்ணயம் செய்யும் போது இன்னின்ன சுபகாரியத்திற்கு இன்ன இடம் சுத்தமாக இருக்க வேண்டும் என்ற விவரங்கள் முகூர்த்த நூல்களில் கொடுக்கப்பட்டுள்ளன.

ஒரு குறிப்பிட்ட சுப காரியத்திற்கென தேர்ந்தெடுக்கப்பட்ட முகூர்த்த லக்னத்திற்கு குறிப்பிட்ட ஸ்தானங்களில் எந்தகிரகமும் இல்லாது இருப்பதே ஸ்தான சுத்தியாகும்.

"கால விதானம்" என்னும் நூலில் ஸ்தான சுத்தி விவரங்கள் கீழ்கண்டவாறு கொடுக்கப்பட்டுள்ளது.

| **சுப காரியம்** | **முகூர்த்த லக்னம் முதல் கணக்கிட கீழ்க்கண்ட ஸ்தானம் சுத்தமாக இருக்க வேண்டும்** |
|---|---|
| நிஷேகம், கர்ப தானம் | லக்னம் |
| கிரஹப்ரவேசம் | 2ம் இடம் |
| விவசாய ஆரம்பம் | 3ம் இடம் |
| அக்ஷரப்பியாசம் | 4ம் இடம் |
| பிரயாணம் | 5ம் இடம் |
| புத்தாடை அணிதல் | 6ம் இடம் |
| திருமணம் | 7ம் இடம் |
| உபநயனம் | 8ம் இடம் |

| | |
|---|---|
| சௌளம் | 9ம் இடம் |
| அன்னப்ராசனம் | 10ம் இடம் |
| சிரார்த்தம் | 11ம் இடம் |
| பெயர் சூட்டு விழா | 12ம் இடம் |

சுத்தி ஸ்தானங்களில் சுப கிரகங்களான குரு, சுக்கிரன், புதன், வளர்பிறைச் சந்திரன் நின்றால் தோசமில்லை எனக் கூறப்படுகிறது.

**பஞ்சக சுத்தி**

வாரம், திதி, நட்சத்திரம் , லக்னம் , லக்னத்துருவம் ஆகிய இந்த ஐந்து விசயங்களையும் அடிப்படையாகக் கொண்டு நிர்ணயம் செய்யப்படுவது பஞ்சக சுத்தியாகும்.

1. ஞாயிற்றுக் கிழமை முதல் சுப முகூர்த்த தினத்தன்றுள்ள கிழமை வரை எண்ணி வரும் எண்
2. பிரதமைத் திதி முதல் சுப முகூர்த்த தினத்தன்றுள்ள திதிவரை எண்ணி வரும் எண்
3. அஸ்வினி நட்சத்திரம் முதல் சுப முகூர்த்த தினத்தன்றுள்ள நட்சத்திரம் வரை எண்ணி வரும் எண்.
4. மேஷம் முதல் சுபகாரியம் செய்வதற்கு தேர்ந்தெடுக்கப்பட்ட லக்னம் வரை எண்ணி வரும் எண்.
5. மேற்கண்டவைகளுடன் லக்ன துருவ எண்

இந்த ஐந்தையும் கூட்டி 9 ஆல் வகுத்தால் வரும் ஈவுபோக மீதி 0,3,5,7 என வந்தால் நல்லது 1,2,4,6,8 என வந்தால் நல்லதல்ல. அதாவது பஞ்சக சுத்தி இல்லை என எடுத்துக் கொள்ள வேண்டும்.

**லக்ன துருவம்**

| | | | |
|---|---|---|---|
| 6 | 5 | 7 | |
| 4 | | | |
| 2 | | | |
| | | | |

1. மேஷ லக்னத்திற்கு –5
2. ரிஷப லக்னத்திற்கு –7
3. மகர லக்னத்திற்கு – 2
4. கும்ப லக்னத்திற்கு – 4
5. மீன லக்னத்திற்கு – 6

மற்ற லக்னங்களுக்கு துருவம் இல்லை.

மேற்கண்ட ஐந்து விசயங்களையும் கூட்டி 9ஆல் வகுத்துக்கண்ட ஈவுபோக மீதம் 0,3,5,7 என வந்தால் அது நிஷ்பஞ்சகம் எனப்படும். இப்படி நிஷ்பஞ்சகம் எனவந்தால் அந்த நாளும், நட்சத்திரமும், திதியும், லக்னமும் சுபகாரியம் செய்ய உகந்தவைகள் எனக்கூறப்படுகிறது.

மீதி 1 வந்தால் மிருத்யு (மரணம் ) பஞ்சகம்

மீதி 2 வந்தால் அக்னி (நெருப்பு) பஞ்சகம்

மீதி3 வந்தால் நிஷ்பஞ்சகம் (சுப பஞ்சகம்)

மீதி4 வந்தால் ராஜ பஞ்சகம் (அரச தண்டனை)

மீதி5 வந்தால் நிஷ்பஞ்சகம் (சுப பஞ்சகம்)

மீதி6 வந்தால்சோரபஞ்சகம் (வஞ்சகம், திருட்டு)

மீதி7 வந்தால் நிஷ்பஞ்சகம் (சுப பஞ்சகம்)

மீதி8 வந்தால் ரோக பஞ்சகம் (நோய்)

தவிர்க்க முடியாத சூழ்நிலையில் , வேறு வழியில்லாமல்

1,2,4,6,8 என் எண்கள் மீதியாக வரும் நாள், லக்னத்தில்

சுபகாரியம் செய்ய நேரிட்டால் கீழ்கண்ட பரிகாரங்களைச் செய்துவிட்டு சுப காரியம் செய்யலாம் எனக் கூறப்படுகிறது.

மீதி எண் 1 – மிருத்யு யஞ்சகம் – குத்து விளக்கு தானம் செய்ய பரிகராம் உண்டாகும்.

மீதி எண் 2 – அக்னி பஞ்சகம் – சந்தனம் தானம் செய்ய பரிகாரம் உண்டாகும்.

மீதி எண் 4– ராஜ பஞ்சகம் – எலுமிச்சம் புழம் தானம் செய்ய பரிகாரம் உண்டாகும்.

மீதி எண் 6 – சோர பஞ்சகம் – பூஜைமணி தானம் செய்ய பரிகாரம் உண்டாகும்.

மீதி எண் 8 – ரோக பஞ்சகம் – தான்ய தானம் செய்ய பரிகாரம் உண்டாகும்.

**அமிர்தாதி யோகங்கள்-**

ஒரு குறிப்பிட்ட கிழமையில் குறிப்பிட்ட ஒரு சில நட்சத்திரங்கள் நடப்பில் இருந்தால் இன்ன யோகம் எனக்குறிப்பிடுவது அமிர்தாதி யோகங்கள் என அழைக்கப்படுகின்றன. எந்த கிழமையில் எந்த நட்சத்திரம் வந்தால் என்னயோகம் என்பதைக் காட்டும் அட்டவணை இங்கே கொடுக்கப்பட்டுள்ளது. இந்த அட்டவணையில் அமிர்த யோகத்திற்கு "அமிர்த" என்ற முதல் எழுத்தும், சித்தயோகத்திற்கு "சித்த" என்ற முதல் எழுத்தும், "மரண" யோகத்திற்கு மரண என்ற முதல் எழுத்தும் கொடுக்கப்பட்டுள்ளது.

அமிர்த யோகம் , சித்தயோகம், மரண யோகம் இவைகளில் அமிர்த யோகமும்,சித்தயோகமும், சுபகாரியங்களுக்குஉகந்த யோகங்களாகும் மரண யோகத்தில் எந்த சுப காரியமும் செய்யக்கூடாது.

பஞ்சாங்க உறுப்புகளின் குண விசேசம் முகூர்த்த நூல்களில் கீழ்கண்ட வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

திதி – 1 பங்கு குணம்

கரணம்– 2 பங்கு குணம்

யோகம் – 3 பங்கு குணம்

நட்சத்திரம் – 4 பங்கு குணம்

வாரம் – 8 பங்கு குணம்

பஞ்சாங்க உறுப்புகளில் வாரம், நட்சத்திரம், இவை இரண்டு மட்டுமே அதிக குண விசேசம் உடையவை. நட்சத்திரத்தையும், கிழமையையும் வைத்தே அமிர்தாதி யோகங்கள் கணக்கிடப் படுகின்றன.எனவே சுபகாரியங்கள் செய்வதற்கு அமிர்தாதி யோகங்கள் முக்கியமாக கவனிக்க வேண்டும்.

குறிப்பு

எதிரில் உள்ள அட்டவணையில் சி – சித்தயோகம், அ – அமிர்தயோகம், ம – மரண யோகம் என்று கொள்க.



அமிர்தாதி யோக அட்டவணை

| | ஞாயிறு | திங் | செவ் | புதன் | வியா | வெள் | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| அஸ்வினி | சி | சி | சி | ம | அ | அ | சி |
| பரணி | சி | சி | சி | சி | சி | சி | சி |
| கிருத்திகை | சி | ம | சி | அ | ம | சி | அ |
| ரோகிணி | சி | அ | அ | சி | ம | ம | அ |
| மிருகசீரிடம் | சி | அ | சி | சி | ம | சி | சி |
| திருவாதிரை | சி | சி | ம | சி | ம | சி | சி |
| புனர்பூசம் | சி | அ | சி | சி | அ | சி | சி |
| பூசம் | சி | சி | சி | சி | அ | ம | சி |
| ஆயில்யம் | சி | சி | சி | சி | சி | ம | ம |
| மகம் | ம | ம | சி | சி | அ | ம | சி |
| பூரம் | சி | சி | சி | அ | சி | சி | சி |
| உத்திரம் | அ | சி | அ | அ | ம | சி | ம |
| அஸ்தம் | அ | சி | சி | ம | சி | அ | ம |
| சித்திரை | சி | ம | சி | சி | சி | சி | ம |
| ஸ்வாதி | சி | அ | சி | சி | அ | சி | அ |
| விசாகம் | ம | ம | ம | சி | சி | சி | சி |
| அனுசம் | ம | சி | சி | சி | சி | சி | சி |
| கேட்டை | ம | சி | சி | சி | சி | ம | சி |
| மூலம் | அ | சி | அ | ம | சி | அ | சி |
| பூராடம் | சி | ம | சி | அ | சி | சி | சி |
| உத்திராடம் | அ | ம | ம | அ | சி | சி | சி |
| திருவோணம் | அ | அ | சி | சி | சி | ம | சி |
| அவிட்டம் | ம | சி | சி | ம | சி | சி | சி |
| சதயம் | சி | சி | ம | சி | ம | சி | அ |
| பூரட்டாதி | சி | ம | ம | அ | சி | சி | ம |
| உத்திரட்டாதி | அ | சி | அ | சி | சி | சி | சி |
| ரேவதி | அ | சி | சி | ம | சி | அ | ம |

# 14. ஸோடச ஸம்ஸ்காரங்கள்

ஒவ்வொரு ஜீவனும் பிறக்கும் போது பிறப்பிற்கு காரணமாயிருந்த பீஜ தோஷத்துடனும் , அந்த ஜீவன் கர்பத்தில் தங்கியிருந்தால் கர்ப்ப தோஷத்துடனும் பிறக்கிறது. இதை ஜீவமலம் எனக்குறிப்பிடுகிறார்கள். இந்த ஜீவ மலத்தை அகற்றும் உபாயமாக நாற்பது விதமான ஸம்ஸ்காரங்களையும், எட்டுவிதமான ஆத்ம குணங்களையும் கூறியிருக்கிறார்கள் மகரிஷிகள்.

ஸம்ஸ்காரம் என்றால் நன்கு பண் படுத்துகின்ற சடங்கு அல்லது பரிசுத்தமாக்கும் சடங்கு எனப் பொருள்படும். சுரங்கத்திலிருந்து வெட்டி எடுத்த தங்கமோ அல்லது கடலிலிருந்து எடுக்கப்பட்ட முத்தோ, பவளமோ, அப்படியே பிரகாசிப்பதில்லை, அவைகளின் பிரகாசிக்கின்றன. இதேபோல் ஜீவமலத்தோடு பிறக்கும் மனிதன் நாற்பது ஸம்ஸ்காரங்களை கடை பிடிப்பதாலும், எட்டுவிதமான ஆத்ம குணங்களை வளர்த்துக் கொள்வதாலும் ஜீவமலம் நீங்கப் பெற்று நற்கதியை அடைவான் எனக்கூறப்படுகிறது.

ஒரு மனிதன் பிறப்பதற்கு முன்பே ஸம்ஸ்காரம் என்னும் சடங்குகள் ஆரம்பமாகின்றன. ஒரு மனிதன் கருவில் உருவாகும் போதே நல்ல உயிர் பண்புகளோடு உருவாக வேண்டும் என்பதே சடங்குகளின் நோக்கமாகும். ஸம்ஸ்காரங்கள் நாற்பது என்றாலும் அவற்றில் முக்கியமானவை பதினாறு ஆகும், ஸோடச என்றால் பதினாறு என்று பொருள் படும். அவை பின்வருமாறு அமையும்.

1. கர்ப்பதானம்
2. பும்ஸவனம்
3. சீமந்தம்
4. ஜாதககர்மம்
5. நாமகரணம்
6. சூரிய சந்திர கோதரிசனம்

7. அன்னப்பிராசனம்
8. அப்த பூர்த்தி
9. மயிர்கழித்தல்
10. காது குத்துதல்
11. அரைநாண் பூட்டுதல்
12. அக்ஷராப்பியாசம்
13. உபநயனம்
14. காண்டோபக் கிரமணம்
15. சமாவர்த்தனம்
16. விவாகம்

ஒருவன் எட்டுவிதமான ஆத்ம குணங்களோடு நாற்பது ஸம்ஸ்காரங்களையும் கடை பிடித்து வருவானாகில் அவன் பிரம்மலோகத்தை அடைவான் எனக்கூறப்படுகிறது. எட்டுவிதமான ஆத்ம குணங்கள் பின்வருமாறு—

1. தயா – இரக்கம்
2. க்ஷமா – மன்னிக்கும் தன்மை
3. அனஸூயா – பொறாமை இல்லாமை
4. ஸௌசம் – உடல், வாக்கு, மனம், சுத்தமாக இருப்பது.
5. அநாயாஸம்– தனக்கும், பிறருக்கும் துன்பம் தராமல் இருப்பது.
6. மங்களம் – ஆச்சாரமாக நடந்து கொள்வது
7. அகார்பண்யம் – தைரியமாக இருப்பது, இறைநாட்டத்துடன் இருப்பது, தானதர்மம் செய்வது.
8. அஸ்ப்ருஹா – எதன்மீதும் பற்று இல்லாமல் இருப்பது.

ஸம்ஸ்காரங்களைச் செய்யும் போது நல்ல சுபமுகூர்த்தத்தில் செய்ய வேண்டும் எனக்கூறப்படுகிறது. நல்ல நேரம் பார்த்து ஸம்ஸ்காரங்களைச் செய்வதற்காகவே ஜோதிடத்தில் முகூர்த்தம் என்னும் பிரிவு ஏற்படுத்தப்பட்டுள்ளது.

# பங்குனி உத்திர விரதத்தின் பெருமை

பங்குனி மாதம் உத்திரம் நட்சத்திரம் வரும் நாளில் பங்குனி உத்திரம் கொண்டப்படுகிறது.

**பங்குனி உத்திர நாளில் நடைபெறும் திருமணங்கள்-**

1. முருகன் – தெய்வயானை திருமணம்
2. ஸ்ரீராமர் – சீதை திருமணம்
3. சுந்தரேஸ்வரர் – மீனாட்சி திருமணம்
4. ஆண்டாள் – ரங்கமன்னார் திருமணம்
5. இந்திரன் – இந்திராணியை அடைந்த நாள்
6. பிரம்மன் சரஸ்வதியை அடைந்த நாள்
7. ரதிக்காக மன்மதனை சிவபெருமான் எழுப்பித்தந்தநாள்.

எனவே பங்குனி மாதம் உத்திரம் நட்சத்திரம் வரும் நாளில் திருமணம் ஆகாத ஆண், பெண்கள் விரதம் அனுஷ்டித்தால் விரைவில் திருமண பாக்யம் கூடி வரும்.

**பெண் பார்க்கச் செல்வதற்கு உகந்த நட்சத்திரம்-**

அஸ்தம் நட்சத்திரம் வரும் நாளில் அம்பாளை வணங்கிவிட்டு, சத்யபாமாவைப் பெண் பார்க்கச் சென்றாராம் அதனாலேயே சத்யாபமாவை தடங்கலின்றி மணந்தாராம்.



## 15. விரதங்கள் அனுஷ்டிப்பதால் என்ன பயன்?

பெரும்பாலும் விரதங்கள் குறிப்பிட்ட சில நாட்களில் மட்டுமே அனுஷ்டிக்கப்படுகிறது. மற்ற நாட்களில் விரதம் அனுஷ்டித்தால் அது விரதமாக கருதப்படுவதில்லை . அதை பட்டினி என்றுதான் கூறுவார்கள், விரதங்கள் ஏன் ஒரு குறிப்பிட்ட நாட்களில் மட்டுமே அனுஷ்டிக்கப்படுகின்றன. என்பதை ஆராய்ந்தால் ஒரு உண்மை விளங்கும்.

பொதுவாக பட்டினிக் கிடக்கும் போது நம் உடலுக்கு தேவையான சக்தி கிடைப்பதில்லை. எனவே பட்டினி கிடக்கும் சமயங்களில் உடலானது தனக்கு தேவையான சக்தியை இயற்கையிலிருந்து உறிஞ்சிக்கொள்கிறது. அதாவது உணவு மூலம் உடலுக்குத்தேவையான சக்தி கிடைக்கிறது. உணவு உண்ணாத சமயங்களில் உடலில் சக்தி தேவைஏற்படுகிறது. அந்த சக்தி தேவையை ஒரு காலியான பாத்திரத்திற்கு ஒப்பிடலாம். எப்பொழுதெல்லாம் உடல் காலியாக இருக்கிறதோ அப்பொழுது இயற்கை சக்தி அந்தகாலியிடத்தை நிரப்பும் தன்மையுடையது.

பூமியில் ஒரு குறிப்பிட்ட சமயத்தில் ஒரு குறிப்பிட்ட நட்சத்திரம் அல்லது ஒரு குறிப்பிட்ட கிரகத்தின் தாக்கம் அதிகமாக இருக்கும். எனவே நமக்கு தேவையான நட்சத்திரம் அல்லது கிரகத்தின் சக்தியை நாம்விரதம் அனுஷ்டிப்பதன் மூலம் நம் உடலில் கிரகித்துக்கொள்ளமுடியும். இதன் காரணத்தினாலேயே விரதங்கள் திதி, நட்சத்திரம், வாரம், குறிப்பிட்ட கிரக நிலை இவைகளை அனுசரித்து அனுஷ்டிக்கப்படுகிறது. விரதங்கள் அனுஷ்டிப்பதன் மூலம் கிரக தோஷங்களிலிருந்து விடுபட முடியும் என்பதை இதன் மூலம் அறிய முடிகிறது. கிரகதோஷ நிவர்த்திக்காக அனுஷ்டிக்க வேண்டிய விரதங்களைப் பற்றி பார்ப்போம்.

**1. அமாவாசை சோமவார விரதம்-**

எந்த மாதத்திலாவது அமாவாசையும் திங்கள் கிழமையும் சேர்ந்து வரும் நாளில் இந்த விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும் இந்த விரதத்தை திருமணம் ஆன பெண்கள் அனுஷ்டித்து வந்தால் தீர்க்க சுமங்கலியாக இருக்கலாம். ஜாதகத்தில் மாங்கல்ய தோச முடைய பெண்கள் இந்தவிரதத்தை அனுஷ்டிப்பது நல்லது.

**2. உமா மஹேஸ்வர விரதம்-**

புரட்டாசி மாதம் பௌர்ணமியன்று இவ்விரதம் அனுஷ்டிக்க வேண்டும். இவ்விரதத்தை ஆண்கள் தங்கள் மனைவியரின் ஆயுள் விருத்திக்காக அனுஷ்டிக்க வேண்டும் . ஆண்களுடைய ஜாதகத்தில் களத்திரத்திற்கு அற்ப ஆயுள் என்றிருந்தால் இந்த விரதத்தை ஆண்கள் அனுஷ்டிக்கலாம் மேலும் கணவன் மனைவி பிரியாமல் இருக்கவும், பிரிந்த மனைவியை கூடவும் இந்த விரதத்தை அனுஷ்டிக்கலாம்.

**3. காரடையான் நோன்பு-**

மாசி மாதம் கடைசி நாளன்று இவ்விரதம் அனுஷ்டிக்க வேண்டும். சாவித்திரி தனது கணவன் சத்தியவான் நீண்ட ஆயுளுடன் வாழ வேண்டும். என்று இந்நோன்பினை அனுஷ்டித்து வெற்றி கண்டாள்.

காஞ்சி காமாட்சி கம்பா நதி தீரத்தில், ஈசனை மண்ணினால் லிங்கம் செய்து பூஜித்தாள் அப்பொழுது பிரளயம் வந்தது. அந்த பிரளயத்திலிருந்து சிவலிங்கத்தைக் காப்பாற்ற இந்த விரதத்தைச் செய்ததால் ஈசன் விரத மகிமையால் அம்பாளுக்கு தரிசனம் தந்து திருக்கல்யாணம் செய்து கொண்டாள் , காமாட்சி ஏகாம்பரேசுவரர் திருக்கல்யாணம் வைபவத்தால் இந்த விரதத்திற்கு காமாட்சி விரதம் என்று பெயர். ஜாதகத்தில் மாங்கல்ய தோச முடைய பெண்கள் இந்த விரதத்தை அனுஷ்டித்து வந்தால் கணவனுடைய ஆயுள் விருத்தியாகும்.

**4. மங்கள கௌரி விரதம்-**

ஆவணி மாதம் செவ்வாய் கிழமைகளில் இவ்விரதம் அனுஷ்டிக்க வேண்டும் மாங்கல்ய தோசமுடைய பெண்கள் மாங்கல்ய பலத்திற்காக இவ்விரதத்தினை அனுஷ்டிக்கலாம்.

**5. கேதாரீஸ்வரர் விரதம்**

ஐப்பசி மாதம் தேய்பிறை சதுர்த்தியில் அனுஷ்டிக்கப்படும் விரதம் இது. கேதாரீஸ்வரரை நோக்கி கௌரிவிரதமிருந்து ஈசனின் பாதி உடம்பை பெற்ற நாள் இது என்பதால் இந்நாளை கேதார கௌரி விரதநாள் என்றும் கூறுவர். இந்நாளில் திருமணமான பெண்கள் விரதம் அனுஷ்டித்தால் தம்பதிகளிடையே அன்யோன்யம் ஏற்படும்.

**6.ஸம்பத் சுக்கிர வாரவிரதம்**

வெள்ளிக்கிழமை தோறும் இவ்விரதத்தை கடைப்பிடிக்கலாம் புத்திர தோசமுடைய பெண்கள் இவ்விரதத்தினை கடைபிடித்து வந்தால் விரைவில் புத்திர பாக்கியம் உண்டாகும்.

**7. ஸ்வர்ண கௌரி விரதம்**

ஆவணி மாதம் வளர்பிறை திரிதியை திதியன்று இந்த விரதத்தினை அனுஷ்டிக்க வேண்டும் இந்த விரதத்தைப் பெண்கள் தங்களுடைய மாங்கல்ய பலத்திற்காகவும் , பதிவிரதாதன்மையைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவும் அனுஷ்டிக்க வேண்டும்.

**8. சதுர்த்தி விரதம்**

சதுர்த்தி திதி வரும்நாட்களில் இவ்விரதம் அனுஷ்டிக்க வேண்டும். குறிப்பாக செவ்வாய்க்கிழமையும் சதுர்த்தி திதியும் கூடி வரும் நாளில் கடைபிடிக்க வேண்டும். ஜாதகத்தில் திருமணத்தடையுள்ள பெண்கள் இவ்விரதம் அனுஷ்டித்தால் நல்ல கணவனை அடையலாம்.

**9. ஸ்கந்த சஷ்டி விரதம்-**

ஐப்பசி மாதம் வளர்பிறை சஷ்டி யன்று விரதமிருந்து முருகனை வழிபட்டால் புத்திர பாக்கியம் ஏற்படும். ஒவ்வொரு மாதம்வரும் சஷ்டி அன்றும் விரதம் அனுஷ்டிக்கலாம்.

**10. சுக்கில சஷ்டி விரதம்**

ஏதாவது ஒரு மாதத்தில் வளர்பிறை சஷ்டி திதியன்று விரதமிருந்து நாகராஜ பூஜை செய்தல் வேண்டும் . ஜாதகத்தில் நாகதோஷம் உடையவர்கள் இவ்விரதத்தைக் கடைபிடித்தால் நாக தோஷம் விலகும்.

**11. பிரதோஷ விரதம்**

ஒவ்வொரு மாதமும் வளர்பிறை, தேய்பிறை திரயோதசி நாட் களில் இவ்விரதமிருந்து சூரிய அஸ்தமனத்திற்கு முன் 3 3/4 நாழிகை உள்ள நேரத்தில் சிவாலயங்களுக்கு சென்று சிவனை பூஜிக்க வேண்டும். ஜாதகப்படி மாரக தோசம், கண்டக தோசம் உடையவர்கள் இவ்விரதத்தினை கடைபிடிக்கலாம்.

**12. நாக பஞ்சமி**

ஆடிமாதம் வளர்பிறை பஞ்சமியில் இவ்விரதம் அனுஷ்டிக்க வேண்டும். இவ்விரத நாளன்று புற்றுக்குப் பால் ஊற்றி நாகங்களை வணங்கினால் புத்திர பாக்கியம் இல்லாதவர்களுக்கு புத்திர பாக்கியம் உண்டாகும்.

**13. நாக சதுர்த்தி**

ஆடி மாதம் வரும் சதுர்த்தி திதியில் இவ்விரதம் அனுஷ்டிக்க வேண்டும். ஆடி மாதம் சதுர்த்திக்கு நாக சதுர்த்தி என்று பெயர். எனவே ஜாதகத்தில் நாக தோசம் இருப்பவர்கள் அதற்குப் பரிகாரமாக இவ்விரதத்தினை அனுஷ்டிக்கலாம்.

**14. பங்குனி உத்திரவிரதம்**

பங்குனி மாதத்தில் உத்திர நட்சத்திரம் பௌர்ணமியில் வரும் நாளில் இவ்விரதம் அனுஷ்டிக்கப்படுகிறது. இதனைக்கல்யாண விரதம் என்றும் கூறுவர். திருமணமாகாத ஆண்கள், பெண்கள் அனைவரும் இவ்விரதத்தினைக் கடைபிடிக்கலாம்.

**15. வளம் தரும் தரும் வார விரதங்கள்-**

எந்த கிரகத்திற்கு தோச பரிகாரம் செய்ய வேண்டுமோ அந்த கிரகத்திற்குரிய கிழமையில் விரதமிருந்து மாலை நேரம் நவகிரக பிரதிஷ்டை உள்ள கோயிலுக்குச் சென்று அர்ச்சனை அபிசேகம் செய்து வழிபட தோசம் நீங்கும்.

சூரியன் – ஞாயிற்றுக்கிழமை

சந்திரன் – திங்கள் கிழமை

செவ்வாய்– செவ்வாய்க்கிழமை

புதன்– புதன் கிழமை

குரு – வியாழக்கிழமை

சுக்கிரன் – வெள்ளிக்கிழமை

சனி– சனிக்கிழமை

ராகு – சனிக்கிழமை

கேது – செவ்வாய் கிழமை

அந்தந்த கிரகங்களுக்குரிய வஸ்திரம், மலர், தானியம் இவைகளைக் கொண்டு அர்ச்சனை செய்வத நல்லது.

# 16. சிலை வழிபாடு செய்வது அறியாமையா?

மனித உடல் பஞ்ச பூதங்களால் ஆனது என்பதை நாம்அறிவோம். பஞ்ச பூதங்களும் இணைந்து அல்லது கலந்து நிற்கும் பொருளில் ஜீவ ஐக்கியம் எளிதில் ஏற்படும். மனிதன் சிற்றின்பத்தில் ஈடுபடும்போது பஞ்ச பூதங்களும் ஒன்றாக ஒடுங்கி நிற்கும். அந்த சமயத்தில் வெளிப்படும் சுக்கிலத்திலும் சுரோணத்திலும் பஞ்ச பூதங்களும் கலந்து நிற்கும். அந்த சுக்கிலத்தில் ஜீவ துடிப்பு இருக்கும். அந்த சுக்கிலமும், சுரோணிதமும் கலந்து ஒரு ஜீவன் உருவாகிறது.

இயற்கையில் பஞ்ச பூதங்களும் கலந்து நிற்கும் ஒரே பொருள் கருங்கல்லாகும். இதன் காரணத்தினாலேயே கோயில் சிலைகள் கருங்கற்களில் வடிவமைக்கப்படுகின்றன. அதாவது கருங்கல்லில் ஒரு ஜீவனை நிறுத்தி நிலைபெறச் செய்வது சாத்தியம் என்பதை நம் முன்னோர்கள் அறிந்திருந்தார்கள் கோயில்களில் சிலைகளை நிறுவும் போது, மேலுலகத்தில் உள்ள தேவதைகளை கவர்ந்திழுத்து, அத்தேவதைகளை கருங்கல்லாலான சிலைகளில் புகச் செய்து அதிலேயே நிரந்தரமாக தங்கும் படி செய்கிறார்கள். இதற்கு பிராண பிரதிஷ்டை என்று பெயர். இதை ஆவாஹனம் செய்தல் என்றும் கூறுவார்கள்.

பஞ்ச பூதங்களாலான மனித உடம்பில் எப்படி உயிரோட்டம் இருக்கிறதோ, அதே போல் பஞ்ச பூதங்களாலான கருங்கல் சிலைகளிலும் உயிரோட்டம் இருக்கும். மனிதனுக்கு எப்படி ஐம்புலன்களும் இயங்குகின்றவோ, அதே போல் சிலைகளுக்கும் ஐம்புலன்களும் இயங்கிக்கொண்டிருக்கும் ஆலயங்களில் பிரார்த்தனை செய்யும் போது நம் பிரார்த்தனையை அங்குள்ள தெய்வம் கேட்டுக்கொண்டும். பார்த்துக் கொண்டும் தான் இருக்கும் நம்முடைய பிரார்த்தனை நியாயமானதாக இருக்கும் பட்சத்தில் நம்முடைய வேண்டுதல் வைக்கப்படும் நியாயமற்ற பிரார்த்தனைகளுக்கு எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்படாது.

கோயில்களில் கருங்கல் சிலைகளைத்தவிர பஞ்சலோக சிலைகளும் உண்டு. பெரும்பாலும் கருங்கல் நிலை மூலவராகவும், பரிவார தேவதைகளாகவும் கோயிலில் நிறுவப்பட்டிருக்கும் பஞ்சலோக சிலைகளிலும் பஞ்ச பூதங்களும் கலந்துநிற்கும் எனவே பஞ்சலோகச் சிலைகளிலும் ஜீவ ஐக்கியத்தை ஏற்படுத்த முடியும்.

மூல விக்கிரத்தில் ஆவாஹணம் செய்து வைக்கப்பட்டுள்ள தேவதையை உற்சவராக பஞ்சலோக வீதிகளில் எடுத்துச்செல்லும் போது ஊர் முழுவதும் அந்த தேவதையின் பார்வை என்பது தத்துவார்த்தமான உண்மையே.



# 17. மிருக அதிர்வுகள்

மிருகங்களிலிருந்து நன்மை பயக்கும் அல்லது தீமைபயக்கும் அதிர்வுகள் வெளிப்படுகின்றன அவைகளைப் பார்ப்போம்

**பசு**

பசுவை காமதேனு என்று அழைக்கிறார்கள் இந்துக்கள் காமுதேனு என்றால் கேட்டதை எல்லாம் கொடுப்பவள் என்று அர்த்தம். பசுக்கள் சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்திகின்றன. வீடுகளில் பசு வளர்த்தால் அவ்வீட்டில் உள்ள எல்லா தோசங்களும் நீங்கும். பசுஞ்சாணம் ஒரு கிருமி நாசினியாகும். இதனால் தான் வீட்டை பசுசாணமிட்டு மெழுகுகிறார்கள்.

**காளை**

காளைமாடு சிவனின் வாகனமாகும். பசுவைப்போல் காளை மாடுகளும் சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்துகின்றன.

**நாய்கள்**

இவை சாஸ்தாவின் அம்சம் என சிலர் கூறுவர் ஒருசிலர் தத்தாத்திரேயரின் அம்சம் என்பர் இவை சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும்.

**பூனைகள்**

கருப்பு நிற பூனைகள் தீய் அதிர்வுகளையும், வெள்ளைநிற பூனைகள்சாத்வீக அதிர்களையும் வெளிப்படுத்தும். பலதீய சக்திகள் கருப்பு பூனையின் உருவில் இருக்கும்.

**ஆடுகள்**

ஆடுகள் சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்துபவை ஆடுவளர்ப்பவர்களுக்கு பெரும்பாலும் நோய்கள் வராது. குறிப்பாக காச நோய் இவர்களை அண்டவே அண்டாது.

**எருமை**

தீய அதிர்வுகளை வெளிப்படுத்தும், அபசகுனமாக கருதப்படுகிறது.

**கழுதை**

தீய அதிர்வுகளை வெளிப்படுத்தும்

**பன்றி**

தீய அதிர்வுகளை வெளிப்படும் தீய சக்திகள் பன்றிகளின் உருவில் இருக்கும்.

**குரங்கு**

சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும். தீய சக்திகளை விரட்டி அடிக்கும்.

**மான்**

சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும். கொம்பு சித்தமருத்துவத்தில் பயன் படுத்தப்படுகிறது. மான்தோல் , தியானம் செய்யும்போது ஆசனமாக பயன்படுத்தப்படுகிறது.

**புலி**

சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும் இதன் தோல் தியானம் செய்யும் போது ஆசனமாக பயன்படுத்தப்படுகிறது.

**சிங்கம்**

சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும்.

**கரடி**

தீய அதிர்வுகளை வெளிப்படுத்தும்.

**ஒநாய்**

தீய அதிர்வுகளை வெளிப்படுத்தும்

**யான்னை**

சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும்

மிருகங்களில் பசு, பால்தருகிறது, அதன் சாணாம் உரமாக பயன்படுகிறது. காளை மாடு , வண்டி இழுக்கிறது வயல்களில் ஏர் இழுக்கிறது. நாய் வீட்டை காவல்காக்கிறது. இப்படி மிருகங்கள் மனிதனுக்கு பல வழிகளில் உதவியாக இருக்கின்றன. அத்தகைய மிருகங்களை வதைப்பது பாவமாகும். தெய்வாம்சம் உள்ள மிருகங்களையே நம்மவர்கள் வீட்டுப் பிராணிகளாக பார்த்து வந்துருக்கிறார்கள். ஆகவே மிருகவதை குறிப்பாக பசுவதை, யானை, புலி, சிங்கம் இவைகளை வேட்டையாடுவது தெய்வ குற்றமாகும் ஆகவே மிருகங்களைப் பேணிகாப்பது ஒரு வகையான பூஜையாகும், இறைவனுக்குச் செய்யும் சேவையாகும்.



# 18. தசா புக்திகளும் ஸ்ரீமத் இராமாயண பாராயணம் செய்வதால் உண்டாகும் பரிகாரங்களும்

ஒருவருக்கு தனது நடப்பு தசாபுக்திகள் அனுகூலமாக இல்லை எனத் தோன்றினால் அந்தந்த தசா புத்திகளுக்குரிய ஸர்கங்களை வால்மீகி ராமாயணத்திலிருந்து தேர்ந்தெடுத்து முறைப்படி 48 நாட்கள் தொடர்ந்து பாராயணம் செய்து வந்தால் தசா – புக்திகளால் ஏற்படும் தீய பலன்களிலிருந்து விடுபடலாம் எனக் கூறப்படுகிறது.

இதன் படி ஒரு நல்ல நாள் பார்த்து காலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்துககொண்டு, ஸ்நானம் செய்தபின்பு ராமர்கோவிலிலோ, அல்லது ஏதாவது ஒரு விஷ்ணு ஆலயத்திலோ அல்லது ராமர் படத்தின் முன்போ அல்லது ஏதாவது ஒரு சுத்தமான இடத்தில் அமர்ந்து முழு ஈடுபாட்டுடனும், நம்பிக்கையுடனும் நடப்பு தசா– புக்திகளுக்குரிய ஸ்ரீமத் இராமாயண ஸர்கங்களை பாராயணம் செய்யவேண்டும். சமஸ்கிருதம் தெரிந்தவர்களும், தமிழ்கிரந்த எழுத்துக்களை வாசிக்கத் தெரிந்தவர்களும் வால்மீகி ராமாயண ஸ்லோகங்களை சரியான உச்சரிப்புடன் பாராயணம் செய்யலாம். சமஸ்கிருதமோ, தமிழ் கிரந்த எழுத்துக்களோ வாசிக்கத் தெரியாதவர்கள் வால்மீகி இராமாயண ஸர்கத்தின் தமிழ் மொழிபெயர்ப்பை படித்தாலே போதும்.

முதலில் அந்தந்த தசா நாதனுக்குரிய நிவேதனப் பொருட்களை பகவானுக்கு நிவேதனம் செய்து கற்பூர ஹாரத்தி எடுத்து அந்த தசாநாதனுக்குப் பொதுவாய் உள்ள ஸர்க்கத்தை பாராயணம் செய்தபின்பு நடப்பு புக்திக்குரிய ஸர்க்கத்தை பாராயணம் செய்ய வேண்டும். பாராயண முடிவில் புக்திக்குரிய நிவேதனப் பொருட்களை நிவேதனம் செய்யவேண்டும்.

“தசா புக்திகளும் ஸ்ரீமத்இராமாயண பாராயணமும்” என்ற தலைப்பில் “ தி லிட்டில் ஃ பிளவர் கம்பெனி” யின்ர் ஒன்பது கிரகங்களின் தசா புக்திகளுக்கும் தனித்தனியாக மலிவு விலையில் புத்தங்கள் வெளியிட்டிருக்கிறார்கள். அப்புத்தங்கள் ஸ்ரீமத் இராமாயண ஸர்வங்களை பாராயணம் செய்பவர்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்கும்.

| தசா | புக்தி | காண்டம் | ஸர்கம் | கட்டம் | சமயம் | நைவேத்யம் |
|---|---|---|---|---|---|---|
| கேது | – | அயோத்யா காண்டம் | 50 | ராமன் குகன் சந்திப்பு | காலை | தேங்காய், நெய்யில் உளுந்து வடை |
| கேது | கேது | அயோத்யா காண்டம் | 22 | லக்ஷமணன்– ராமன் சமாதானம் | 3 வேளை | தேங்காய் |
| கேது | சுக்கிரன் | சுந்தர காண்டம் | 65 | சூடாமணியை அனுமன் கொடுத்தல் | 3 வேளை | கற்கண்டு |
| கேது | சூரியன் | அயோத்யா காண்டம் | 110 | வசிஷ்டர் நீதி உபதேசம் | 3 வேளை | கரும்பு |
| கேது | சந்திரன் | பால காண்டம் | 22 | ராமனுக்கு மந்திர உபதேசம் | 3 வேளை | பால் |
| கேது | செவ்வாய் | யுத்த காண்டம் | 100 | ராம பரத சந்திப்பு | 3 வேளை | சர்க்கரைப் பொங்கல் |
| கேது | ராகு | யுத்த காண்டம் | 67 | கும்பகர்ண வதம் | 3 வேளை | தேன் |
| கேது | குரு | யுத்த காண்டம் | 110 | ராவண வதம் | 3 வேளை | வாழைப்பழம் |
| கேது | சனி | அயோத்யா காண்டம் | 58 | தசரதர் வருத்தம் | 3 வேளை | நாவல் பழம் |
| கேது | புதன் | அயோத்யா கண்டம் | 119 | அனுசுயை ஆபரணம் தருதல் | 3 வேளை | திராக்ஷை |

| தசா | புக்தி | காண்டம் | ஸர்கம் | கட்டம் | சமயம் | நைவேத்யம் |
|---|---|---|---|---|---|---|
| சுக்கிரன் | – | பால காண்டம் | 73 | ராம சீதா விவாஹம் | காலை | கற்கண்டு, சுமங்கலி களுக்கு தாம்பூலம் |
| சுக்கிரன் | சுக்கிரன் | சுந்தர காண்டம் | 33 36 | அனுமன் சீதை சந்திப்பு | 3 வேளை | கற்கண்டு |
| சுக்கிரன் | சூரியன் | பால காண்டம் | 67 | சிவதனுஷை ராமன் முறித்தது | 3 வேளை | கரும்பு |
| சுக்கிரன் | சந்திரன் | உத்திர காண்டம் | 87 90 | சந்திரோதய தேவி தியானம் | 3 வேளை | பால் |
| சுக்கிரன் | செவ்வாய் | அயோத்யா காண்டம் | 115 | பரதனின் பாதுகா பூஜை | 3 வேளை | சர்க்கரைப் பொங்கல் |
| சுக்கிரன் | ராகு | ஆரண்ய காண்டம் | 4 | விராதனுடைய வதம் | 3 வேளை | தேன் |
| சுக்கிரன் | குரு | பால காண்டம் | 14 | புத்திர காமேஷ்டி யாக ஏற்பாடு | 3 வேளை | வாழைப் பழம் |
| சுக்கிரன் | சனி | யுத்த காண்டம் | 102 | ராமன் இந்திர தேர் ஏறுதல் | 3 வேளை | நாவல் பழம் |
| சுக்கிரன் | புதன் | உத்திர காண்டம் | 6 8 | தேவர்கள் வேண்டுகோள் | 3 வேளை | திராக்ஷை |
| சுக்கிரன் | கேது | யுத்த கண்டம் | 19 22 | விபீஷண பட்டாபிஷேகம் | 3 வேளை | தேங்காய் |

| தசா | புக்தி | காண்டம் | ஸர்கம் | கட்டம் | சமயம் | நைவேத்யம் |
|---|---|---|---|---|---|---|
| சூரியன் | – | பால காண்டம் | 43 | கங்காவதாரம் | காலை | கரும்பு |
| சூரியன் | சூரியன் | பால. காண்டம் | 45 | சமுத்திர மதனம் | காலை | கரும்பு |
| சூரியன் | சந்திரன் | ஆரண்ய காண்டம் | 18 | சூர்ப்பணகை மூக்கறு படுதல் | 3 வேளை | கரும்பு |
| சூரியன் | செவ்வாய் | அயோத்யா காண்டம் | 1 2 | ராம குணங்களை வர்ணித்தல் | 3 வேளை | கரும்பு சர்க்கரைப்பொங்கல் |
| சூரியன் | ராகு | பால காண்டம் | 36 | ஸ்கந்த ஜெனனம் | 3 வேளை | கரும்பு, தேன் |
| சூரியன் | குரு | அயோத்யா காண்டம் | 17 | ராமன் – தந்தை சந்திப்பு | 3 வேளை | வாழைப்பழம் |
| சூரியன் | சனி | யுத்த காண்டம் | 91 | இந்திரஜித் வதம் | 3 வேளை | நாவல் பழம் |
| சூரியன் | புதன் | பால காண்டம் | 75 | ராம பரசுராம ஸம்வாதம் | 3 வேளை | திராக்ஷை |
| சூரியன் | கேது | ஆரண்ய காண்டம் | 68 | ஜடாயு மோக்ஷம் | 3 வேளை | கரும்பு, தேங்காய் |
| சூரியன் | சுக்கிரன் | அயோத்யா கண்டம் | 118 | சீதா அனுசுயா ஸம்வாதம் | 3 வேளை | கற்கண்டு |

| தசா | புக்தி | காண்டம் | ஸர்கம் | கட்டம் | சமயம் | நைவேத்யம் |
|---|---|---|---|---|---|---|
| சந்திரன் | – | சுந்தர காண்டம் | 5 | அனுமன் சீதையை தேடல் | மாலை | பால் |
| சந்திரன் | சந்திரன் | உத்திர காண்டம் | 53 54 | நிருகன் பிராமண சாபம் அனுபவித்தல் | 3 வேளை | பால், சர்க்கரைப்பொங்கல் |
| சந்திரன் | செவ்வாய் | பால காண்டம் | 19 22 | பலா, அதிபலா மந்திரா உபதேசம் | 3 வேளை | சர்க்கரைப் பொங்கல் |
| சந்திரன் | ராகு | பால காண்டம் | 49 | அகல்யா சாபவிமோசனம் | 3 வேளை | பால், தேன் |
| சந்திரன் | குரு | பால காண்டம் | 1 | ஸங்க்ஷேப ராமாயணம் | 3 வேளை | பால் வாழைப்பழம் |
| சந்திரன் | சனி | ஆரண்ய காண்டம் | 30 | கரனுடைய வத்ம் | 3 வேளை | பால், நாவல் பழம் |
| சந்திரன் | புதன் | அயோத்யா காண்டம் | 26 30 | சீதையிடம் வன வாசம் பற்றி கூறல் | 3 வேளை | திராக்ஷை |
| சந்திரன் | கேது | ஆரண்ய காண்டம் | 6 | முனிவர்களுக்கு ராமன் அபயம் | 3 வேளை | தேங்காய் |
| சந்திரன் | சுக்கிரன் | யுத்த காண்டம் | 121 | ராமன் அயோத்தி திரும்புதல் | 3 வேளை | கற்கண்டு |
| சந்திரன் | சூரியன் | கிஷ்கிந்தா கண்டம் | 3 | அனுமன் ராமனை சந்தித்தல் | 3 வேளை | கரும்பு |

| தசா | புக்தி | காண்டம் | ஸர்கம் | கட்டம் | சமயம் | நைவேத்யம் |
|---|---|---|---|---|---|---|
| செவ்வாய் | – | பால காண்டம் | 36 37 | ஸ்கந்த ஜனனம் | காலை | சர்க்கரை பொங்கல் |
| செவ்வாய் | செவ்வாய் | உத்திர காண்டம் | 76 | சம்புகன் வதம் | 3 வேளை | சர்க்கரை பொங்கல் |
| செவ்வாய் | ராகு | யுத்த காண்டம் | 59 | முதல்நாள் யுத்தம் | 3 வேளை | சர்க்கரைப்பொங்கல் தேன் |
| செவ்வாய் | குரு | சுந்தர காண்டம் | 51 | அனுமன் ராவணனுக்கு நீதி | 3 வேளை | வாழைப்பழம் |
| செவ்வாய் | சனி | ஆரண்ய காண்டம் | 70 | கபந்தன் வதம், துதி | 3 வேளை | நாவல் பழம் |
| செவ்வாய் | புதன் | பால காண்டம் | 16 | புத்திர காமேஷ்டி யாகம் செய்தல் | 3 வேளை | திராக்ஷை |
| செவ்வாய் | கேது | யுத்த காண்டம் | 116 | சீதை அக்னி பிரவேசம் | 3 வேளை | தேங்காய் |
| செவ்வாய் | சுக்கிரன் | சுந்தர காண்டம் | 53 | அனுமனின் வால் கொளுத்தப்படல் | 3 வேளை | கரும்பு |
| செவ்வாய் | சூரியன் | பால காண்டம் | 23 | கௌசிகருடன் ராமன் செல்லல் | 3 வேளை | கரும்பு |
| செவ்வாய் | சந்திரன் | பால கண்டம் | 17 | தேவர்களின் அவதாரம் | 3 வேளை | பால் |

| தசா | புக்தி | காண்டம் | ஸர்கம் | கட்டம் | சமயம் | நைவேத்யம் |
|---|---|---|---|---|---|---|
| ராகு | – | யுத்த காண்டம் | 75 | லக்ஷ்மணன் பிழைத்தல் | காலை | தேன் |
| ராகு | ராகு | யுத்த காண்டம் | 50 | நாகபாச விமோசனம் | 3 வேளை | அப்பம், தேன் |
| ராகு | குரு | கிஷ்கிந்தா காண்டம் | 26 | சுக்ரீவ பட்டாபிஷேகம் | 3 வேளை | வாழைப்பழம் |
| ராகு | சனி | சுந்தர காண்டம் | 47 | அக்ஷகுமாரனின் வதம் | 3 வேளை | தேன், நாவல் பழம் |
| ராகு | புதன் | யுத்த காண்டம் | 120 | வானரங்கள் உயிர் பெறல் | 3 வேளை | திராக்ஷை |
| ராகு | கேது | பால காண்டம் | 76 | ராம பரசுராம ஸம்வாதம் | 3 வேளை | தேங்காய் |
| ராகு | சுக்கிரன் | சுந்தர காண்டம் | 65 | சூடாமணியைக் கொடுத்தல் | 3 வேளை | கற்கண்டு |
| ராகு | சூரியன் | பால காண்டம் | 70 | சீதா கல்யாணம் | 3 வேளை | கரும்பு |
| ராகு | சந்திரன் | உத்திர காண்டம் | 31 | ராவணன், கார்த்த வீர்யனிடம் தோல்வி | 3 வேளை | பால் |
| ராகு | செவ்வாய் | உத்திர கண்டம் | 16 | ராவணன் கைலா சத்தை பெயர்த்தல் | 3 வேளை | சர்க்கரைப்பொங்கல் |

| தசா | புக்தி | காண்டம் | ஸர்கம் | கட்டம் | சமயம் | நைவேத்யம் |
|---|---|---|---|---|---|---|
| குரு | – | சுந்தர காண்டம் | 1 | அனுமன் கடல் தாண்டுதல் | காலை | வாழைப்பழம், பொரி சர்க்கரை |
| குரு | குரு | ஆரண்ய காண்டம் | 5 | ராமன்–சரபங்கர் சந்திப்பு | 3 வேளை | வாழைப்பழம் |
| குரு | சனி | அயோத்யா காண்டம் | 16 | ராமன்–சுமந்திரர் ஸம்பாஷித்தல் | 3 வேளை | நாவல்பழம் |
| குரு | புதன் | பால காண்டம் | 15 16 | தேவர்கள், விஷ்ணுவை வேண்டல் | 3 வேளை | திராக்ஷை |
| குரு | கேது | சுந்தர காண்டம் | 61 62 | மது வனத்தை அழித்தல் | 3 வேளை | தேங்காய் |
| குரு | சுக்கிரன் | பால காண்டம் | 77 | சீதையுடன் ராமர் அயோத்தி வரல் | 3 வேளை | கற்கண்டு |
| குரு | சூரியன் | கிஷ்கிந்தா காண்டம் | 40 | சீதையைத்தேட வானரரை அனுப்பல் | 3 வேளை | கரும்பு |
| குரு | சந்திரன் | கிஷ்கிந்தா காண்டம் | 60 63 | சம்பாதி இறக்கை அடைதல் | 3 வேளை | பால் |
| குரு | செவ்வாய் | பால காண்டம் | 5 | அயோத்தி வர்ணனை | 3 வேளை | சர்க்கரைப்பொங்கல் |
| குரு | ராகு | ஆரண்ய கண்டம் | 75 | சபரி மோக்ஷம் | 3 வேளை | தேன் |

| தசா | புக்தி | காண்டம் | ஸர்கம் | கட்டம் | சமயம் | நைவேத்யம் |
|---|---|---|---|---|---|---|
| சனி | – | பால காண்டம் | 30 | யாக ஸம்ரக்ஷணம் | காலை | நாவல் பழம், திலான்னம் |
| சனி | சனி | சுந்தர காண்டம் | 48 | பிரம்மாஸ்திரம் அனுமன் கட்டுண்டது | 3 வேளை | நாவல் பழம் |
| சனி | புதன் | சுந்தர காண்டம் | 54 | இலங்கையை எரித்தல் | 3 வேளை | திராக்ஷை |
| சனி | கேது | கிஷ்கிந்தா காண்டம் | 6 | சுக்ரீவன் சீதை நகைகளை காட்டல் | 3 வேளை | தேங்காய் |
| சனி | சுக்கிரன் | சுந்தர காண்டம் | 38 | காகாசுரனின் விருத்தாந்தம் | 3 வேளை | கற்கண்டு |
| சனி | சூரியன் | கிஷ்கிந்தா காண்டம் | 66 | அனுமன் விராட் ரூபம், ஜாம்பவான் துதி | 3 வேளை | கரும்பு |
| சனி | சந்திரன் | பால காண்டம் | 26 | தாடகை வதம் | 3 வேளை | பால் |
| சனி | செவ்வாய் | கிஷ்கிந்தா காண்டம் | 50 53 | வானரர் சுயம் பிரபையை அடைதல் | 3 வேளை | சர்க்கரைப்பொங்கல் |
| சனி | ராகு | ஆரண்ய காண்டம் | 44 | மாரீச வதம் | 3 வேளை | தேன் |
| சனி | குரு | யுத்த கண்டம் | 1 | ராமன் அனுமனை புகழ்தல் | 3 வேளை | வாழைப்பழம் |

| தசா | புக்தி | காண்டம் | ஸர்கம் | கட்டம் | சமயம் | நைவேத்யம் |
|---|---|---|---|---|---|---|
| புதன் | – | சுந்தர காண்டம் | 35 | சீதைக்கு நம்பிக் –கை ஏற்படுதல் | காலை | திராக்ஷை பயறு சாதம் |
| புதன் | புதன் | பால காண்டம் | 29 | வாமனாவதாரம் | 3 வேளை | திராக்ஷை பயறு சாதாம் |
| புதன் | கேது | சுந்தர காண்டம் | 14 | அசோகவனத்தில் அனுமன் தேடுதல் | 3 வேளை | தேங்காய் |
| புதன் | சுக்கிரன் | ஆரண்ய காண்டம் | 9<br>10 | ராம சீதா ஸம்வாதம் | 3 வேளை | கற்கண்டு |
| புதன் | சூரியன் | யுத்த காண்டம் | 94 | இந்திரஜித் வதம் | 3 வேளை | கரும்பு |
| புதன் | சந்திரன் | அயோத்யா காண்டம் | 117 | அத்ரியுடன் ராமன் | 3 வேளை | கரும்பு |
| புதன் | செவ்வாய் | சுந்தர காண்டம் | 29 | சீதைக்கு சுப சகுனம் தோன்றல் | 3 வேளை | திராக்ஷை சர்க்கரைப்பொங்கல் |
| புதன் | ராகு | யுத்த காண்டம் | 28 | சுகசாரணர்கள் படலம் | 3 வேளை | தேன் |
| புதன் | குரு | அயோத்யா காண்டம் | 74 | பரதன் கைகேயி யை கோபித்தல் | 3 வேளை | வாழைப்பழம் |
| புதன் | சனி | யுத்த கண்டம் | 111 | மண்டோதரி வருத்தம் | 3 வேளை | நாவல் பழம் |

# 19. தசா புத்தி சாந்தி பரிகாரங்கள்

ஒருவருக்கு மாரகாதிபதிகள் மற்றும் பாதகாதிபதிகளின் தசா புத்தி நடப்பில் உள்ள காலங்களில் மரணமோ அல்லது மரணத்திற்கு ஒப்பான கண்டங்களோ ஏற்பட வாய்ப்புகள் அதிகமாகும். நோய் நொடிகளாலும் துன்பங்கள் ஏற்படலாம். அத்தகைய காலக் கட்டங்களில் எத்தகைய பரிகாரங்கள் செய்யவேண்டும் என்பது கீழே தரப்பட்டுள்ளது.

கீழே கொடுக்கப்பட்டுள்ள தசா – புத்தி காலங்கள் ஒருவருக்கு மாரகாதிபதிகள் மற்றும் பாதகாதிபதிகளின் தசா – புத்தி காலங்களாக அமையும் பட்சத்தில் அவற்றிக்கு எதிலே கொடுக்கப்பட்டுள்ள பரிகாரங்களை செய்து கொண்டால் தீய பலன்கள் நடக்காமல் போகும்.

**தசா புத்தி பரிகாரம்**

சூரியதசை தங்கத்தாமரை தானம்.

சூரிய தசை– சூரிய புத்தி –சூரியநமஸ்காரம் , ருத்ராபிசேகம், சிவந்த பசு தானம்

சூரிய தசை– சந்திர புத்தி–துர்கைஜெபம், வெள்ளைபசு தானம்.

சூரிய தசை– செவ்வாய் புத்தி – சுப்பிரமணிய ஜெபம்

சூரிய தசை– ராகு புத்தி – துர்கை ஜெபம், தீப ஜெபம்

சூரிய தசை–குரு புத்தி – ருத்ர ஜெபம்

சூரிய தசை– சனிபுத்தி– மிருத்யுஞ்ஜெபம்

சூரிய தசை– புதன் புத்தி –,விஷ்ணு சகஸ்ரநாம ஜெபம்

சூரிய தசை–கேது புத்தி – சூரிய வழிபாடு

சூரிய தசை–சுக்கிரபுத்தி – லட்சுமி சகஸ்ரநாம ஜெபம்

சந்திர தசை – வெள்ளித் தாமரை தானம்

சந்திர தசை – சந்திர புத்தி – வெள்ளித் தாமரை தானம்

சந்திர தசை – செவ்வாய் புத்தி – சுப்பிரமணிய பூஜை , சூரிய நமஸ்காரம்

சந்திர தசை – ராகு புத்தி – மிருத்யுஞ்செய ஜெபம், தீப தானம்

சந்திர தசை –குரு புத்தி – துர்கை ஜெபம், பசு தானம்.

சந்திர தசை – சனி புத்தி– விஷ்ணு சகஸ்ர நாம ஜெபம், பெண் எருமை தானம், தீப தானம்

சந்திர தசை – புத புத்தி – லட்சுமி நாராயண ஜெபம்

சந்திர தசை – கேது புத்தி – தீப தானம்

சந்திர தசை – சுக்கிர புத்தி – லட்சுமி பூஜை, ருத்ர பூஜை வெள்ளைப்பசு தானம், பெண் எருமை தானம்

சந்திர தசை – சூரிய புத்தி –துர்க்கா ஜெபம், பசு தானம்

செவ்வாய் தசை– தாமிரத் தாமரை தானம்

செவ்வாய் தசை – செவ்வாய் புத்தி– சுப்பிரமணிய ஜெபம்

செவ்வாய் தசை – ராகு புத்தி– மிருத்யுஞ்செய ஜெபம்

செவ்வாய் தசை –குரு புத்தி – பொன் தானம், சிவ அஷ்டோத்திர ஜெபம்

செவ்வாய் தசை – சனி புத்தி – மிருத்யுஞ்செய ஜெபம்

செவ்வாய் தசை – புதன்புத்தி–சூரிய நமஸ்காரம் , விஷ்ணு சகஸ்ரநாம , ஜெபம் ,குதிரை தானம்.

செவ்வாய் தசை –கேது புத்தி – ருத்திர ஜெபம், தீப தானம்

செவ்வாய் தசை – சுக்கிர புத்தி –துர்கா ஜெபம்

செவ்வாய் தசை – சூரிய புத்தி – பசு தானம், பொன் மலர் தானம்

செவ்வாய் தசை – சந்திர புத்தி–கௌரி பூஜை, துர்கா ஜெபம்

ராகு தசை– தங்கப்பாத்திரம் தானம்

ராகு தசை– ராகு புத்தி – நாகவிக்கிரக தானம்

ராகு தசை– குரு புத்தி – ருத்திர ஜெபம் , பொன் தானம்

ராகு தசை– சனி புத்தி – துர்கா ஜெபம், மிருத்யுஞ்செய ஜெபம், அஸ்வதாம பூஜை

ராகு தசை – புத புத்தி – விஷ்ணு விக்கிரக தானம், விஷ்ணு சகஸ்ரநாம ஜெபம்

ராகு தசை– கேது புத்தி – நாக பூஜை, நாக விக்கிரக தானம்

ராகு தசை – சுக்கிர புத்தி – துர்கா பூஜை, லட்சுமி பூஜை, பசு தானம்

ராகு தசை– சூரிய புத்தி – சூரிய நமஸ்காரம், எள் தானம், பொன்மலர் தானம்.

ராகு தசை – சந்தி புத்தி – மிருத்யுஞ்செய ஜெபம்

ராகு தசை– செவ்வாய் புத்தி – சுப்பிரமணிய பூஜை, நாகவிக்கிரக தானம்

குரு தசை – பொன் தானம்

குரு தசை– குரு புத்தி – ருத்ர ஜெபம்

குரு தசை– சனி புத்தி – மிருத்யுஞ்செய ஜெபம், தீபதானம்

குரு தசை – புத புத்தி – பசு தானம்

குரு தசை– கேது புத்தி – ருத்ர ஜெபம்

குரு தசை – சுக்கிர புத்தி – பசு தானம், லட்சுமி நாராயண விக்கிரக தானம்

குரு தசை– சூரிய புத்தி – சூரிய நமஸ்காரம் , தீப தானம்

குரு தசை – சந்திர புத்தி – தீப தானம்

குரு தசை – செவ்வாய் புத்தி – பொன் தானம், தீப தானம்

குரு தசை – ராகு புத்தி– திலஹோமம், வெள்ளியால் செய்யப்பட்ட பெண் எருமை தானம்.

சனி தசை – தில ஹோமம் , வெள்ளியால் செய்யப்பட்ட பெண் எருமை தானம்.

சனி தசை –சனி புத்தி – மிருத்யுஞ்செய ஜெபம்,

சனி தசை – புத புத்தி – பெண் எருமை தானம்

சனி தசை – கேது புத்தி – மிருத்யுஞ்செய ஜெபம்

சனி தசை – சுக்கிர புத்தி – தீப தானம்

சனி தசை– சூரிய புத்தி – சூரிய நமஸ்காரம் , பொன் மலர் தானம்

சனி தசை – சந்திர புத்தி – வெள்ளைப்பசு தானம்

சனி தசை – செவ்வாய் புத்தி – பெண் எருமை தானம்

சனி தசை – குரு புத்தி – மிருத்யுஞ்செய ஜெபம்

புத தசை – பொன் பாத்திரம் தானம்

புத தசை – புத புத்தி – துர்கா ஜெபம், விஷ்ணு சகஸ்ர நாம ஜெபம், லட்சுமி நாராயண விக்கிர தானம்.

புத தசை – கேது புத்தி – பெண் எருமை தானம்

புத தசை – சுக்கிர புத்தி – துர்கா ஜெபம், லட்சுமி பூஜை, வெண்பசு தானம்.

புத தசை – சூரிய புத்தி – சூரிய நமஸ்காரம்

புத தசை – சந்திர புத்தி – துர்கா ஜெபம்,துர்கை விக்கிரக தானம்

புத தசை – செவ்வாய்புத்தி – மிருத்யுஞ்செய ஜெபம், சுப்பிரமணிய ஜெபம்.

புத தசை – தீப தானம், ருத்ர ஜெபம்

புத தசை – குரு புத்தி – மிருத்யுசெய ஜெபம்

புத தசை – சனி புத்திய – பெண் எருமை தானம்

கேது தசை – வெள்ளிப்பாத்திரம் தானம்

கேது தசை – கேது புத்தி – மிருத்யுஞ்செய ஜெபம்

கேது தசை – சுக்கிர புத்தி – துர்கா ஜெபம், துர்கா பூஜை

கேது தசை – சூரிய புத்தி – வெள்ளை எருது தானம், நந்தி விக்கிரக தானம், சிவாஷ்டேத்திர ஜெபம்

கேது தசை – ராகு புத்தி – எருமை தானம், பூசணிக்காய் தானம்

கேது தசை – குரு புத்தி– ருத்ர ஜெபம்

கேது தசை – சனி புத்தி – மிருத்யுஞ்செய ஜெபம்

கேது தசை – புத புத்தி– தீப தானம்

சுக்கிர தசை – வெள்ளிப் பாத்திரம் தானம்

சுக்கிர தசை – சுக்கிர புத்தி – ருத்ர ஜெபம், வெண்பசு தானம்

சுக்கிர தசை – சூரிய புத்தி – சூரிய நமஸ்காரம்

சுக்கிர தசை – சந்திர புத்தி – துர்கா ஜெபம்

சுக்கிர தசை – செவ்வாய் புத்தி – சுப்பிரமணிய பூஜை

சுக்கிர தசை– ராகு புத்தி – துர்கா ஜெபம், பூசணிக்காய் தானம்.

சுக்கிர தசை– குரு புத்தி – சிவ அஷ்டோத்திர ஜெபம், பெண் எருமை தானம், பசு தானம்

சுக்கிர தசை – சனி புத்தி– மிருத்யுஞ்செய ஜெபம், கரும் பசு தானம், பெண் எருமை தானம்

சுக்கிர தசை – புத தசை – தில ஹோமம் ,விஷ்ணு சகஸ்ர நாம ஜெபம்

சுக்கிர தசை,– கேது புத்தி – மிருத்யுஞ்செய ஜெபம், துர்கா ஜெபம், தீப தானம்

# 20. ஜெனன நட்சத்திர தோசங்களும் பரிகாரங்களும்

ஒரு சில நட்சத்திரங்களில் குழந்தைகள் பிறந்தால் தோசமாகக் கருதப்படுகிறது. தோசமுள்ள நட்சத்திரக் கால்களில் குழந்தைகள் ஜெனனமானால். தாய், தந்தையருக்கோ அல்லது சிசுவுக்கோ கண்டம் ஏற்படும் எனவும் கூறப்படுகிறது. தோசமுள்ள நட்சத்திரங்களின் விவரங்கள் கீழே தரப்பட்டுள்ளது.

அஸ்வினி 1 –ம் மாதம் – தந்தைக்கு கண்டம், புத்திரருக்குக் கண்டம்

அஸ்வினி 2–ம் பாதம் – தாய்க்கு கண்டம்

அஸ்வினி 3– ம் பாதம் – தனநாசம்

அஸ்வினி 4–ம் பாதம் – சௌக்யம்

பரணி 1 –ம் பாதம், 2ம்பாதம், 3ம் பாதம், குழந்தை ஆண் ஆனால் தாய்க்குக்கண்டம்

உத்திரட்டாதி 1–ம் பாதம் – தாய்க்கு கண்டம்

ரோகிணி – குழந்தை ஆண் ஆனாலும், பெண் ஆனாலும் ரோகிணியில் எந்த பாதத்தில பிறந்தாலும் தாய் வழி மாமனுக்கு கண்டம்.

ரேவதி 4ம் பாதம் – சிசுவுக்குக் கண்டம்

பூராடம் 3 –ம் பாதம் – தாய்க்குக் கண்டம்

மூலம் 1–ம் பாதம் – தாய், தந்தைக்கு கண்டம்

மூலம்2–ம் பாதம் – தந்தைக்கு கண்டம்

மூலம்3–ம் பாதம் – தனநாசம்

மூலம் 4–ம் பாதம் – தோசமில்லை

கேட்டை 1–ம் பாதம் – சுகக்கேடு

கேட்டை 2–ம் பாதம் – தன நஷ்டம்

கேட்டை 3 – ம் பாதம் – தந்தைக்கு கண்டம்

கேட்டை 4– ம் பாதம் – சகோதரனுக்குக் கண்டம்

விசாகம் – எந்த பாதமானாலும் மைத்துனனுக்குக் கண்டம்

சித்திரை 1,2,3 –ம் பாதங்கள் – தாய், தந்தைக்குக் கண்டம்

அஸ்தம் 3–ம் பாதம் – தாய், தந்தைக்கு கண்டம்

உத்திரம் 1–ம் பாதம் – தாய், தந்தைக்கு கண்டம்

மகம் 1– ம் பாதம் – சிசுவுக்குக் கண்டம்

மகம் 3–ம் பாதம் – தாய் , தந்தைக்கு கண்டம்

ஆயில்யம் – 2–ம் பாதம் – தனநாசம்

ஆயில்யம் – 3–ம் பாதம் – தாய் , தந்தைக்குக் கண்டம்

ஆயில்யம் – 4–ம் பாதம் – தாய், தந்தைக்குக் கண்டம்

தோசமுள்ள நட்சத்திரங்களில் குழந்தைகள் பிறந்தால் தக்க பரிகாரங்களைச் செய்ய வேண்டும்.

**பரிகார முறைகள் -**

1. நவகிரக ஜெபம்
2. தானம்
3. நவகிரகஹோமம்
4. ருத்ராபிசேகம்
5. அம்மனுக்கு குங்கும அர்ச்சனை செய்தல்
6. சூரிய நமஸ்காரம் ஜெபம்
7. நீரில் முகத்தைப் பார்த்தல்

**தோச நட்சத்திரங்களும் செய்ய வேண்டிய தானங்களும்**

அஸ்வினி – பொன் தானம்

ரோகினி – நவகிரக ஹோமம், எள் தானம்

பூசம் – சந்தனம், தானம்

ஆயில்யம் – அன்னதானம்

மகம் – வெள்ளி தானம்

உத்திரம் – எள் தானம்

சித்திரை – வஸ்திர தானம்

விசாகம் – அன்னதானம்

கேட்டை – கோதானம்

மூலம் – எருமை தானம்

ரேவதி – பொன் தானம்

எத்தகைய தோசமாக இருந்தாலும், அத்தோசங்களை நீக்கும் வல்லமை சித்தர்கள் மற்றும் ஞானிகளுக்கு உண்டு. ஆகவே சித்தர்கள், நாயன்மார்கள், அடியார்கள், மற்றும் ஆழ்வார்கள் உதித்த திரு நட்சத்திரங்கள் வரும் நாளில் சிறப்பு வழிபாடுகள் செய்வதன் மூலம் தோசநிவர்த்தி பெறலாம். ஒருவருடைய ஜென்ம நட்சத்திரம் எதுவோ அதே நட்சத்திரத்தில் உதித்த சித்தர்கள், நாயன்மார்கள், அடியார்கள், ஆழ்வார்களை தொடர்ந்து வணங்கி வந்தால் ஜெனன நட்சத்திர தோசங்கள் விலகிவிடும்.

**சித்தர்களின் திரு நட்சத்திரங்கள்**

பதஞ்சலி – மூலம்

அகஸ்தியர் – ஆயில்யம்

கமல முனி – பூசம்

திரு மூலர் – அவிட்டம்

குதம்பை சித்தர் – விசாகம்

கோரக்கர் – ஆயில்யம்

தன்வந்திரி – புனர்பூசம்

சுந்தரானந்தர் – ரேவதி

கொங்கணர் – உத்திராடம்

சட்ட முனி – மிருக சீரிடம்

வால்மீகி – அனுசம்

ராமதேவர் – பூரம்

நந்தீஸ்வரர் – விசாகம்

இடைக்காடர் – திருவாவதிரை

மச்ச முனி – ரோகிணி

கருவூரார் – அஸ்தம்

போகர் – பரணி

பாம்பாட்டி சித்தர் – மிருக சீரிடம்.

சித்தர்கள் பிறந்த மாதம், நட்சத்திரத்தில், அவர்கள் சமாதி அடைந்த ஸ்தலங்களுக்குச் சென்று வழிபடுதன் மூலம் தோச நிவர்த்தி பெறலாம். ஆழ்வார்கள், அடியார்கள் மற்றும் நாயன்மார்களின் திரு நட்சத்திரங்கள் பஞ்சாங்கங்களில் கொடுக்கப்பட்டிருக்கும், அதைப் பார்த்து தெரிந்து கொள்ளுங்கள்.



# 21. எளிய வாஸ்து பரிகாரங்கள்

வீடுகளில் தோஷம் இருக்கிறதா என்பதை அறிந்து கொள்வதற்கு பல எளிய வழிமுறைகள் இருக்கின்றன. அதன் மூலம் அறிந்து நாம் பரிகாரங்களை செய்து கொள்ளலாம்.

**தோஷம் கண்டுபிடிக்கும் வழிமுறை**

வீடுகளில் தோஷமிருந்தால், வீட்டில் ஏதாவது ஒரு பிரச்சினை இருந்து கொண்டே இருக்கும். சிலர் அடிக்கடி நோய் வாய்ப்படுவார்கள். சிலருக்கு பேய், பிசாசுகளின் தொல்லை இருக்கும். சிலர் மரணமடையலாம். சிலர் வீடுகளில் குடும்பத்தில் எப்போதும் சண்டை சச்சரவுகளும், குழப்பங்களும் இருந்து கொண்டே இருக்கும். அத்தகையவர்களின் வீடுகளில் கண்டிப்பாக தோஷமிருக்கும். ஒரு வீடு மூன்று மாதங்களுக்கு மேல் மனிதவாசமில்லாமல் பூட்டி வைக்கப்பட்டால் அந்த வீட்டில் பேய், பிசாசுகள் வந்து தங்கும். வீட்டு சுவர்களில் விரிசல் காணப்பட்டால், அந்த வீட்டில் தீயசக்திகள் இருப்பதாக அர்த்தம். பொதுவாக தோஷமுள்ள வீடுகள் பொலிவிழந்து காணப்படும். அவ்வீடுகளில் படுத்தால் சரியாக தூக்கம் வராது. கெட்ட கனவுகள் வரும். வீடுகளில் வளர்க்கப்படும் மரங்கள், செடிகள் சரியாக வளராமல் பட்டுப்போனால் அந்தவீட்டில் தோஷமிருப்பதாக அர்த்தம்.

வீடுகளில் வளர்க்கப்படும் பிராணிகள் இறந்துபோனால் அந்த வீட்டில் தோஷமிருப்பதாக அர்த்தம். குறிப்பாக வளர்ப்பு மீன்கள் இறந்தால் தோஷமுள்ள வீடாகும். சமையலுக்காக வாங்கி வரும் தேங்காய்கள் தானாகவே வெடித்து உடைந்தால் வீட்டில் கண்டிப்பாக தோஷம் உள்ளது. மெழுகுவர்த்தியோ, தீபமோ ஏற்றும்போது அவை சரியாக எரியாமல் அணைந்துபோனால், வீட்டில் தோஷமுண்டு. ஒரு வீட்டில் நுழைந்து பின் கால் மூட்டுகளில் வலியோ அல்லது உடம்பு முழுவதும் வலி எடுத்தால் அந்த வீட்டில் கண்டிப்பாக தோஷம் உள்ளது.

1. வீட்டில் தினமும் விளக்கு ஏற்றவேண்டும். விளக்கிற்கு பசு நெய்யோ அல்லது நல்லெண்ணையோ பயன்படுத்தலாம்.
2. வீட்டை வாரத்திற்கு ஒருமுறை தண்ணீர்விட்டு சுத்தம் செய்வது நல்லது.
3. அகர்பத்திகள், சாம்பிராணி புகைபோடுவது நல்லது.
4. வீட்டில் கடவுள் படங்கள் அல்லது சன்யாசிகளின் படங்களை மாட்டி வைப்பது நல்லது.
5. வீட்டில் மணி அடித்து பூஜை செய்வது நல்லது.
6. வீட்டில் கும்பம் வைப்பது நல்லது, ஒரு சொம்பில் நீர் வைத்து அதன்மேல் ஒரு தேங்காயை வைக்கவேண்டும்.
7. வீட்டின் முன் வாசலில் தினமும் கற்பூரம் கொளுத்தலாம்.
8. சங்கு, மயில் இறகு போன்ற பொருட்களை வீட்டில் வைக்கலாம்.
9. வீட்டு முன்வாசலில் எலுமிச்சபழம், பச்சைமிளகாய் இவைகளை கட்டி தொங்கவிடலாம். அல்லது ஒரு டம்ளரில் நீரில் எலுமிச்சைபழத்தை போட்டு வைக்கலாம்.
10. தோஷமுள்ள இடங்களில் ஒரு பாத்திர நீரில் உப்பைபோட்டு வைக்கலாம். பிறகு அந்த நீரை, சாக்கடையிலோ அல்லது கக்கூஸிலோ ஊற்றிவிட வேண்டும்.
11. தோஷமுள்ள இடங்களில் மெழுகுவர்த்தியை ஏற்றி வைக்கலாம். அதுதானாக அணையும்வரை விட்டுவிடவேண்டும்.
12. வீட்டில் நவகிரஹ ஹோமம், கணபதி ஹோமம், வாஸ்து ஹோமம் செய்யலாம். இது வசதி இருப்பவர்கள் செய்து கொள்ளலாம்.
13. வீட்டில் அடிக்கடி கூட்டுப் பிரார்த்தனை செய்வது நல்லது.

14. வாசல்படிகளில் மஞ்சள், குங்குமம் இடவேண்டும். தலைவாசலில் மாவிலைகளை கட்டி தொங்கவிடலாம்.
15. வீட்டில் துளசிமாடம் அமைக்கலாம்.
16. வீட்டு வாசல் முன்பு கோலம் போடும் இடத்தில் சங்கு பிரதிஷ்டை செய்யலாம்.

### வாஸ்து குற்றமும் எளிய பரிகாரங்களும்

அண்மைகாலங்களில் வாஸ்து குற்றங்களுக்காக வீட்டை இடித்து சரிசெய்வதுதான் சரியான முறை என்று கூறிவருகிறார்கள் வாஸ்து சாஸ்திர வல்லுனர்கள். இதனால் பலருக்கு பணவிரயம் ஏற்பட்டதுதான் மிச்சம். இத்தகைய தவறான வழிமுறைகளுக்கு மாற்று வழிமுறை கூறவேண்டும் என்ற நோக்கத்திலேயே இக்கட்டுரையை எழுதுகிறேன்.

### ஈசான்ய மூலைகெட்டிருந்தால் செய்ய வேண்டிய பரிகாரங்கள்

ஈசான்ய மூலை என்பது வடகிழக்கு திசையைக் குறிக்கும் ஈசான்யம் மூடப்பட்டாலோ, ஈசான்யத்தில் தரை உயர்ந்து விட்டாலோ, ஈசான்யம் கெட்டுவிட்டதாக கூறுகிறார்கள். இதனால் வீட்டில் உள்ளவர்கள் அடிக்கடி நோய்வாய்ப்படுவார்கள் என்று கூறுகிறார்கள்.

இதற்கு பரிகாரமாக வீட்டில் அடிக்கடி பஜனைகள் நடத்தலாம். வேதபாராயணம் செய்யலாம். ஜெபக்கூட்டங்கள் நடத்தலாம். தினமும் மந்திரங்கள் ஜெபிக்கலாம். இவ்வாறு தொடர்ந்து செய்து வந்தால் அவ்வீட்டில் உள்ள எல்லா தோஷங்களும் நீங்கி விடும்.

### இந்திரதிக்கு கெட்டிருந்தால் செய்ய வேண்டிய பரிகாரங்கள்

இந்திரதிக்கு என்பது கிழக்கு திசையாகும். இந்த திசையில் ஏதாவது வாஸ்து குற்றமிருந்தால், அதற்கு பரிகாரமாக இஷ்ட தேவதை வழிபாடு, குலதேவதை வழிபாடுகளை தொடர்ந்து செய்து வந்தாலே போதும். எல்லா தோஷங்களும் நீங்கி விடும்.

### அக்னி மூலை கெட்டிருந்தால் செய்ய வேண்டிய பரிகாரங்கள்

அக்னி மூலை என்பது தென்கிழக்குத் திசையாகும். இத்திசையில் ஏதாவது வாஸ்து குற்றங்கள் இருந்தால், அதற்குப் பரிகாரமாக வீட்டில் மிருத்யுஞ்ஜெய ஹோமம் செய்தால் போதும் எல்லா தோஷங்களும் நீங்கி விடும்.

### யமதிக்கு கெட்டிருந்தால் செய்ய வேண்டிய பரிகாரங்கள்

யமதிக்கு என்பது தெற்குத் திசையாகும். தெற்குத் திசையில் ஏதாவது வாஸ்த்துக் குற்றங்கள் இருந்தால், அதற்கு பரிகாரமாக வருடா வருடம், அவரவர்களுடைய ஜாதி, குடும்பம் வழக்கப்படி பித்ருதர்ப்பணம் செய்து வந்தாலே போதும். அல்லது இறந்துபோன மூதாதையர்களுக்கு வருடாவருடம் அவர்கள் இறந்த நாளில் படையல் படைத்து வழிபட்டால் போதும். எல்லா தோஷங்களும் விலகிவிடும்.

### நைருதிமூலை கெட்டிருந்தால் செய்ய வேண்டிய பரிகாரங்கள்

நைருதி மூலை என்பது தென்மேற்கு திசையாகும். இத்திசையில் ஏதாவது வாஸ்து குற்றங்கள் இருந்தால், அதற்கு பரிகாரமாக, தச்சாசாரியைக்கொண்டு வீட்டிற்கு தச்சு கழிக்க வேண்டும். தச்சுக்கழிப்பது என்பது பற்றி ஆசாரிமார்களை கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். பொதுவாக பிராமணர் அல்லாதவர்கள் புதுவீட்டில் புகுவதற்கு முன் தச்சு கழிப்பது வழக்கம்.

### வருணதிக்கு கெட்டிருந்தால் செய்ய வேண்டிய பரிகாரங்கள்

வருணதிக்கு என்பது மேற்குத் திசையாகும். இத்திசையில் ஏதாவது வாஸ்து குற்றமிருந்தால், தொடர்ந்து சிவபெருமானுக்கு அர்ச்சனை, அபிஷேகம் செய்து வந்தாலே போதும். எல்லா தோஷங்களும் விலகிவிடும்.

### வாயு மூலை கெட்டிருந்தால் செய்ய வேண்டிய பரிகாரங்கள்

வாயுமூலை என்பது வடமேற்கு திசையாகும். இத்திசையில் ஏதாவது வாஸ்து குற்றமிருந்தால் அம்மனுக்கு, ஆடை, நகை மற்றும்

பூக்களால் அலங்காரம் செய்து, சந்தனம் போன்ற வாசனைப் பொருட்களை பூசி அலங்காரம் செய்து வழிபட்டால் எல்லா தோஷங்களும் நீங்கிவிடும்.

**குபேரதிக்கு கெட்டிருந்தால் செய்ய வேண்டிய பரிகாரங்கள்**

குபேரதிக்கு என்பது வடக்கு திசையாகும். இத்திசையில் ஏதாவது வாஸ்துகுற்றங்கள் இருந்தால், அதற்குப் பரிகாரமாக விஷ்ணு ஆலயம் சென்று தொடர்ந்து வழிபடவேண்டும். பிராமணர்களுக்கு வஸ்திரதானம், அன்னதானம் செய்தால் போதும். எல்லா தோஷங்களும் விலகிவிடும்.



# 22. மரண தோஷம்

மனிதன் பிறப்பால்தான் தோஷங்கள் ஏற்படுகின்றன என நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் மனிதனின் இறப்பினாலும் தோஷங்கள் ஏற்படுகின்றன என ஜோதிட நூல்கள் கூறுகின்றன. மரண தோஷங்களில் வசு பஞ்சக தோஷம் பிண்ட நூல்தோஷம், பலி நட்சத்திர தோஷம் ஆகியவை முக்கியமானவை ஆகும். இந்த தோஷங்களைப் பற்றி தமிழ் நாட்டில் யாரும் பேசுவதில்லை என்றாலும் கேரளா, ஆந்திர மாநிலங்களில் இந்த தோஷங்கள் பற்றி அதிகமாக பேசப்படுகிறது.

**வசு பஞ்சக தோஷம்**

அவிட்டம் நட்சத்திரத்தின் அதிதேவதை வசுவாகும். அவிட்டம் நட்சத்திரம் முதல் ரேவதி வரையுள்ள ஐந்து நட்சத்திரங்களும் வசு பஞ்சக நட்சத்திரங்களாகும். இந்த ஐந்து நட்சத்திங்களில் ஏதாவது ஒரு நட்சத்திரம் நடப்பில் உள்ள நாளில் மரணம் ஏற்பட்டால் வசு பஞ்சக தோஷகம் உண்டாகும். இதன் பலன் மரணம் ஏற்பட்ட அதே வருடத்தில் அந்ம குடும்பத்தில் தொடர்ந்து ஐந்து மரணங்கள் ஏற்படும்.

| | | |
|---|---|---|
| அவிட்டம் | – | ஒரு மரணம் |
| சதயம் | – | இரண்டு மரணங்கள் |
| பூரட்டாதி | – | மூன்று மரணங்கள் |
| உத்திரட்டாதி | – | நான்கு மரணங்கள் |
| ரேவதி | – | ஐந்து மரணங்கள் |

மரணம் ஏற்படவில்லை என்றாலும் மரணத்திற்கு ஒப்பான கண்டங்கள் குடும்ப உறுப்பினர்களுக்கு உண்டாகும். மரணம் அடைந்தவருக்கு யார் கொள்ளி போடுகிறார்களோ அவர்களையே முதலில் பாதிக்கும்.

**பரிகாரம் –**

மேற்கண்ட நட்சத்திரங்கள் நடப்பில் உள்ள நாட்களில் மரணம் ஏற்பட்டால் பிணத்தை சூரிய அஸ்தமனம் ஆவதற்கு முன்பே எரித்து

விட வேண்டும் . பிணத்தை எரிக்கும்போது தர்பை, அருகம்புல் ஆகியவற்றால் ஐந்து பொம்மை உருவங்கள் செய்து அவற்றை கொள்ளி வைப்பவர் கையால் சிதையில் தனித்தனியாக வைத்து எரிக்க வேண்டும். மரணம் ஏற்பட்ட 16 நாட்கள் கழித்துவிட்டால் மிருத்யுஞ்செய ஹோமம் செய்ய வேண்டும். கொள்ளி வைத்தவர் ஒருவருடத்திற்கு தான் பிறந்த நட்சத்திரம் வரும் நாளில் சிவன் கோயிலுக்குச் சென்று , வில்வ இலைகளால் சிவனை அர்ச்சிக்க வேண்டும் இவ்வாறு செய்தால் வசு பஞ்சக தோஷம் விலகும்.

**பிண்ட நூல் தோஷம்**

கேட்டை, கார்த்திகை,பூரம், பூரட்டாதி, பூராடம், ஆயில்யம், பரணி, திருவாதிரை, மூலம், ஆகிய நட்சத்திரங்களில் மரணம் ஏற்பட்டால் பிண்ட நூல் தோஷம் ஏற்படும். இதன் பலன் கொள்ளி வைப்பவனுக்கு ஒரு வருடத்திற்குள் மரணமோ அல்லது மரணத்திற்கு ஒப்பான கண்டங்களோ ஏற்படும்.

**பரிகாரம்**

மரணம் ஏற்ப்பட்ட 16 நாட்கள் கழித்து வீட்டில் மிருத்யுஞ்செய ஹோமம் செய்ய வேண்டும்.

**பலி நட்சத்திர தோசம்**

மரணம் ஸ்திர ராசியில் ஏற்பட்டாலும், புனர்பூசம், விசாகம், உத்திரம், உத்திரட்டாதி, உத்திராடம், ரேவதி, ரோகிணி, நட்சத்திரங்களில் மரணம் ஏற்பட்டாலும், அஷ்டமி, நவமி, சதுர்த்தி, சதுர்தசி ஆகிய திதிகளில் மரணம் ஏற்பட்டாலும், பலி நட்சத்திர தோஷம் உண்டாகும் . இதன் பலன் குடும்பத்தில் பலவிதமான குழப்பங்களும், கஷ்டங்களும் ஒன்றன் பின் ஒன்றாக வரும்.

**பரிகாரம்**

மரணம் ஏற்பட்ட 16 நாட்கள் கழித்து வீட்டில் மிருயுஞ்செய ஹோமம் செய்ய வேண்டும்.

# 23. நட்சத்திர சாந்தி பரிகாரங்கள்

ஒரு சிலர் நோய் வாய்ப்பட்டால் சீக்கிரம் குணமடைந்து விடுவார்கள். ஒரு சிலர் நோய் வாய்ப்பட்டால், சில சமயங்களில் எளிதில் குணமடைவதில்லை. நீண்ட நாட்கள் நோயினால் துன்பப்படும் நிலை ஏற்படுகிறது. சில சமயங்களில் உயிருக்கும் ஆபத்தான நிலை ஏற்பட்டு விடுகிறது. இத்தகைய சமயங்களில் தகுந்த பரிகாரங்களை ஏற்று செய்தால் நோய்கள் எளிதில் குணமாகும் என்பது ரிஷிகளின் வாக்காகும், நோய் தொடங்கும் நாளில் நடப்பில் உள்ள நட்சத்திரத்தைக் கொண்டு எத்தனை நாட்கள் நோய் நீடிக்கும் . எத்தனை நாட்கள் ஆபத்து கட்டம் நீடிக்கும் . அதற்குரிய பரிகாரங்கள் என்ன என்பதைப் பார்ப்போம்.

**நோய் வாய்ப்படும் நாளில் நடப்பில் உள்ள நட்சத்திரம் நோய் நீடிக்கும் காலமும் பரிகாரமும்**

**அஸ்வினி**

9 நாட்கள் வரை நோய் நீடிக்கும் பிள்ளையாருக்கு அர்ச்சனை செய்து வழிபட வேண்டும்

**பரணி**

பரணி 4ம் பாதத்தில் நோய் வாய்ப்பட்டால் மரணம் ஏற்பட வாய்ப்புண்டு. மற்ற பாதங்களில் நோய் வாய்ப்பட்டால் 2 முதல் 11 நாட்கள் வரை நோய் நீடிக்கும். சிவபெருமானுக்கு அர்ச்சனை, அபிஷேகம் செய்து வழிபட வேண்டும்.

**கிருத்திகை**

9 நாட்கள் வரை நோய் நீடிக்கும் முருகப் பெருமானுக்கு அர்ச்சனை செய்து வழிபடவேண்டும்.

**ரோகிணி**

7 நாட்கள் வரை நோய் நீடிக்கும். கிருஷ்ண பகவானை வழிபட வேண்டும்

**மிருகசீரிடம்**

ஒரு மாத காலம் வரை நோய் நீடிக்கும், நாகதேவதைகளைப் பூஜிக்க வேண்டும்.

**திருவாதிரை**

ஒருமாத காலம் வரை நோய்நீடிக்கும் அல்லது மரணம் சம்பவிக்கலாம். சிவபூஜை, ருதரிர. ஜெபம் செய்ய வேண்டும்.

**புனர்பூசம்**

7 நாட்கள் வரை நோய் நீடிக்கும். ஸ்ரீராமனை வழிபட வேண்டும்.

**பூசம்**

7நாட்கள் வரை நோய் நீடிககும் . முருகப் பெருமானை வழிபட வேண்டும்

**ஆயில்யம்**

ஒரு மாதகாலம் வரை நோய் நீடிக்கலாம். நாக தேவதைகளைப் பூஜிக்க வேண்டும்.

**மகம்**

20 நாட்கள் வரை நோய் நீடிக்கலாம். கிருஷ்ணர், நரசிம்மரை வழிபட வேண்டும்.

**பூரம்**

9 நாட்கள் முதல் 2 மாதங்கள் வரை நோய் நீடிக்கலாம், துர்கா பூஜை செய்ய வேண்டும்.

**உத்திரம்**

7நாட்கள் வரைநோய் நீடிக்கலாம் சாஸ்தா வழிபாடு தன்வந்திரி பூஜை செய்ய வேண்டும்.

**அஸ்தம்**

15 நாட்கள் வரை நோய் நீடிக்கலாம் ராஜ ராஜேஸ்வரி, மஹாவிஷ்ணுவிற்கு பூஜைகள் செய்ய வேண்டும்.

**சித்திரை**

11 நாட்கள் வரை நோய் நீடிக்கலாம். மகாலட்சுமிக்கு பூஜைகள் செய்யவேண்டும்

**சுவாதி**

ஒரு மாத காலம் வரை நோய் நீடிக்கலாம். முருகப்பெருமானை வழிபட வேண்டும்

**விசாகம்**

15 நாட்கள் வரைநோய் நீடிக்கலாம். முருகப் பெருமானை வழிபட வேண்டும்

**அனுசம்**

ஒரு மாத காலம் வரை நோய் நீடிக்கலாம். சிவபெருமானை வழிபடவேண்டும்

**கேட்டை**

ஒருமாத காலம் வரை நோய் நீடிக்கலாம், பிள்ளையாரை வழிபட வேண்டும்

**மூலம்**

9 நாட்கள் வரை நோய் நீடிக்கலாம். பிள்ளையாரை வழிபாட வேண்டும்

**பூராடம்**

ஒரு மாத காலம் வரை நோய் நீடிக்கலாம். ராஜராஜேஸ்வரியை வழிபட வேண்டும்.

**உத்திராடம்**

ஒரு மாத காலம் வரை நோய் நீடிக்கலாம் நாக தேவதைகளை வழிபட வேண்டும்.

**திருவோணம்**

11 நாட்கள் வரை நோய் நீடிக்கலாம் மகா விஷ்ணுவை வழிபட வேண்டும்

**அவிட்டம்**

ஒருமாத காலம் வரை நோய் நீடிக்கலாம். பிள்ளையாரை வழிபட வேண்டும்

**சதயம்**

11 நாட்கள் வரைநோய் நீடிக்கலாம் . நாக தேவதைகளை வழிபடவேண்டும்

**பூரட்டாதி**

ஒருமாத காலம் வரைநோய் நீடிக்கலாம். வராக மூர்த்தியை வழிபட வேண்டும்.

**உத்திரட்டாதி**

7நாட்கள் வரை நோய் நீடிக்கும் சிவபூஜை செய்யவேண்டும்

**ரேவதி**

7 நாட்கள் வரை நோய் நீடிக்கும் மகாவிஷ்ணுவை வழிபட வேண்டும்.

# 24. நவகிரக யந்திரங்கள்

சூரியன்

| | | |
|---|---|---|
| 6 | 1 | 8 |
| 7 | 5 | 3 |
| 2 | 9 | 4 |

சந்திரன்

| | | |
|---|---|---|
| 7 | 2 | 9 |
| 8 | 6 | 4 |
| 3 | 10 | 5 |

செவ்வாய்

| | | |
|---|---|---|
| 8 | 3 | 10 |
| 9 | 7 | 5 |
| 4 | 11 | 6 |

புதன்

| | | |
|---|---|---|
| 9 | 4 | 11 |
| 10 | 8 | 6 |
| 5 | 12 | 7 |

குரு

| | | |
|---|---|---|
| 10 | 5 | 12 |
| 11 | 9 | 7 |
| 6 | 13 | 8 |

சுக்கிரன்

| | | |
|---|---|---|
| 11 | 6 | 13 |
| 12 | 10 | 8 |
| 7 | 14 | 9 |

சனி

| | | |
|---|---|---|
| 12 | 7 | 14 |
| 13 | 11 | 9 |
| 8 | 15 | 10 |

ராகு

| | | |
|---|---|---|
| 13 | 8 | 15 |
| 14 | 12 | 10 |
| 9 | 16 | 11 |

கேது

| | | |
|---|---|---|
| 14 | 9 | 16 |
| 15 | 13 | 11 |
| 10 | 17 | 12 |

மேற்கண்ட எந்திரங்கள் காகிதம் அல்லது தாமிரதகடுகளில் எழுதி தரிக்கலாம் எந்திரத்தின் கீழ் தரிப்பவரின் நட்சத்திரம், ராசி, வயது, பெயர் , பால் (ஆண் / பெண்) போன்ற விவரங்களையும் எழுதிக் கொள்ளவும்.

21 நாட்கள் பூஜையில் வைத்து அணிந்து கொள்ளலாம். காகிதத்தில் எழுதிய எந்திரங்களைவிட தாமிரதகடுகளில் எழுதிய எந்திரங்களுக்கு சக்தி அதிகம். தாமிரதகடுகளில் எழுதிய எந்திரங்களை விட வெள்ளித்தகடுகளில் எழுதிய எந்திரங்களுக்கு சக்தி அதிகம். வெள்ளித்தகடுகளில் எழுதிய எந்திரங்களைவிட தங்கத்தகடுகளில் எழுதிய எந்திரங்களுக்கு சக்தி அதிகம். எந்திரங்களை பூஜையில் வைத்து மந்திர உருவேற்றிய பின்புதான் அணிய வேண்டும். பூஜையில் வைக்காமல் எந்திரங்களை அணிந்தால் பலன் எதுவும் தராது.



# 25. சித்தர் சமாதி பீடங்கள்

கேது கிரகத்தினால் பாதிப்பு அடைந்தவர்களுக்கு வாழ்க்கையில் எப்பொழுதும் தோல்வியே ஏற்படும். எடுத்த காரியங்களை எல்லாவற்றிலும் தடைகள் ஏற்படும். மனதில் விரக்தி ஏற்படும் வாழ்க்கையே சூன்யமாகத் தோன்றும் . இத்தகைய அறிகுறிகள் உடையவர்கள் சித்தர்களின் சமாதி தலங்களுக்குச் சென்று தங்கள் வயது கணக்குப்படி சித்தர் சமாதியை வலம் வந்து ஒவ்வொரு சுற்றுக்கும் ஒரு கற்பூரம் வீதம் சமாதி முன்பு ஏற்றி வைத்து வழிபட சகல பீடைகளும் நீங்கும் சித்தர் சமாதி பீடங்கள் அமைந்துள்ள இடங்களின் விவரங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

1. கொங்கனவர் – திருப்பதி
2. போகர் – பழனி
3. திருமூலர் – சிதம்பரம்
4. இடைக்காடர் – திருவண்ணாமலை
5. குதம்பைச் சித்தர் – மயிலாடு துறை பெரிய கோயில்
6. கருவூரார் – தஞ்சை பெரிய கோயில்
7. பாம்பாட்டி சித்தர் – சங்கரன் கோயில்
8. ஞான சித்தர் – மயிலாடுதுறை
9. அகத்தியர் – திருவனந்தபுரம் (அனந்த சயனம்)
10. மச்சமுனி – திருப்பரங்குன்றம்
11. அருணகிரிநாதர் – திருப்பரங்குன்றம்
12. வால்மீகி – எட்டுக்குடி
13. அழுகுண்ணிசித்தர் – நாகப்பட்டினம்
14. கோரக்கர் – நாகப்பட்டினம்
15. சுந்தரானந்தர் – மதுரை மீனாட்சி அம்மான் கோயில்
16. குணங்குடியார் – சென்னை

17. பட்டினத்தார் – திருவொற்றியூர்
18. பாம்பன் அடிகள் – திருவான்மியூர், சென்னை.
19. திருப்புகழ் தண்டபாணி சித்தர் – திருவாமாத்தூர்
20. ஸ்ரீராம தஷ்ணமூர்த்தி சித்தர் – பனையூர் (சங்கரன் கோயில்)
21. ஸ்ரீசீரடி சாய்பாபா – மகாராஷ்டிரா
22. ஸ்ரீ ராகவேந்திரர் – மந்திராலயம்
23. நந்தீசுவரர் – காசி
24. புலிப்பாணி சித்தர் – பழனி
25. இராமதேவர் – அழகர்மலை
26. கமல முனிவர் – திருவாரூர்
27. சட்டை முனி – திருவரங்கம்
28. தன்வந்திரி – வைத்தீஸ்வரன் கோயில்
29. பதஞ்சலி – ராமேஸ்வரம்
30. வான்மீகர் – எட்டுக்குடி
31. காலங்கிநாதர் – சதுரகிரி மலை
32. காகா புஜண்டர் – ஆச்சாள்புரம்
33. புண்ணாக்கீசர் – சென்னிமலை (ஈரோடு மாவட்டம்)
34. சிவவாக்கியர் – சிவன் மலை (ஈரோடு மாவட்டம்)

பெரும்பாலும் சித்தர் சமாதிகள் சிவாலயங்களில் தென்மேற்கு மூலையில் (கன்னி மூலையில்) அமைந்திருக்கும். தமிழ்நாட்டில் ஆயிரக்கணக்கான சித்தர் சமாதிகள் உள்ளன. அவற்றில் எந்த ஜீவ சமாதிக்கு வேண்டுமானாலும் சென்று வழிபடலாம்.

# 26. சிவாலயங்களில் நவகிரகங்கள் இருப்பிடம்

பெரும்பாலும் சிவாலயங்களில் நவகிரக சந்நிதி ஈசான்ய மூலையில் (வடகிழக்கு மூலை) அமைந்திருக்கும். நவகிரகங்களை பிரதிஷ்டை செய்யும்போது இருவகையான நெறிகள் பின்பற்றப்படுகின்றன. அவை சிவாகம நெறிப் பிரதிஷ்டை, ஆகம நெறிப் பிரதிஷ்டை எனப்படும்.

**சிவகாம பிரதிஷ்டை**

மேற்கு

| | | | | |
|---|---|---|---|---|
| | சனி | குரு | ராகு | |
| தெற்கு | புத | சூரி | சுக் | வடக்கு |
| | செவ் | சந் | கேது | |

கிழக்கு

சிவாகமப் பிரதிஷ்டையின் அடிப்படையில் ,சூரியன் மேற்கு திசை நோக்கி நடு நாயகமாக அமைக்கப்பெற்றிருப்பாள். மற்ற எட்டு கிரகங்களும் சூரியனைச் சுற்றிலும் சூரியனை நோக்கியவாறு அமைக்கப்பெற்றிருக்கும். சூரீயனார் கோயில், திருவையாறு, திருவிடை மருதூர், முதலான சிவத்தலங்களில் நவகிரகபிரதிஷ்டை இவ்வாறு அமைக்கப் பட்டுள்ளது.

**வைதீக நெறி பிரதிஷ்டை**

மேற்கு

| | | | | |
|---|---|---|---|---|
| | ராகு | சனி | கேது | |
| தெற்கு | செவ் | சூரி | குரு | வடக்கு |
| | சந் | சுக் | புத | |

கிழக்கு

பெரும்பலான சிவாலயங்களில் வைதீக நெறிப்படியே நவகிரகங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

இம்முறைப்படி அமையபெற்ற நவக்கிரக சன்னிதியில் சூரியன் மேற்கு திசைநோக்கி நடுநாயகமாக அமைக்கப்பெற்றிருப்பார், மற்ற எட்டு கிரகங்களும் சூரியனைச் சுற்றி ஒன்றையொன்று பார்க்காத நிலையில் வெவ்வேறு திசைகளை நோக்கிய வாறு அமைக்கப்பெற்றிருக்கும்.

**நவரத்தின மோதிர அமைப்பு-**

கிழக்கு

| வடக்கு ↓ / தெற்கு → | | |
|---|---|---|
| பச்சை | வைரம் | முத்து |
| புஷ்பராகம் | மாணிக்கம் | பவளம் |
| வைடூர்யம் | நீலம் | கோமேதகம் |

(இடது: வடக்கு; வலது: தெற்கு)

மேற்கு

நவரத்தின மோதிர அமைப்புமுறையும் வைதீக நெறிப் பிரதிஷ்டை முறையும் ஒரே மாதியாக அமைந்துள்ளன.

# 27. பிறப்பின் தோஷமும் பரிகாரங்களும்

பராசரர் தன் ப்ருஹத் பராசார ஹோராவில் கூறியுள்ள பிறப்பு தோஷங்களையும் பரிகாரங்களையும் பார்ப்போம்.

## 1. அமாவாசையில் பிறந்த குழந்தைக்குப் பரிகாரம்

அமாவாசையில் பிறந்த குழந்தை வாழ்நாள் முழுவதும் வறுமை நிலையிலேயே வாழும் என்றும் தக்க பரிகாரம் செய்து கொண்டால் வறுமை நீங்கி சுபீட்சமாக வாழும் என்று பராசரர் கூறுகிறார்.

**பரிகாரம்**

ஒரு கலத்தில் நீர் நிரப்பி அதில் அத்தி இலை, ஆலஇலை, அரச இலை, மாவிலை, வேப்பிலை இவைகளைப் போட்டு அந்த கலசத்தின் வாயை ஒரு துணியால் கட்டி மூடவும் அதன்பின் அந்த கலசத்தை தென்மேற்கு திசையில் வைத்து மந்திர ஜெபம் செய்து பின் கலச நீறை குழந்தை மீதும் பெற்றோர் மீதும் தெளிக்க தோஷம் நீங்கும். கலச பூஜை செய்யும்போது சூரிய, சந்திரர்களுக்கும் பூஜை செய்யவேண்டும். இதற்கு மாற்றுப்பரிகாரமாக கறுப்பு நிற பசுவை தானம் செய்யலாம்.

## 2. தேய் பிறை சதுர்தசியில் பிறந்த குழந்தைக்கு பரிகாரம்

தேய் பிறை சதுர்தசியில் குழந்தை பிறந்தால் குழந்தைக்கும் பெற்றோருக்கும் தோசம் எனக்கூறப்படுகிறது.

**பரிகாரம்**

சிவனுக்கு அபிசேகம் செய்த நீரை ஒரு கலசத்தில் பிடித்து அதை குழந்தைமீதும், பெற்றோர்மீதும் தெளிக்க தோஷம் நீங்கும்

## 3. அசுப யோகங்களில் பிறந்த குழந்தைக்கு பரிகாரம்

வியாதிபாத யோகம், வஜ்ரயோகம், பரிகயோகம், பத்திரை

கரணம், எமகண்ட காலம் இவைகளில் குழந்தை பிறந்தால் தோஷமாகும்.

**பரிகாரம்**

1. விஷ்ணு பூஜை
2. சிவாலயங்களில் நெய்தீபம் ஏற்றுதல்
3. சிவனுக்கு அபிசேகம்
4. அரச மரத்தை 108 முறை பிரதட்சிணம் செய்தல்.

4. நட்சத்திரதோஷங்களுக்கு பரிகாரம்

ஒரு குழந்தை தன்னுடைய மூத்த சகோதர, சகோதரிகள், மற்றும் பெற்றோர்களுடைய ஜென்ம நடசத்திரத்தன்று பிறந்தால் மூத்த சகோதர, சகோதரிகளுக்கோ, அல்லது பெற்றோர்களுக்கோ மரண தோசம் ஏற்படும் எனக் கூறப்படுகிறது. மரணம் ஏற்படாத பட்சத்தில் மரணத்திற்கு ஒப்பான கண்டம் ஏற்படும்.

**பரிகாரம்**

ஒரு நல்ல முகூர்த்த முள்ள நாளில் ஜென்ம நட்சத்திரத்தில் கலச பூஜை செய்து, கலசநீரை குழந்தை, குழந்தையின் சகோதர, சகோதரிகள் மற்றும் பெற்றோர்கள் மீது தெளிக்க தோஷம் நீங்கும்.

**5. சங்கிராந்தி தினம் பிறந்த குழந்தைக்கு பரிகாரம்–**

சங்கிராந்தி என்றால் மாதப்பிறப்பு என்று பொருள் ஒவ்வொரு மாதமும் பிறக்கும் கிழமைக்கு தகுந்தவாறு சங்கிராந்திகளுக்கு பெயர் உள்ளது.

| | | |
|---|---|---|
| ஞாயிறு | – | கோரம் |
| திங்கள் | – | தாவாங்க்ஷி |
| செவ்வாய் | – | மஹோதரி |
| புதன் | – | மந்தா |

| | | |
|---|---|---|
| வியாழன் | – | மந்தாகினி |
| வெள்ளி | – | மிஷ்ரா |
| சனி | – | ராக்ஷஷி |

மாதப்பிறப்பன்று (தமிழ்மாதம்) குழந்தை பிறந்தால் அந்த குழந்தை வறுமையில் வாடும் எனக்கூறப்படுகிறது. தக்க பரிகாரம் செய்வதால் தோஷம் விலகும்.

**பரிகாரம்**

1. நவகிரக ஹோமம்.
2. ம்ருத்யுஞ்செய ஹோமம்.

**6. கிரகண காலம் பிறப்பு குழந்தைக்கு பரிகாரம்-**

சூரிய கிரகணம், சந்திர கிரகண நாட்களில் பிறக்கும்குழந்தை நோய், கண்டம், வறுமை இவைகளால் வாழும் எனக்கூறப்படுகிறது.

**பரிகாரம்**

கிரகண நட்சத்திர தேவதைக்கும், சூரியன், சந்திரன், ராகு கேதுக்களுக்கும் கலச பூஜை செய்து கலசநீரை குழந்தை மீது தெளிக்க.

**ஆயுக்த மூலம்**

1. ஒரு தாம்பாளத்தில் நெய் ஊற்றி அத்தாம்பாளத்தில் குழந்தை மற்றும் பெற்றோர் முகம்பார்த்து அதை தானம் செய்யவும்.
2. மூலம் நட்சத்திர தேவதைக்கு கலச பூஜை செய்து கலசநீரை குழந்தை மற்றும் பெற்றோர் மீது தெளிக்கவும்.
3. மிருத்யுஞ்செய ஹோமம் செய்யுவும்.

**7. மூன்று ஆணுக்குப் பின் பெண் பிறந்தால் செய்ய வேண்டிய பரிகாரம்.**

ஒரு குடும்பத்தில் 3 ஆண் குழந்தை பிறந்து 4 வதாக பெண் பிறந்தாலோ அல்லது 3 பெண் குழந்தை பிறந்து 4வதாக ஆண் குழந்தை பிறந்தாலோ அது அந்த குடும்பத்தில் பிறந்த மூத்தவரையும் பெற்றோரையும் பாதிக்கும் . தாய் வர்கத்தினம், தந்தை வர்கத்தினமும் பாதிப்படைவர்.

**பரிகாரம்**

ஒரு வெண்கல பாத்திரத்தில் நெய் ஊற்றி குழந்தை மற்றும் பெற்றோர் முகம் பார்த்து அதை தானம் செய்துவிடவும். பிறப்புதீட்டுக்காலம் முடிந்த பின் ம்ருத்யுஞ் செய ஹோமம், சுதர்சன ஹோமம், சாந்தி சூக்த ஹோமம் செய்யவும்.

கிரகண தோசம் நீங்கும். இதை செய்ய முடியாதவர்கள் திருநாகேஸ்வரம் சென்று சூரிய தீர்த்தத்தில் குழந்தையை நீராட்ட கிரகண தோசம் நீங்கும். திருநாகேஸ்வரம் செல்ல முடியாதவர்கள் தங்கள் ஊரில் உள்ள சிவாலயம் சென்று அங்கு சூரிய தீர்த்தம் இருந்தால் அதில் குழந்தையை நீராட்டலாம்.

**8. கண்டாந்த தோஷத்திற்கு பரிகாரம் -**

**திதி கண்டாந்தம்**

பஞ்சமி, அமாவாஸ்சை, பவுர்ணமிதிதிகளின் கடைசி 2 நாழிகையும், பிரதமை, சஷ்டி, ஏகாதசி திதிகளின் முதல் 2 நாழிகையும் திதி கண்டாந்தம் எனப்படும்.

**நட்சத்திரக்கண்டாந்தம்**

அஸ்வினி , மகம், மூலம், ஆகிய மூன்று நட்சத்திரங்களின் முதல் 2 நாழிகையும், ஆயில்யம், கேட்டை, ரேவதி ஆகிய மூன்று நட்சத்திரங்களின் கடைசி 2நாழிகையும் நட்சத்திர கண்டாந்தம் எனப்படும்.

**லக்ன கண்டாந்தம்**

மேசம், சிம்மம், தனுசு இராசிகளின் முதல் அரை நாழிகையும் கடகம், விருச்சிகம், மீனம் ஆகிய ராசிகளின் கடைசி அரை நாழிகையும் லக்ன கண்டாந்தம் எனப்படும்.

**ஆயுக்த மூலம்**

கேட்டை நட்சத்திரத்தின் கடைசி 6 நாழிகையும், மூலம் நட்சத்திரத்தின் முதல் 8 நாழிகையும் ஆயுக்த மூலம் எனப்படும்.

மேற்கண்ட காலங்களில் குழந்தை பிறந்தால் பிறப்பு தீட்டு நீங்கிய மறுநாள் காலையில் தான் தகப்பன் குழந்தையைப் பார்க்கவேண்டும். அல்லது பரிகாரம் செய்த பின்புதான் பார்க்கவேண்டும்.

**பரிகாரம் -**

திதி கண்டாந்தம் – எருது தானம்

நட்சத்திர கண்டாந்தம் – கன்றுடன் கூடிய பசுதானம்

லக்ன கண்டாந்தம் – ஸ்வர்ண தானம்.



# 28. ஜெனன தோச நீக்கும் விருட்சங்கள்

பஞ்சாங்கங்களைப் புரட்டி பார்த்தால், அதில் இருபத்து ஏழு நட்சத்திரங்களும் அவற்றிற்குரிய விருட்சங்களும் கொடுக்கப்பட்டிருக்கும். திருமணப் பொருத்தங்களில் விருட்சப் பொருத்தம் என்பது ஒன்று உண்டு. எனவே பொருத்தம் பார்க்கும் போது ஜோதிடர்கள் இதை கவனிப்பார்கள்.

**நட்சத்திரங்களும் விருட்சங்களும்**

| நட்சத்திரம் | விருட்சம் |
|---|---|
| அஸ்வினி | எட்டி |
| பரணி | நெல்லி |
| கிருத்திகை | அத்தி |
| ரோகிணி | நாவல் |
| மிருக சீரிடம் | கருங்கா |
| திருவாதிரை | செங்கா |
| புனர்பூசம் | மூங்கில் |
| பூசம் | அரசு |
| ஆயில்யம் | புன்னை |
| மகம் | ஆலமரம் |
| பூரம் | பலா |
| உத்திரம் | அலரி |
| அஸ்தம் | அத்தி |
| சித்திரை | வில்வம் |
| சுவாதி | மருதமரம் |

| | |
|---|---|
| விசாகம் | விளா |
| அனுசம் | மகிழமரம் |
| கேட்டை | பராய் |
| மூலம் | மரா |
| பூராடம் | வஞ்சி |
| உத்திராடம் | பலா |
| திருவோணம் | எருக்கு |
| அவிட்டம் | வன்னி |
| சதயம் | கடம்பு |
| பூரட்டாதி | தேமா |
| உத்திரட்டாதி | வேம்பு |
| ரேவதி | இலுப்பை |

ஒரு குழந்தை பிறந்த உடன் ஜோதிடரிடம் சென்று குழந்தை எந்த நட்சத்திரத்தில் பிறந்துள்ளது என பார்ப்பது வழக்கம். அவ்வாறு பார்க்கும் போது குழந்தை பிறந்த நட்சத்திரத்தால் தாய், தகப்பனுக்கு கண்டம், குழந்தைக்கு கண்டம், தாய்மாமனுக்கு கண்டம் என குடும்பத்தில் யாராவது ஒருவருக்கு ஆகாது என ஜோதிடர்கள் கூறுவது வழக்கம். குழந்தை பிறந்தது எந்த நட்சத்திரமானாலும் அந்த நட்சத்திரத்திற்குரிய விருட்சக் கன்றுகளை நட்டு வளர்த்து வந்தால் ஜென்ம நட்சத்திர தோஷங்கள் விலகும். வளர்ந்து நிற்கும் மரங்களை பராமரித்து வந்தாலும் தோஷங்கள் நீங்கும். அவரவர் ஜென்ம நட்சத்திற்குரிய மரங்களை வணங்குவதும், வணங்கி வலம் வருவதும் நன்மை தரும். இதை அவரவர் ஜென்ம நட்சத்திரம் வரும் நாட்களில் செய்ய வேண்டும்.

# 29. விருட்சங்களும் தெய்வீக சக்திகளும்

**துளசி**

துளசி விஷ்ணுவின் அம்சமாகும். துளசியின் இன்னொரு பெயர் பிருந்தா, பிருந்தாவனம் உள்ள இடத்தில் கண்டிப்பாக விஷ்ணு குடியிருப்பாள். அதனால் வீடுகளில் முற்றத்தில் துளசி மாடம் அமைக்கப்படுகிறது துளசிக்கு பல மருத்துவகுணங்களும் உண்டு. இதிலிருந்து வெளிப்படும் தெய்வீக அதிர்வுகள் பல நோய்களை குணமாக்கும்.

**சந்தனமரம்**

சந்தனமரம் விஷ்ணுவின் அம்சமாகும். சந்தனம் சுபகாரியங்களிலும் , பூஜைகளிலும் பயன்படுத்தப்படுகிறது. இதிலிருந்து தெய்வீக அதிர்வுகள் வெளிப்படுகின்றன இவ்வதிர்வுகள் மன அமைதியையும், சாத்வீக குணத்தையும் கொடுக்கும்.

**அத்திமரம்**

அத்தி மரம் தத்தாத்திரேயரின் அம்சாகும். விஷ்ணுவும் இதில் குடியிருப்பர்ர். இம்மரத்திலிருந்து வெளிப்படும் அதிர்வுகள் அல்லது காந்த அலைகள் சாத்வீக குணமுடையவை. மனசாந்தியை கொடுக்கக்கூடியவை. இம்மரத்தில் அடியில் அமர்ந்து தியானம் செய்தால் தியானம் எளிதாக கைகூடும்.

**மாமரம்**

மாமரம் மகாலட்சுமியின் அம்சமாகும். இம்மரத்தில் இருந்து வெளிப்படும் அதிர்வுகள் சாத்விக குணமுடையவை இதன் காரணத்தினாலேயே எல்லாவிதமான பூஜைகளிலும் மாவிலைகள் பயன்படுத்தபடுகின்றன. சுபகாரியங்கள் செய்யும் போது வீடுகளில் மாவிலைகள் தோரணமாக கட்டி தொங்க விடப்படுகிறது.

**அரசமரம்**

அரச மரம் பிரம்மாவின் அம்சமாகும். இம்மரத்திலிருந்து வெளிப்படும் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. இம்மரத்தின் கீழ் தீபம் ஏற்றி வலம் வர புத்திர தோஷம் நீங்கும்.

**ஆல மரம்**

ஆலமரம் சிவனின் அம்சமாகும். இம்மரத்திலிருந்து வெளிப்படும் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. இம்மரத்தின் கீழ் அமர்ந்து தியானம் செய்தால் தியானம் எளிதாக கைகூடும். இம்மரத்தின் விழுதுகள் ஆண்மை குறைவை நீங்கும் தன்மையுடையது.

**மருதாணிமரம்**

மருதாணி மரமானது லட்சுமியின் அம்சமாகும். இம்மரத்திலிருந்து வெளிப்படும். அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. இம்மரத்தின் பழங்களை தூங்கும் போது தலையணைக்கு அடியில் வைத்து தூங்கினால் கெட்ட கனவுகள் வராது.

**ருத்ராக்ஷ மரம்**

ருத்ராக்ஷ மரம் சிவனின் அம்சமாகும் இம்மரத்திலிருந்து வெளிப்படும் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை . ருத்ராக்ஷ கொட்டையை உடலில் அணிந்து கொண்டால் இரத்தம் சுத்தமாகும். இரத்த அழுத்தம் சீராகவும் கோபம் குறையும், மனதில் சாந்தம் உண்டாகும்.

**ஷர்ப்பகந்தி**

இம்மரத்தின் அருகே பாம்புகள் வராது. இம்மரத்தின் குச்சியை உடலில் கட்டி கொண்டால் பாம்புகள் தீண்டாது.

**நெல்லி மரம்**

நெல்லி மரம் விஷ்ணுவின் அம்சமாகும். இம்மரத்தின் அதிர்வுகள் சாத்வீக குணமுடையயவை. இம்மரத்தின் கீழ் தம்பதிகளை அமரவைத்து அன்னதானம் செய்தால், அன்னதானம் செய்பவருடைய சகல பாவங்களும் நீங்கும்.

**வேப்பமரம்**

வேப்பமரம் சக்தியின் அம்சமாகும். இம்மரத்தின் அதிர்வுகள் சாத்வீக குணமுடையயவை. இம்மரத்தை சுற்றி மஞ்சள் குங்குமம் பூசி மஞ்சள் ஆடையை கட்டி மாலை சூடி மரத்தை வலம் வந்து வணங்கி வர சக்தியின் அருள் கிட்டும்.

**வில்வ மரம்**

வில்வ மரம் சிவனின் அம்சமாகும். இம்மரத்தின் இலைகளால் சிவனை பூஜிக்க சகல பாவங்களும் நீங்கும்.

**கருவேல மரம்**

கருவேல மரம் தீய அதிர்வுகளை வெளிப்படுத்தும் இம்மரத்தின் காய் மற்றும் வேர்களை மந்திரவாதிகள் தவறான காரியங்களுக்கு பயன்படுத்துகிறார்கள். பொதுவாக பேய், பிசாசுகள் இம்மரத்தின் மீதுதான் குடியிருக்கும்.

**காட்டு வேம்பு**

காட்டு வேம்பு பிரம்மாவின் அம்சமாகும். ஒரு சிலர் இதை விஷ்ணும்அம்சம் என கூறுவர் இம்மரம் சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும்

**அசோக மரம்**

அசோக மரம் சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும் .

**புளிய மரம்**

புளிய மரம் தீய அதிர்களை வெளிப்படுத்தும். புளிய மரத்தின் நிழல் நோய்களை உண்டாக்கும். புளிய மரங்களில் பேய், பிசாசுகள் தங்கி இருக்கும் என்பது நம்பிக்கை.

**மாதுளம் மரம்**

மாதுளம் மரம் லட்சுமியின் அம்சமாகும் . இம்மரத்தின் வெளிப்படும் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. இம்மரத்தின் கீழ் விளக்கேற்றி தம்பதிகளாய் வலம் வர தம்பதிகளிடையே அன்னியோன்யம் ஏற்படும்.



# 30. பறவைகளிலிருந்து வெளிப்படும் அதிர்வுகள்

**கிளி**

சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும். இதன் அதிர்வுகள் மூளைக்கு நல்லதாகும். அறிவை வளர்க்கும். அதனால் கிளி வீட்டில் வளர்க்கப்படுகிறது.

**மயில்**

சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும். மயில் இறகு இருக்கும் இடத்தை தீய சக்திகள் அண்டாது. மயில் இறகை பூஜை அறையில் வைக்கும் நோக்கமே நல்ல அதிர்வுகளைப் பெறுவது தான்.

**புறா**

சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும். அதனால் வீட்டில் வளர்க்கப்படுகிறது.

**காகம்**

தீய அதிர்வுகளை வெளிப்படுத்தும். இறந்தவர்களின் பிரதிநிதியாகும். கிரகங்களின் சனியின் வாகனமாகும். காக்கைக்கு உணவு வைத்தால் இறந்து போன நம் முன்னோர்களுக்கு உணவு படைத்தற்கு சமமாகும்.

**சிட்டுக்குருவி**

இதை கிராமங்களில் அடைக்கவான் குருவி என்று அழைப்பார்கள் இது ராகு கிரகத்தின் பிரதிநிதியாகும். சிட்டுக்குருவி வீட்டுற்குள் கூடுகட்டினால் ராகுவால் உண்டாகும் தோஷம் எல்லாம் விலகி விட்டதாக அர்த்தம். முஸ்லிம்கள் தோஷ பரிகாரமாக சிட்டுக்குருவிகளை வாங்கி, அதை தங்கள் உடலில் உள்ள ஏழு பாகங்களைத் தொட்டு பறக்கவிடுகிறார்கள். சிட்டுக்குருவிக்கு உணவு தானியங்களை உணவாக வைத்தால் ராகுவால் உண்டாகும் தோஷங்கள் எல்லாம் விலகும்.

**சேவல்**

சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும். அதனால் தான் வீடுகளில் வளர்க்கப்படுகிறது.

**ஆந்தை**

தீய அதிர்வுகளை வெளிப்படுத்தும் இதன் இறகுகள், எலும்புகள் மந்திரவாதிகளால் பயன்படுத்தப்படுகிறது. இதைக்காண்பது அபசகுணமாகும்.

**பருந்து**

சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும்,கருடன் விஷ்ணுவின் வாகனமாகும். கருட தரிசனம் நன்மை பயக்கும்.

பெரும்பாலும் வீடுகளில் சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும் பறவைகளே வளர்க்கப்படுகின்றன. பறவைகளை வேட்டையாடுவது பாவமாகும். தெய்வகுற்றமாகும். பொதுவாக கொண்டையுள்ள பறவைகள் சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும். கொண்டை உள்ள பறவைகள் மயில், சேவல், கிளி போன்றவையாகும். சில புறாக்களுக்கும் தலையில் கொண்டை இருக்கும்.



# 31. சுகப்பிரசவம் அடைய – கர்ப்பச்சடங்கு

கர்ப்பிணி பெண்கள் கர்ப்ப காலத்தில் கடைபிடிக்க வேண்டிய சடங்கு முறைகள் உள்ளன. இத்தகைய சடங்குகளை கடைபிடித்தால் பிரவசம் சுகபிரசவமாக அமையும். தாய்க்கும் சேய்க்கும் ஏதாவது தோஷங்கள் இருந்தால் விலகும். கர்ப்பமான இரண்டாவது மாதம் இரட்டை பிள்ளையார் வைத்து இரட்டை பழமும் பொங்கலும் நைவேத்யம் வைத்து வணங்கவேண்டும்.

மூன்றாவது மாதம் சூலமெழுதி பொங்கல் நைவேத்யம் வைத்து வணங்க வேண்டும்.

நான்காவது மாதம் நாகம் எழுதி பொங்கல் நைவேத்தியம் வைத்து வணங்க வேண்டும்

ஐந்தாவது மாதம் சிவபெருமானுக்கு மாலை சார்த்தி வணங்கவேண்டும்

ஆறாவது மாதம் முருகப்பெருமானை மலர்சூடி வணங்கவேண்டும்.

ஏழாவது மாதம் சப்த கன்னியர்களை வணங்க வேண்டும்

எட்டாவது மாதம் விஷ்ணு பகவானை வணங்க வேண்டும் சீமந்தம் செய்ய வேண்டும்

ஒன்பதாவது மாதம் நவக்கிரக பூஜை செய்தல்வேண்டும் .

பத்தாவது மாதம் இஷ்ட தேவதையை பூஜை செய்து வணங்க வேண்டும்.

இரண்டாம், மூன்றாம், நான்காம், மாதங்களின் கடைசியிலும் ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது , பத்தாம் மாதங்களின் தொடக்கத்திலும் மேற்கண்ட சடங்குகளை செய்ய வேண்டும்.

**ஒரு பெண்ணுக்கு சுகமாகப் பிரசவம் ஏற்படு செய்யவேண்டிய பரிகாரங்கள்**

1. வியாழக்கிழமை குரு ஹோரையில் தட்சிணாமூர்த்திக்கு , கொண்டைக்கடலை நிவேதனம் செய்து விநியோகம் செய்தல்.
2. குருபகவானுக்கு மஞ்சள் பொடி அபிசேகம் செய்தல்.
3. சஷ்டி திதிதோறும் விரதமிருந்து "கந்தர் கலிவெண்பா" நூலைப் பாராயணம் செய்து வர வேண்டும்.
4. மஞ்சள் வஸ்திரம் தானம் செய்தல்
5. திருச்செந்தூர் முருகனுக்கு 108 எலுமிச்சம் பழங்களைக் கொண்டு மாலை அணிவித்தல்.
6. கார்த்திகை நட்சத்திரம் வரும் நாட்களில் ஆறுசிட்டிகளில் நெய் ஊற்றி, திரிவைத்து விளக்கேற்றி தெப்பக்குளத்தில் மிதக்க விட்டு வணங்குதல், பின் சிட்டிகளை வீட்டிற்கு எடுத்து வந்து விட வேண்டும். தொடர்ந்து பயன்படுத்தலாம்.
7. தாய்க்கு எத்தனை வயதாகிறதோ அத்தனைக் கரும்புகள் கோயில் யானைக்கு வழங்குதல்.



# எளிய முறை நவகிரக சாந்தி பரிகாரம்

ஒரு கைப்பிடி அளவு நவதானியங்களை கையில் எடுத்துக் கொண்டு ஒன்பது முறை தலையைச்சுற்றி அதை ஒரு புதிய மண்பானையில் போட்டு வையுங்கள். தினமும் காலையில் குளிக்கச் செல்லும்போது ஒரு செம்பில் கொஞ்சம் தண்ணீரை எடுத்து ஒன்பது முறை தலையைச் சுற்றி அந்த நீரை மண்பானையில் உள்ள நவதானியத்தின் மீது ஊற்றுங்கள் இந்த பரிகாரத்தை பவுர்ணமியில் தொடங்கி அமாவாசையில் முடிக்கவேண்டும். அதாவது பௌர்ணமிமுதல் அமாவாசை வரை தொடர்ந்து 15 நாட்கள் செய்ய வேண்டும். இந்த பதினைந்து நாட்களில் நவதானியம் முளைத்துவிடும். 15 நாட்கள் இவ்வாறு செய்தபின் மண்பானைக்கு மஞ்சள், குங்குமம் இட்டு வணங்கி, நவகிரகஸ்லோகங்களை சொல்ல வேண்டும்.

அதன்பின் பானையை எடுத்து ஒன்பது முறை உடலை சுற்றவேண்டும். பிறகு மண்பானை முன்பாக பானையை எடுத்துச் சென்று ஓடும் நீரில் விட்டுவிட வேண்டும். அல்லது ஆள்நடமாட்டம் இல்லாத காடுகளிலோ அல்லது புதர்களிலோ வைத்துவிட்டு வந்துவிடவேண்டும். இவ்வாறு செய்தால் நவக்கிரங்களால் உண்டாகும் அனைத்து தோசங்களும் நீங்கி விடும்.

**களத்திர ஸ்தானத்தில் பாவகிரகங்கள் நின்றால் செய்ய வேண்டிய பரிகாரங்கள்**

7ல் செவ்வாய் நின்றால் சுப்பிரமணிய உருவத்தை வெள்ளியில் செய்து தானம் செய்ய வேண்டும்.

7ல் சூரியன் நின்றால் சிவனுடைய ரூபத்தை வெள்ளியில் செய்து தானம் செய்யவேண்டும்.

7ல் சனி நின்றால் சிவனுடைய ரூபத்தை வெள்ளியில் செய்து தானம் செய்யவேண்டும்.

7ல் ராகு நின்றால் ஐந்துதலை நாகரூபத்தை வெள்ளியில் செய்து தானம் செய்ய வேண்டும்.

7ல் கேது நின்றால் ஒரு தலை நாக ரூபத்தை வெள்ளியில் செய்து தானம் செய்யவேண்டும்.

பரிகாரங்கள் செய்யும் போது யாரும் தானம் பெற முன்வரமாட்டார்கள் . எனவே தானமாகக் கொடுக்க வேண்டியதை கோயில் உண்டியலில் போட்டுவிடுவது நல்லது.

**விவாக தடை நீங்க பரிகாரங்கள்**

1. முல்லைப்பூ, மொட்டுக்கள் கொண்டு பார்வதி தேவியை அர்சித்தல்

2. பார்வதி தேவிக்கு பட்டு வஸ்திரம் சார்த்துதல்

3. சோமவார விரதம் அனுஷ்டித்தல்

4. பட்டு வஸ்திரம், வளையல், கண்மை, சாந்துப்பொட்டு இவற்றை ஒரு தாம்பாளத்தில் வைத்து விவாகம் ஆன தம்பதிகளுக்கு தானம் செய்தல்.



# 32. நட்சத்திர விஷ நாழிகை பரிகாரம்

## (நட்சத்திர யாஜ்யம்)

ஒவ்வொரு நட்சத்திரமும் ஒரு குறிப்பிட்ட நாழிகைக்கு மேல் நான்கு நாழிகை காலம் வரையில் தியாஜ்யம் என்னும் தோஷத்தை பெற்றுவிடும். தியாஜ்யம் என்றால் விஷகாலம் என்று பொருளாகும். தியாஜ்ய காலத்தில் சுபகாரியங்கள் செய்ய கூடாது என்பது விதியாகும். தியாஜ்ய நாழிகை ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் ஆரம்பமாகி முடிகின்ற நாழிகை எது என்பது கீழே தரப்பட்டுள்ளது.

| நட்சத்திரம் | ஆரம்பநாழிகை | முடிவு நாழிகை |
|---|---|---|
| அஸ்வினி | 50 | 54 |
| பரணி | 24 | 28 |
| கிருத்திகை | 30 | 34 |
| ரோகிணி | 40 | 44 |
| மிருக சீரிடம் | 14 | 18 |
| திருவாதிரை | 21 | 25 |
| புனர்பூசம் | 30 | 34 |
| பூசம் | 20 | 24 |
| ஆயில்யம் | 32 | 36 |
| மகம் | 30 | 34 |
| பூரம் | 20 | 24 |
| உத்திரம் | 18 | 22 |
| அஸ்தம் | 21 | 25 |
| சித்திரை | 20 | 24 |
| சுவாதி | 14 | 18 |
| விசாகம் | 14 | 18 |

| | | |
|---|---|---|
| அனுசம் | 10 | 14 |
| கேட்டை | 14 | 18 |
| மூலம் | 56 | 60 |
| பூராடம் | 24 | 28 |
| உத்திராடம் | 20 | 24 |
| திருவோணம் | 10 | 14 |
| அவிட்டம் | 10 | 14 |
| சதயம் | 18 | 22 |
| பூரட்டாதி | 16 | 20 |
| உத்திரட்டாதி | 24 | 28 |
| ரேவதி | 30 | 34 |

தியாஜ்ய காலமான இந்த நான்கு நாழிகை களில் பெண் பிறந்தாலோ அல்லது ருதுவானாலோ என்ன பலன் என கீழே தரப்பட்டுள்ளது.

முதல் நாழிகை – தந்தை மரணம்

இரண்டாவது நாழிகை – தாய் மரணம்

மூன்றாவது நாழிகை – தனநாசம்

நான்காவது நாழிகை – தனக்கே மரணம்

பரிகாரம்

முதல் நாழிகை – ருத்ர ஜெபம் செய்தல், சிவவழிபாடு செய்தல்

இரண்டாவது நாழிகை –எமதர்ம ராஜனை நினைத்து வழிபாடு செய்தல்

மூன்றாவத்து நாழிகை – அக்னி தேவனை வழிபடுதல்

நான்காவது நாழிகை – மிருத்யுஞ்செய ஜெபம் செய்தல்

# 33. ஆயுள் தோஷமும் பரிகாரமும்

1. ஜாதகத்தில் லக்னாதிபதி நீச்சம் பெற்று, லக்னாதிபதிக்கு திரிகோணத்தில் ராகு நின்றால் குழந்தைக்கு பாலாரிஷ்ட தோசமுண்டு.
2. லக்னாதிபதிக்கு திரிகோணத்தில் ராகு இருப்பது ஆயுள் தோசத்தைத்தரும்.
3. ஆண்கள் ஜாதகத்தில் குரு நிச்சமடைந்து, அந்த குருவிற்கு திரிகோணத்தில் ராகுநின்றால் பாலரிஷ்ட தோசமுண்டு.
4. குருநின்ற ராசிக்கு திரிகோணத்தில் ராகு நின்றால் ஆயுள் தோசத்தைத்தரும் (ஆண்களுக்கு)
5. பெண்கள் ஜாதகத்தில் சுக்கிரன் நீச்சமடைந்து, அந்த சுக்கிரனுக்கு, திரிகோணத்தில் ராகு நின்றால் பாலாரிஷ்ட தோஷமுண்டு.
6. சுக்கிரன் நின்ற ராசிக்கு திரிகோணத்தில் ராகுநின்றால் பெண்களுக்கு ஆயுள் தோசத்தைத்தரும்.

மேற்கண்ட அமைப்புகளுடன் குழந்தை ஜெனைமானால் பிறப்பு தீட்டு காலம் நீங்கிய உடன் அக்குழந்தைக்காக, குழந்தையின் பெற்றோர் வீட்டில் கணபதி ஹோமம், நவகிரக ஹோமம் மற்றும் ஆயுள்ஹோமம் இவைகளைச் செய்து கொண்டால் குழந்தைக்கு பாலாரிஷ்ட தோசம் மற்றும் அற்ப ஆயுள் தோசம் நீங்கும் மேலும் ஆயுள்விருத்திக்காக முடிந்த வரையில் அன்னதானம் செய்யவேண்டும். அன்ன ஆகாரம் இல்லாமல் யாரும் உயிர் வாழ முடியாது. அன்ன ஆகாரமல்லாமல் பல நாட்கள் பட்டினி கிடந்தால் உடல் அழிந்து உயிர் உடலை விட்டுப் பிரிந்து விடும் . அன்னம் உடலை மட்டும் வளர்ப்பதால் உ.யிரை உணர்க்கிறது. எனவே அன்னதானம் செய்வதால் ஏற்படும் புண்ணியம் நிச்சயம் ஒருவரின் ஆயுளை விருத்தி செய்யும். எனவே ஆயுள் தோச நிவர்த்திக்காக ஹோமம் செய்பவர்கள் நிச்சயம் பத்துபேருக்காவது அன்னதானம் செய்யவேண்டும்.

## அவமிருத்யு தோசமும் பரிகாரமும்

1. ஆண் ஜாதகத்தில் குரு, செவ்வாய், ராகு இம் மூன்று கிரகங்களும் ஒன்றுக்கொன்று திரிகோணமாக இருந்தால் ஜாதகருக்கு எதிர்பாராத விபத்து மூலம் மரணம் ஏற்படவாய்ப்புண்டு.

2. ஆண் / பெண் இருபாலார் ஜாதகங்களிலும் சனி, செவ்வாய், ராகு இம்மூன்று கிரகங்களும் ஒன்றுக்கொன்று திரிகோணமாக இருந்தால் ஜாதகருக்கு எதிர்பாராத விபத்து மூலம் மரணம் ஏற்பட வாய்ப்புண்டு.

3. லக்னாதிபதி, எட்டுக்குடையவன், ராகு இம்மூன்று கிரகங்களும் ஒன்றுக்கொன்று திரிகோணமாக இருந்தால் ஜாதகருக்கு விபத்து மூலம் மரணம் ஏற்பட வாய்ப்புண்டு.

4. பெண் ஜாதகத்தில் சுக்கிரன், செவ்வாய், ராகு இம்மூன்று கிரகங்களும் ஒன்றுக்கொன்று திரிகோணமாக இருந்தால் ஜாதகருக்கு விபத்து மூலம் மரணம் ஏற்பட வாய்ப்புண்டு.

ஜாதகத்தில் மேற்கண்ட கிரக அமைப்பு உடையவர்கள் ஆறு வருடத்திற்கு ஒருமுறை வீட்டில் மிருத்யுஞ்செய ஹோமம் செய்து கொண்டால் அவர்களுக்கு விபத்தோ, மரணமோ ஏற்படாது. மரண பயமும் ஏற்படாது. மிருத்யுஞ்செய ஹோமத்திற்கு மாற்று பரிகாரமாக சிவாயலங்களுக்கு சென்று சிவனுக்கு ருத்ராபிசேகம் செய்து வழிப்பட்டால் மேற்கண்ட தோஷத்திலிருந்து விடுபடலாம். ஜாதகர் பிறந்த வருடத்திலேயே முதல் முறை மிருத்யுஞ்செய ஹோமம் செய்யவேண்டும்.

அதன் பிறகு 6,12,18,24,30, 36,42,48,54, 60,66,72,80 ம் வயதுகளில் மேற்கண்ட பரிகாரம் செய்ய வேண்டும் . மேற்கண்ட தோஷமுடையவர்கள் மரம், செடி கொடிகளை தங்கள் கைகளால் வெட்டவோ, பிடுங்கி எரியவோ கூடாது. மேலும் உயிரினங்கள் எதையும், அடித்தோ அல்லது காயப்படுத்தியோ துன்புறுத்தக்கூடாது. மாமிச உணவு உண்ணக்கூடாது.

# 34. பித்ரு தோச பரிகாரம்

ஒருவர் எந்த மாதத்தில் , எந்த பட்சத்தில் (வளர்பிறை அல்லது தேய்பிறை) , எந்த திதியில் இறந்தாரோ அதே மாதம், பட்சம், திதியில் ஒவ்வொரு வருடமும் இறந்தவருடைய புத்திரனால் செய்யப்பட வேண்டிய கர்மம் வருட சிரார்த்தமாகும். இதை பித்ரு பூஜை, தர்ப்பணம், திதி, திவசம் என்றும் கூறுவார்கள்.

பித்ரு பூஜையானது பஞ்சாங்கத்தில் உள்ள ஐந்து அங்கங்களில் ஒன்றான திதியை ஒட்டி அனுசரிக்கப்படுவதால் அது திதி என அழைக்கப்படுகிறது.

பஞ்சாங்கத்தில் உள்ள ஐந்து அங்கங்களும் பஞ்ச பூதங்களை அடிப்படையாகக் கொண்டவையாகும்.

| பஞ்சாங்கம் | பஞ்சபூதம் |
|---|---|
| வாரம் | நிலம் |
| திதி | நீர் |
| நட்சத்திரம் | நெருப்பு |
| யோகம் | காற்று |
| கரணம் | ஆகாயம் |

பஞ்சாங்கத்தில் ஒன்றான திதியானது நீர்தத்துவத்தைக் குறிக்கிறது: பித்ரு பூஜையும் நீர்நிலைகளுக்கு அருகிலேயே செய்யப்படுகிறது. பித்ரு பூஜையும் முக்கிய அம்சம் என்ன வென்றால் பித்ரு பூஜை செய்பவன் எள்ளையும், சோற்றுப் பிண்டத்யையும் நீரில் வைத்து அதன் மீது நீரை தெளிப்பான். இவ்வாறு நீருக்கிறைக்கப்படும் எள்ளும், சோற்றுப் பிண்டமும் பித்ருக்களைப் போய் சேருமா? என்ற கேள்விக்கு தத்துவார்த்தமான விடை உண்டு. அதைப்பார்ப்போம்.

| பஞ்ச பூதம் | புலனுறுப்புகள் | ஐம்புலன்கள் |
|---|---|---|
| நிலம் | உடல் | உணர்தல் |
| நீர் | வாய் | சுவைத்தல் |
| நெருப்பு | கண்கள் | பார்த்தல் |
| காற்று | மூக்கு | நுகர்தல் |
| ஆகாயம் | காது | கேட்டல் |

பஞ்ச பூதங்களில் நீரானது புலனுறுப்புகளில் வாயைக் குறிக்கும். எனவே நீரில் தெளித்த எள்ளும், சோறும் பித்ருக்களின் வாய்க்குள் செல்வதாகக் கொள்ளலாம். மேலும் இறந்தவர்களை வைகுண்ட பதவி அடைந்ததாக கருதுவது வழக்கம். வைகுண்ட நாதனான விஷ்ணு பாற்கடலில் பள்ளி கொண்டுள்ளான். எனவே வைகுண்டம் என்பது சமுத்திரத்தைக் குறிக்கிறது. சமுத்திரத்தில் மீன் வடிவத்தில முன்னோர்கள் இருக்கிறார்கள் என்பது ஒரு நம்பிக்கை.

• பித்ரு பூஜையை சரிவர செய்ய முடியாதவர்கள், அமாவாசை நாட்களில் புனித நதிகளில் நீராடி மீன்களுக்கு சாதம், பொரி போன்ற உணவுப் பொருட்களை அளித்தால் பித்ருக்கள் சந்தோச மடைவார்கள். இதன் மூலம் பித்ரு தோசத்திலிருந்து நிவாரணம் அடையலாம்.



# 35. பத்துப் பொருத்தங்களும் பரிகாரங்களும்

நட்சத்திர ரீதியான பத்துப்பொருத்தங்கள் பார்க்கும் போது பத்துக்கு பத்துப் பொருத்தம் யாருக்குமே அமையாது. அதிகப்படியாக எட்டுப் பொருத்தங்கள் வரை மட்டுமே அமையும். பத்துக்கு ஆறு பொருத்தங்கள் இருந்தால் போதும் என ஜோதிடர்கள் பரிந்துரை செய்தாலும், பலர் இதை ஏற்றுக் கொள்வதில்லை. குறைவான பொருத்தங்களுடன் திருமணம் செய்து கொள்பவர்களுக்கு மனதில் ஒரு நெருடல் இருக்கதான் செய்கிறது. அத்தகையவர்கள், எந்த பொருத்தம் இல்லையோ அந்த பொருத்தத்துக்குரிய பரிகாரங்களைச் செய்து கொள்வது நல்லது.

தினப்பொருத்தம் இல்லை என்றால் சூரிய நாராயணர் உருவத்தை தன் தகுதிக்கும் தகுந்தாற்போல் தங்கத்திலோ அல்லது வெள்ளியிலோ செய்து கோயில் பூசாரி அல்லது பொருத்தம் பார்த்த ஜோதிடருக்கு தானமாக வழங்க வேண்டும்.

கணப்பொருத்தம் இல்லை என்றால் கணபதி உருவத்தை தன் தகுதிக்கு தகுந்தாற்போல் தங்கத்திலோ அல்லது வெள்ளியிலோ செய்து கோயில் பூஜாரி அல்லது பொருத்தம் பார்த்த ஜோதிடருக்கு தானமாக வழங்க வேண்டும்.

யோனி பொருத்தம் இல்லை என்றால் காமதேனு உருவத்தை தன் தகுதிக்கு தகுந்தாற்போல் தங்கத்திலோ அல்லது வெள்ளியிலோ செய்து கோயில் பூஜாரி அல்லது பொருத்தம் பார்த்த ஜோதிடருக்கு தானமாக வழங்க வேண்டும்.

ராசி பொருத்தம் இல்லையென்றால் உமாமஹேஸ்வர உருவத்தை தன் தகுதிக்குத் தகுந்தாற்போல் தங்கத்திலோ அல்லது எவள்ளியிலோ செய்து கோயில் பூசாரி அல்லது பொருத்தம் பார்த்தஜோதிடருக்கு தானமாக வழங்க வேண்டும்.

ராசி அதிபதி பொருத்தம் இல்லை யென்றால் , சீதா – ராமர் உருவத்தை தன் தகுதிக்குத் தகுந்தாற்போல் தங்கத்திலோ அல்லது வெள்ளியிலோ செய்து கோயில் பூஜாரி அல்லது பொருத்தம் பார்த்த ஜோதிடருக்கு தானமாக வழங்க வேண்டும்.

ரச்சுப் பொருத்தம் இல்லையென்றால் சிவலிங்க உருவம் பொறிக்கப்பட்ட தாலியை ( தங்கம் அல்லது வெள்ளியில் செய்தது) கோயில் பூஜாரி அல்லது பொருத்தம் பார்த்த ஜோதிடருக்கு தானமாக வழங்க வேண்டும்.

வேதைப் பொருத்தம் இல்லையென்றால் பன்றி அல்லது ஆமை உருவத்தை தன் தகுதிக்குத் தகுந்தாற் போல் தங்கத்திலோ அல்லது வெள்ளியிலோ செய்து, கோயில் பூஜாரி அல்லது பொருத்தம் பார்த்த ஜோதிடருக்கு தானமாக வழங்க வேண்டும். திருமணப் பொருத்தம் பார்க்கும் போது பத்துப் பொருத்தங்களைத் தவிர ஆண், பெண் இருவருக்கும் ஏக தசா சந்திப்பு வருகிறதா என பார்ப்பார்கள். தசா சந்திப்புக்கு பரிகாரமாக சிவமந்திர ஜெபம், சிவபஜனம், பிரதோசவிரதம் ஆகியவைகளை மேற்கொள்ளலாம்.



# 36. ஜாதகம் இல்லாதவர்களுக்கு பொதுவான பரிகாரங்கள்

பொதுவாக பரிகாரங்கள் ஜாதகரீதியாக பரிந்துரைக்கப் படுகின்றன. ஜாதகம் இல்லாதவர்களுக்கு எப்படி பரிகாரம் கூறுவது என்ற பிரச்சினை வருகிறது. எனவே ஜாதகம் இல்லாதவர்கள் கீழ்கண்ட பரிகாரங்களை செய்வதன் மூலம், கிரக தோஷங்களிலிருந்து விடுபடலாம்.

1. தொழில், வியாபாரம், உத்யோகம் இவைகளில் தடை உள்ளவர்கள், மற்றவர்களின் புறங்கூறுதலுக்கு உள்ளானவர்கள் தினமும் நாய்களுக்கு உணவிட்டுவர தோசங்கள் நீங்கி நிம்மதி உண்டாகும்.
2. பறவைகளுக்கு நவதானியங்களை உணவாக அளித்தல்.
3. பசுக்களுக்கு, புல், வைக்கோல் போன்ற தீவனங்களை வழங்குதல், அகத்திக்கீரை வழங்கலாம்.
4. கண் தெரியாதவர், காது கேளாதவர், பேசமுடியாத ஊமை உடல் ஊன முற்றவர்களுக்க அன்னதானம், வஸ்திரதானம் செய்தல்.
5. காக்கைக்கு தினமும் உணவளித்தல்.
6. பெரியோர்களைக் காணும் போது அவர்கள் காலில் விழுந்து ஆசி பெறுதல்
7. தாய், தந்தையரை மதித்தல், அவர்களில் சொற்படி நடத்தல்
8. முக்கியமான வேலையாக வெளியேச் செல்லும் போது சர்க்கரை கலந்த தயிரை சிறிது உண்டபின் வெளியே செல்லுதல்.
9. தேர்வு எழுதும்போது குழப்பமடையும் மாணவர்கள், தேர்வு எழுதச் செல்லும் போது, தன்னுடைய சட்டைப்பையில் ஒன்பது ஆரஞ்சு பழத்தோல் துண்டுகளை வைத்துக்கொண்டு சென்றால் குழப்பங்கள் ஏற்படாது.

# 37. பரிகாரம் கூறுவதில் சகுனங்களின் பங்கு

ஜோதிடர்கள் பரிகாரம் கூறும்போது ஏதாவது சகுனங்கள் தோன்றுகிறதா என்பதை உன்னிப்பாகத் கவனிக்க வேண்டும். சகுனங்கள் பார்த்து கூறப்படும் பரிகாரங்கள் நிச்சயமாக பலன் தரும். எனவே பரிகாரம் சம்பந்தமான சகுனங்களைக் காண்போம்.

1. ஜோதிடர் தோச பரிகாரங்களைக் கூறிக் கொண்டிருக்கும் போது கோயில் மணியோ அல்லது எங்காவது பூஜை மணியோ ஒலிப்பதைக்கேட்க நேர்த்தால் பரிகாரங்கள் நிச்சயம் பலன் தரும்.
2. ஜோதிடர் தோச பரிகாரங்களைக் கூறிக் கொண்டிருக்கும் போது யாராவது கோயில் பிரசாதம் கொண்டு வந்து கொடுத்தால் பரிகாரங்கள் நிச்சயம் பலன் தரும்.
3. ஜோதிடர் தோச பரிகாரங்களைக் கூறிக் கொண்டிருக்கும் போது மந்திர ஒலி அல்லது பக்திப் பாடல்களைக் கேட்க நேர்ந்தால் பரிகாரங்கள் நிச்சயம் பலன் தரும்.
4. ஜோதிடர் தோச பரிகாரங்களைக் கூறிக் கொண்டிருக்கும்போது கோயில் அர்ச்சகர் அங்கே வரக்கண்டால் பரிகாரங்கள் நிச்சயம் பலன் தரும்.
5. ஜோதிடர் தோச பரிகாரங்களைக் கூறிக் கொண்டிருக்கும் போது யாராவது ஒருவர் குளித்துவிட்டு வருவதைக் கண்டால் பரிகாரம் நிச்சயம் பலன் தரும்.
6. ஜோதிடர் தோச பரிகாரங்களைக் கூறிக் கொண்டிருக்கும் போது எந்த தெய்வத்தின் படம் அல்லது உருவம் கண்ணில் படுகிறதோ அந்த தெய்வத்தை வணங்கி வர பரிகாரம் நிச்சயம் பலன் தரும்.
7. ஜோதிடர் தோச பரிகாரங்களைக் கூறிக்கொண்டிருக்கும் போது யாராவது ஒருவர் ஒரு கோயிலைப் பற்றியோ, ஒரு தெய்வத்தைப் பற்றியோ பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டாலோ, ஒரு தெய்வத்தின் பெயரை உச்சரிப்பதைக் கேட்டாலோ, அந்த கோயில் அல்லது அந்த தெய்வத்தை

வழிபட பரிகாரம் உண்டாகும்.

8. ஜோதிடர் தோச பரிகாரம் கூறிக் கொண்டிருக்கும் சமயத்தில் யாராவது வந்து யாசகம் கேட்டாலோ அல்லது யாசகரைக் காண நேர்ந்தாலோ, தான தர்மங்கள் செய்வதன் மூலம் பரிகாரம் உண்டாகும்.

9. ஜோதிடர் தோச பரிகாரம் கூறிக்கொண்டிருக்கும் சமயத்தில் துணி வெளுப்பவனையோ அல்லது துணிமணிகளை கஞ்சிப்போட்டு தேய்ப்பவளையே கர்ண நேர்ந்தாலோ அல்லது அவன் குரலை கேட்க நேர்ந்தாலோ வஸ்திர தானம் செய்வதன் மூலம் பரிகாரம் உண்டாகும்.

10. ஜோதிடர் தோச பரிகாரம் கூறிக்கொண்டிருக்கும் சமயத்தில் யாராவது வந்து என்ன பொருள் வேண்டும் என்று கேட்கிறார்களோ அந்தப் பொருளை தானம் செய்ய பரிகாரம் உண்டாகும். கேட்ட பொருள் விலை உயர்ந்ததாக இருந்தால் அப்பொருள் போன்ற பிரதிமையை தானம் செய்யலாம்.

11. ஜோதிடர் தோச பரிகாரம் கூறிக் கொண்டிருக்கும்போது யாராவது வீட்டிலுள்ள குப்பைகளைக் கூட்டி வெளியே போடுவதைக் கண்டால் பரிகாரம் நிச்சயம் பலன் தரும்.

12. ஜோதிடர் தோச பரிகாரம் கூறிக்கொண்டிருக்கும்போது யாராவது தலைமுடியில் சிக்கு நீக்குவதைக் கண்டால் பரிகாரம் மூலம் தடைகள் நீங்கும்.

13. ஜோதிடர் தோச பரிகாரம் கூறிக்கொண்டிருக்கும் போது யாராவது பாத்திரங்களைத் கழுவிக்கொண்டிருப்பதைக் காண நேர்ந்தால், புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவதன் மூலம் பரிகாரம் உண்டாகும்.

14. ஜோதிடர் தோச பரிகாரம் கூறிக்கொண்டிருக்கும்போது வீட்டில் யாராவது ஒட்டடை அடிப்பதையோ அல்லது வீட்டை சுத்தம் செய்வதையோ காண நேர்ந்தால் வீட்டில் நவகிரக ஹோமம் செய்ய பரிகாரம் உண்டாகும்.

# 38. ஹோம நெருப்பிலிடப்படும் பட்சணங்கள் தேவதைகளை சென்றடையுமா?

தேவதைகளை மகிழ்வித்து, அவர்களின் அருளாசியை பெறுவதற்காக செய்யப்படுவது ஹோமாதிக்காரியங்களாகும். இதை யாகம் என்றும், யக்ஞம், என்றும் கூறுவார்கள்.

ஹோமம் செய்யும்போது நெருப்பு வளர்த்து அதில் நவதானியங்கள், அன்னம் , பட்சணங்கள், நெற்பொறி முதலிய பொருட்களை ஆகுதியாக நெருப்பிலிடுவார்கள். இவ்வாறு நெருப்பிலிட்ட பட்சணங்கள் குறிப்பிட்ட தேவதையை சென்றடையுமா? எனக் கேட்டால் சென்றடையும் என்பதற்கு தத்துவார்த்மான விளக்கம் உண்டு.

பஞ்ச பூதங்களில் ஒன்றான நெருப்பின் தன்மை என்ன வென்றால் நெருப்பு எப்பொழுதும் ஆகாயத்தைப் பற்றி நிற்கும். எனவே பூமியில் நெருப்பு வளர்க்கும் போது, அந்த நெருப்பானது வானத்திற்கும், பூமிக்கும் ஒரு இணைப்பை உண்டாக்குகிறது. அதாவது நெருப்பானது வானத்திற்கும் ,பூமிக்கும் இடையில் ஒரு ஊடகமாகச் செயல் படுகிறது. எனவே நெருப்பிலிட்ட பட்சணங்களின் சுவையை வானவர்கள் நெருப்பின் வழியாக பெற்றுக் கொள்கிறார்கள் என்பது ஐதீகம். மேலும் நெருப்பிலிட்ட பட்சணங்கள் யாருக்குப்போய் சேர வேண்டும் என்பதை சங்கல்பம் மூலம், பிரார்த்தனை மூலம் தெரிவித்தால்,அந்தந்த தேவதைகள் மட்டும் வந்து பெற்றுச் செல்வார்கள்.

ஹோமாதி காரியங்கள் செய்யும்போது மந்திரங்கள் ஜெபிக்கப்படுகின்றன. இந்த மந்திரங்களை வானவர்களிடம் எடுத்துச்செல்வதும் நெருப்புதான். எனவே ஹோமாதி காரியங்கள் செய்து வீண் விரையம் என்று யாரும் நினைக்க வேண்டாம்.

**ஹோமங்களும் நவகிரக தோஷ நிவர்த்தியம்-**

பொதுவாக கிரக தோஷ நிவர்த்திக்காக செய்யப்படுவது நவகிரக ஹோமமாம் . ஜாதகத்தில் எந்தெந்த கிரகங்கள் சுபஸ்தானத்தில் இருக்கின்றனவோ, அக்கிரகங்களின் அசுபஸ்தானங்களில் இருக்கின்றனவோ அக்கிரகங்களின் அனுகூலம் சித்திப்பதற்காகவும் அதிதேவதை பிரத்யதிதேவதைகளுடன் கூடின ஆதித்யன் முதலான நவகிரகங்களின் அருள் சித்திக்கும் பொருட்டு நவகிரக ஹோமம் செய்யப்படுகிறது.

ஜாதகத்தில் பாலாரிஷ்ட தோசம், அற்ப ஆயுள்தோஷம் காணப்பட்டால் நவக்கிரக ஹோமத்துடன் ஆயுள் ஹோமத்தையும் செய்யவேண்டும் பொதுவாக அறுபது வயதிற்கு மேல் ஏற்படக்கூடிய மாரகதோஷம் ,கண்டகதோஷம் இவைகளுக்கு ஆயுஸ்ஹோமம் செய்து கொள்ளலாம்.

ஜாதகத்தில் காணப்படும் மிருத்யு தோஷம், கண்டக தோஷம் விபத்துதோஷம் இவைகளுக்கு மிருத்யுஞ்செய ஹோமம் செய்யவேண்டும்.

ஜாதகத்தில் கேது கிரகத்தினால் ஏற்படும் எல்லாவிதமான தடைகளையும் நீக்குவதற்கு கணபதிஹோமம் செய்யவேண்டும். எந்த ஹோமம் செய்தாலும் கணபதி ஹோமம் நவக்கிரக ஹோமத்துடன் இணைத்து செய்வது வழக்கத்தில் உள்ளது.

ஜாதகத்தில் புத்திரதோஷம் உள்ளவர்கள் புத்திர காமேஷ்டி ஹோமம் செய்யலாம்.

பித்துரு தோஷம், செய்வினை உபாதைகள் , உள்ளவர்கன் மிருத்யுஞ்செய ஹோமம் அல்லது சுதர்சன ஹோமம் செய்யலாம். நாள்பட்ட வியாதிகளிலிருந்து விடுபட மிருத்யுஞ்செய ஹோமம் செய்யலாம்.

ஜாதகத்தில் மாரக மாரகாதிகளின் தசா புக்திகள் நடக்கும்போது மிருத்யுஞ்செய ஹோமம் அல்லது சுதர்சன ஹோமம் செய்து கொள்வது நல்லது.

கோட்சார சனி ஜென்மராசிக்கு ஏழு, எட்டாம் ராசிகளில் சஞ்சரிக்கும் காலங்களில் ஜாதகருக்கு மரண பயம் ஏற்படுமானால் மிருத்யுஞ்செய ஹோமம் செய்து கொள்ளலாம்.

ஏழரைச் சனிக் காலத்தில் ஜாதகருக்கு எல்லாகாரியங்களிலும் தடைகள் உண்டாகும் . எனவே ஏழரைச் சனிக்காலத்தில் வீட்டில் கணபதி ஹோமமும், நவகிரக ஹோமமும் செய்து கொண்டால் தடை நிங்கும்.

திருமணத்தடை நீங்க சுயம்வர பார்வதி ஹோமம் செய்யலாம்.

சத்ரு ஜெயத்திற்காகவும், அரசியலில் வெற்றி பெறுவதற்காகவும் சண்டி ஹோமம் செய்யலாம்.

**ஹோமங்களும் அதன் பலன்களும்-**

ஸ்ரீவாஞ்ச கல்ப கணபதி ஹோமம் – நாம்நினைக்கும் காரியம் தடையின்றி நடைபெற செய்ய வேண்டியது.

நவக்கிரக ஹோமம் – கிரக தோஷங்கள் விலக செய்யவேண்டியது.

ஸ்ரீ வித்யா ஹோமம் – நாட்டில் அமைதியும் சுபிட்சமும் உண்டாக செய்யவேண்டியது.

அம்ருத ம்ருத்யுஞ்செய ஹோமம் – ஆயுள் விருத்திக்காகச் செய்யவேண்டியது.

ஸ்ரீசூக்தி ஹோமம் – செல்வம் பெருக செய்யவேண்டியது

சுதர்சன ஹோமம் – எதிரிகள் பயம்நீங்க, அபஸ்மாரம் விலக செய்யவேண்டியது.

ஆவாஹந்தி ஹோமம் – ஏவல், பில்லி, சூன்யம், விலக செய்யவேண்டியது.

வருண ஹோமம் – மழைபொழிய செய்ய வேண்டிய ஹோமம்.

# 39. பாரத பூமி ஒரு தெய்வீக பூமி

பாரதம், உலகநாடுகளிலிருந்து வேறுபட்டு ஒரு தனித்தன்மையுடன் விளங்குவதற்கு என்னகாரணம் என்று ஆராய்வோமானால் ஒரு உண்மை விளங்கும். அதற்கு காரணம் பாரத மக்களிடையே இருக்கும். அசைக்க முடியாத தெய்வ நம்பிக்கை தான். பாரதத்தின் பல்வேறு இடங்களில் பல்வேறுவிதமான தெய்வ நம்பிக்கைகள் இருக்கின்றன. இதற்கு என்ன காரணம் என்று சிந்தையில் ஆழ்ந்த போது எடுத்த முத்துதான் இச்சிறுகட்டுரை.

பாரதத்தில் பல்வேறு காலகட்டத்தில், பல்வேறு இடங்களில் தோன்றிய மகான்கள் மற்றும் முனிவர்கள், பல்வேறு சாதனை முறைகளை நமக்கு தந்திருக்கிறார், கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம், ராஜயோகம் என பல சாதனை முறைகள் உள்ளன. அவற்றில் குண்டலினி யோகம் என்றும் ஒரு யோக முறையும் உண்டு. குண்டலினி யோகமுறையில், நமது உடலில் மூன்று முக்கிய நாடிகளாக, இடநாடி, பிங்கள நாடி மற்றும் சூஷ்மநாடி இருப்பதாகவும், ஏழு ஆதாரங்கள் அல்லது சக்கரங்கள் அல்லது ஏழுசக்தி மையங்கள் நம் உடலில் இருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

இதில் இடநாடி என்பது உடலின் இடப்பாகத்திலும் பிங்கள நாடி உடலின் வலப்பாகத்தில், சூஷ்மண நாடி உடலின் நடுப்பகுதியில், அதாவது முகுது தண்டு பகுதியில் உள்ளதாகவும் கூறப்பட்டிருக்கிறது. ஏழுசக்கரங்களில் , முதலாவது சக்கரம் முதுகுத்தண்டின் அடிபாகத்தில் உள்ளது. இதற்கு மூலாதாரசக்கரம் என்று பெயர், தொப்புள்பகுதில் மூன்றாவது சக்கரம் என்று பெயர். அடுத்தஇருதய பகுதியில் நான்காவது சக்கரம் உள்ளது இதற்கு அனகதா சக்கரம் என்று பெயர். கழுத்து பகுதியில் ஐந்தாவது சக்கரம் உள்ளது இதற்கு விசுத்தி சக்கரம் என்று பெயர். புருவ மத்தியில் ஆறாவது சக்கரம் உள்ளது அதற்கு ஆக்னேய சக்கரம்

என்றும் பெயர் அடுத்து தலை உச்சியில் ஏழாவது சக்கரம் உள்ளது இதற்கு சஹஸ்ரரசக்கரம் என்று பெயர்.

இந்த ஏழு சக்கரங்களிலும், தெய்வசக்திகள் இருப்பதாக கூறப்படுக்கிறது அதன் படி

| | | |
|---|---|---|
| மூலதாரசக்கரம் – | நடு | – கணேசர், கௌரி குண்டலினி |
| | இடம் | – கணேசர் |
| | வலம் | – கார்த்திகேயன் |
| ஸ்வாதிஸ்ட்டானம் – | நடு | – பிரம்மா, சரஸ்வதி |
| | இடம் | – பிரம்ம , வித்யா |
| | வலம் | – லட்சுமணர் |
| மணிப்பூரகம் – | நடு | – விஷ்ணு , லஷ்மி |
| | இடம் | – கிரக லக்ஷ்மி |
| | வலம் | – ராக லக்ஷ்மி |
| அனாகதம் – | நடு | – ஜகதாம்பா |
| | இடம் | – சிவன், பார்வதி |
| | வலம் | – சீதா, ராமன் |
| விசுத்தி – | நடு | – ராதா, கிருஷ்ணன் |
| | இடம் | – விஷ்ணு மாயா, |
| | வலம் | – யசோதா மாதா, ருக்மிணி, விட்டல் |
| ஆக்னேயம் – | நடு | – இயேசு, மேரி |
| | இடம் | – மகாவீரர் |
| | வலம் | – புத்தர் |
| சகஸ்ராரம் | | – கல்கி அல்லது சதா சிவன் |

மூலதாரத்தில் முடங்கி கிடக்கும் குண்டலினியை ஒரு கன்னி பெண்ணுக்கு ஒப்பிடலாம், அதே குண்டலினி சகஸ்ரத்தில் உள்ள சிவனை அடைவதற்கு, யோகம் என்றும் பெயர். யோகம் என்றால்

சேர்க்கை என்று பொருள். இங்கே திருமணம் என்றும் கொள்ளலாம் . இயேசு கிருஸ்து பல இடங்களில் இறைவனை மணவாளன் என்றும், சாதாரண மக்களை மண வாட்டி என்றும் பல இடங்களில் குறிப்பிடுகிறார். குண்டலி யோகத்தின் நோக்கம் உறங்கிடக்கும் மூலாதார சக்தியை தட்டி எழுப்பி , ஆறு ஆதாரங்களை கடந்து ஏழாவதான சகஸ்ரத்தை அடைய வைப்பது தான்.

நம் இந்திய தேசத்தை உற்றுநோக்கிப்பாருங்கள் அது ஒருமனித உருவத்தை ஒத்திருக்கும். தெற்கே காலும் வடக்கே தலையுமாய் தோன்றும் . சிவபெருமானின் தலையிலிருந்து தான் கங்கை தோன்றுகிறாள் ஆகவே கங்கை தோன்றும் இமயமே இந்தியாவின் தலைப்பாகமாகும். கைலாசமலை இமயத்தில் இருப்பது குறிப்பிடதக்கது. இந்தியாவின் சகஸ்ரா சக்கரம் இமயமே இங்கே தான் சிவபெருமான் பார்வதியை மணந்து கொண்டார். ஆகவே இங்கேதான சிவனும் சக்தியும் கூடியிருக்கிறார்கள். காஷ்மீரின் ஒரு பகுதியில் லுள்ள ஒரு குகையில் இயேசு கிருஸ்து தவம் செய்தார் என்று ஒரு தகவல் உள்ளது. அந்த குகை இப்பொழுதும் இருப்பதாக கூறப்படுகிறது. அந்த இடமே இந்தியாவின் நடு ஆக்னேய சக்கரமாகும். அதற்கு வலப்புறம் பார்த்தால் திபெத், சீனா, நேபாளம் போன்ற நாடுகள் உள்ளன. இங்குள்ளவர்கள் பெரும்பாலும் புத்த மதத்தினர்களே ஆகவே தலாய்லாமா குடியிருக்கு திபெத்தே வலது ஆக்னேயசக்கரமாகும். ஹரியானா, ஹிமாச்சலபிரதேசம் மற்றும் ராஜாஸ்தான் பகுதிகளில் சமண மதத்தவர்கள் அதிகமாக வசிக்கிறார்கள் இந்த பகுதிதான் இடது ஆக்னேயப்பகுதியாகும். அடுத்து இந்தியாவின் கழுத்து போன்ற பகுதியில் தான் கிருஷ்ணன் பிறந்த இடமான மதுரா உள்ளது. இந்த பகுதியே விசுத்தி சக்கரமாகும். இந்தியாவின் இருதயப்பாகம், மத்திய பிரதேசம் ஆகும். இங்கேதான் ஜகதாம்பா குடியிருக்கிறாள். இதற்கு வலப்புறம் அயோத்தி உள்ளது, இங்கே தான் சீதையும், ராமனும் குடியிருக்கிறார்கள். இடம் புறம் நாசிக் உள்ளது இங்கே பல ஜோதிர்லிங்கங்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது.

ஆகவே அனாகதா சக்ரத்தின் இடது பாகம் நாசிக், வலது பாகம் அயோத்தி.

திருவேங்கடநாதன் குடியிருக்கும் திருப்பதி மலையே மணிப்பூர சக்கரமாகும். வலப்புறத்தில் விஜயவாடா துர்க்கா இருக்கிறாள் இவள் தான் ராஜலட்சுமி, இடப்புறத்தில் கோலாப்பூரில் மகாலக்ஷ்மி இருக்கிறாள் அவர்தான் கிரக லக்ஷ்மி ஆந்திரம், மகாராஷ்டிர பகுதியிலேயே லக்ஷ்மி வாசம் செய்கிறாள்.

முருகன் ஞானப்பழமாய் வீற்றிருக்கு பழனி மலையே ஸ்வாதீஷ்டான சக்கரமாகும். இது நடுப்பகுதியாகும். இதற்கு வலப்புறத்தில் இவ்வழியாகத்தான் ராமன், ராவணனை அழிக்க தன் தம்பி லட்சுமணனோடு சென்றான் என்பது குறிப்பிடத்தக்கது பழனிக்கு இடப்புறத்தில் கர்நாடக மாநிலத்தில் அமைந்த சிருங்கேரி சாரதா பீடமே, இடது ஸ்வாதீஸ்டான மாகும்.

இந்தியாவின் தென்கோடியில்தான் குண்டலித்தாய், கன்னியாக கன்னியாகுமரியாக மூலாதாரத்தில் வீற்றிருக்கிறார், அதற்கு வலது புறத்தில் திருச்செந்தூரில் முருகன் வீற்றிருக்கிறாள்.

அகஸ்திய மாமுனிவர் கணேசரின் அம்சமாகும் அகஸ்தியவடம் என்பது திருவனந்த புரத்திற்கு பக்கத்தில் உள்ளது. அந்த இடமே இடது மூலாதாரமாகும். இன்னுமொருதகவல், அகஸ்தியர் சமாதி அடைந்த இடம்அனந்த சயனம் என்று சில நூல்கள் கூறுகின்றன.

இப்படி இந்தியா முழுவதும் பல்வேறு தெய்வ நம்பிக்கைகள் இருப்பதற்கு காரணம், ஒவ்வொரு இடத்திலும் ஒரு குறிப்பிட்ட தெய்வ சக்தி நிரம்பி இருப்பதேயாகும், குறிப்பாக தமிழ் நாட்டை எடுத்துக்கொள்ளுங்கள் , இங்கே முருக பக்தர்கள் தான் அதிகம். காரணம் , மூலதாராத்திலும், ஸ்வாதிஸ்டானத்திலும் முருகன் இருக்கிறான் , தமிழ்நாடு, வலது மூலதாரமாகவும் , வலது ஸ்வாதீஸ்டான மாகவும் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

பிரமமாவும், சரஸ்வதியும் ஸ்வாதிஷ்டானத்தில் இருப்பவர்கள் பிரம்ம வித்தையை கற்பிக்கும் காஞ்சி காமகோடி பீடம் சிருங்கேரி சாரதா பீடம், மற்றும் தஞ்சை சரஸ்வதிமகால் ஜோதிட நூல்கள் நிரம்ப கிடைக்கின்றன. வைத்தீஸ்வரன் கோயில் மற்றும் பழநிமலையில் நாடி ஜோதிட நூல்கள் நிரம்பி கிடக்கின்றன.

இதனால் தான் நம் முன்னோர்கள் இந்தியாவின் பல இடங்களுக்கு புனித பயணம் மேற்கொண்டார்கள். இந்தியாவில் உள்ள புனித தலங்களுக்கு சென்று வழிபடுவதால் முக்திஅடைய முடியும் என்பது உண்மையே ஒருவன் குண்டலினி யோகப்பயிற்சியின் மூலம் முக்தி அடைவது போல, புனித ஸ்தலங்களுக்கு சென்று வழிபடுவதன் மூலமும் முக்தி அடையலாம்.



# 40. குன்றுகள் - இயற்கை பிரமிடுகள்

அண்மை காலங்களில் பிரமிடுகளின் அதிசய சக்தியைப்பற்றி பல தகவல்கள் வெளியாகி உள்ளன. அதாவது பிரமிடுகளுக்கு ஆன்மிக சக்தியை தேக்கி வைக்கும் ஆற்றல் உள்ளது என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. பிரமிடுகளின் கீழ் அமர்ந்து தியான செய்தால், சமாதி நிலையை எளிதாக அடையலாம் எண்ணங்களை எளிதாக குவியச்செய்யலாம் நிறைவேறாத ஆசைகளை யெல்லாம் பிரமிடு தியானத்தின் மூலம் நிறைவேற்றலாம். நீண்டநாள் ஆரோக்யத்துடன் உயிர் வாழலாம், தீராத நோய்களை தீர்க்கலாம்.

இந்த பிரமிடுகள் வானத்தை நோக்கி குவிந்து உயிர்ந்து நிற்பவை. இவையெல்லாம் மனிதனால் செயற்கையான உருவாக்கப்பட்டவை கோயில் கோபுரங்களும், கிருஸ்தவ ஆலய கோபுரங்களும், மசூதி, மற்றும் குருத்துவாரங்களில் உள்ள கோபுரங்களும், ஒரு வகை பிரமிடுகளே , வானத்தை நோக்கி குவிந்து வளர்ந்து செல்லும் எல்லாம் அமைப்புகளுக்கும் தெய்வ சக்தியை கிரகித்து தேக்கிவைக்கும் ஆற்றல் உண்டு.

பூமியின் சமதளபரப்பில் கட்டப்படும் எல்லா கோயில்களில் இது போன்ற அமைப்பை உருவாக்கினார்கள் நம் முன்னோர்கள். ஆனால் குன்றின் மீது அமைந்த கோயில்களில் இது போன்ற அமைப்பு இல்லாவிடினும் அங்கே தெவ்வீக சக்தி நிரம்பி இருக்கும் ஏனென்றால் குன்றுகளும், மலைகளும் இயற்கையாகவே அமைந்த பிரமிடுகள் ஆகும். ஆகவே கிரிவலம் செல்வது மிகவும் நன்மையாகும்.

பூமியே ஒருவகை காந்தம்தான், அப்படியானால் பூமியை சுற்றி கண்டிப்பாக காந்த அலைகள் இருக்கும். நாம் இந்த காந்த அலைகளுக்கு மத்தியில் தான் இருக்கிறோம். அப்படியென்றால் நம்மை சுற்றியும் காந்த அலைகள் உள்ளன என்பது உண்மை. இதை நாம் உயிர்காந்த அலைகள் என்று சொல்லலாம் இந்த காந்த அலைகளில் மாற்றங்கள் உண்டாகின்றன. இந்த உயிர்காந்த சக்தி

குறைந்தால் உடலில் நோய் உண்டாகி இறுதியில் மரணம் உண்டாகும்.

இந்த உயிர் காந்தசக்தியை குறையாமல் பார்த்துக் கொண்டால் நல்ல ஆரோக்யத்துடன் நீண்டநாள் உயிர்வாழலாம். இதை அடிப்படையாக கொண்டதே தற்காலத்தில் பிரபலமாகி வரும் காந்த சிகிச்சை முறையாகும். பிரபஞ்சம் முழுவதும் இந்த சக்தி என்று கூறலாம். வானத்திலிருந்து பூமியை நோக்கி பல வகையான காந்த அலைகள் வந்து கொண்டிருக்கின்றன. அவையெல்லாம், மலைகளைகளையும், குன்றுகளையும் முதன் முதலில் வந்தடைகின்றன மழை காலத்தில் இடி விழும் போது அது உயரமான இடங்களிலேயே விழும் என்பது குறிப்பிடத்தக்கது இதுபோன்று வானத்திலிருந்து பூமியை நோக்கி வரும் பிரபஞ்ச காந்த சக்தி மலைகளிலும், குன்றுகளிலும் நிரம்பிக்கிடக்கிறது. அதனால் தான் சமதளநிலப்பரப்பில் வாழும் மனிதர்களைவிட மலைப்பிரதேங்களில் வாழும் மனிதர்கள் நல்ல ஆரோக்யத்துடனும் நீண்ட ஆயுளுடனும் வாழ்கிறார்கள்.

நம்நாட்டு மகான்கள் மலைகளைத் தேடிசென்று தவம்செய்தது தங்களுடைய உயிர்காந்த சக்தியை பெருக்கி கொள்ளத்தான் பெரும்பாலன மூலிகைகள் மலைபிரதேசங்களில் தான் கிடைக்கின்றன. நதிகள் மலைகளில் தான் தோன்றுகின்றன. ஆகவேதான் நதிகளில் நீராடுவது புண்ணியமாக கருதப்படுகிறது. குற்றால அருவியில் குறிப்பதால் பல நோய்கள் குணமாகின்றன காரணம், அருவியில் வரும் நீர் காந்த சக்தியூட்டப்பட்ட நீராகும். கங்கை நதியின் மகிமையும், இந்த காரணத்தால் தான். உலகிலேயே மிகவும் உயர்ந்த மலை இமயமலைதான் தான் உலகிலேயே மிகவும் உயர்ந்தமலை இமய மலைதான் அதிலிருந்து தோன்றும் கங்கை நீர், மிக சக்திவாய்ந்த காந்த நீராகும்.

உலகில் வேறு எந்த நீருக்கும் எலும்பைக் கரைக்கும் சக்தி இல்லை. ஆனால் கங்கை நீருக்கு அத்தகைய. சக்தி உண்டு.

அதனால்தான் இத்தனை பிணங்களை கங்கையில் போட்டாலும் கங்கை புனிதமாகவே இருக்கிறது.

குன்று இருக்கு மிடமெல்லாம் குமரன் இருப்பான் என்ற வழக்கு சொல் இதன் காரணமாகத்தான் வந்திருக்க வேண்டும். குமரப்பெருமான் அசுர சக்திகளை அழிப்பதற்காக அவதாரம் எடுத்தவன். ஆகவே நம் கண்களுக்கு புலப்படாத தீயசக்தியை அழிக்கும் ஆற்றல் பிரபஞ்ச காந்த சக்தியை தேக்கி வைத்திருக்கும். குன்றுகளுக்கு உண்டு. ஆகவே கிரிவலம் செல்வது நன்மையே அது ஒரு வகையான காந்த சிகிச்சை ஆகும். அது மூடநம்பிக்கை அல்ல விஞ்ஞானபார்வையில் நிருப்பிக்கப்பட்ட உண்மை. இதன் முலம் நாம் அறிவது என்னவென்றால் , வானத்தை நோக்கு குவிந்து கூம்பு போல் செல்லும் அமைப்புகள் ஒரு அண்டளா போல் செயல் படுகின்றன. இந்த ஆண்டனாக்கள் முலம் நாம் பிரபஞ்ச காந்த சக்தியை பெறலாம்.

உலகிலுள்ள எல்லா உயிரினங்களிலும் விருச்சமான உயிரினம், மனித இனம் காரணம் மனிதன் மட்டும் நிமிர்ந்து வானத்தை நோக்கி வளர்பவன். மனதினுக்கு மட்டும், முதுகுதண்டு நிமர்ந்து இருக்கிறது. ஆகவே மனிதனும் இயற்கையில் தெய்விக தன்மையுடையவன்தான். மனிதன் தெய்வமாகவதுசாத்தியமே. வானத்தை நோக்கி வளரும் மரங்களிலும், செடிகளிலும் கூட தெய்வீக சக்தி நிரம்பி வழிகிறது மிருகங்களில் குறிப்பாக கொம்பு உள்ள மிருகங்களும், பறவைகளில் கொண்டை உள்ள பறவைகளும் தெய்வீக தன்மையுடையவை. மான், பசு, போன்ற மிருகங்களும், மயில் சேவல் போன்ற பறவைகளும் தெய்வத்தன்மையுடையவை மிருகங்களின், கொம்புகளும், பறவைகளின் கொண்டையும் ஆன்டனாபோல் செயல்படுகிறது.

பழங்காலத்தில் முனிவர்களும், ரிசிகளும், தலைமுடியை பாதுகாத்து அந்த கோபுரம் போல் முடிந்து வைத்ததின் ரகசியமும் இதுதான் அரசர்கள் தலையில் கீரிடம் வைத்துக் கொள்வதன் நோக்கமும் இதுவே தான் ஆகவே சிகரம் போன்ற அமைப்பு உடைய

பிரமிடுகள், மற்றும் மலை சிகரங்களில் தேங்கி கிடக்கும். பிரபஞ்ச காந்த சக்தியை நாம் பயன் படுத்தி கொள்ளவேண்டும் இதை மூடநம்பிக்கை என்று கருதாமல், அனுபவ பூர்வமான உணர்ந்து செயல் படுவேமானால், வாழ்க்கையின் சிகரத்தை நிச்சயமாக எட்டிப்பிடிக்கலாம்.

ஒவ்வொரு மரமும் தெய்வாம்சம் உள்ளதே ஆகும். அரசமரம் சிவனின் அம்சம், வேப்பமரம் சக்தியின் அம்சம் பிருந்தா எனப்படும் துளசி செடியில் விஷ்ணு குடியிருக்கிறான் மாமரத்தில் லக்ஷ்மி வாசம் செய்கிறாள். வல்லாரை ஞானமூலிகை என்றழைக்கப்படுகிறது. வடமொழியில் இதற்கு பிரம்மி என்று பெயர் அதாவது பிரம்மன் அதில் குடியிருக்கிறான்.



# 41. நவக்கிரங்கள், வாரங்கள், திதிகள், நட்சத்திரங்கள் பூஜித்த ஸ்தலங்கள்

கிரக தோஷ முடையவர்கள் கிரகங்கள் பூஜித்த ஸ்தலங்களுக்கு சென்று அங்குள்ள புனித தீர்த்தங்களில் நீராடி சிவனை வழிப்பட்டு திருஞான சம்பந்தர் அருளிச்செய்த கோளறு பதிகத்தினன பாடி வணங்கி வந்தால் கிரக தோஷங்கள் நீங்கும்.

**நவக்கிரகங்கள் பூஜித்த ஸ்தலங்கள்**

**சூரியன் பூஜித்த ஸ்தலங்கள்-**

கேதாரம், திருக்கோலக்கா, திருவெண்காடு, சாயவனம், கருங்குயில் நாதபுரம், திருத்துருத்தி, ஸ்ரீ வாஞ்சியம் , திருநாககேஸ்வரம், குடந்தைக் கீழ் கோட்டம், தேதியூர், மீயச்சூர், திருவாவடுதுறை.

**சந்திரன் பூஜித்த ஸ்தலங்கள்-**

கேதாரம், சோமநாதபுரம், கஞ்சனூர், அச்சுதமங்கலம், குடந்தை சோமேஸ்வரம், மானாமதுரை , திருவெண்காடு , பிரயாகை.

**செவ்வாய் பூஜித்த ஸ்தலங்கள்-**

கேதாரம் , வைத்தீஸ்வரன் கோவில், அத்திப்புலியூர், இலந்துறை,மங்கலங்குடி, கச்சித்திருநெறிக்காரைக்காடு.

**புதன் பூஜித்த ஸ்தலங்கள்-**

கேதாரம், வெண்காடு, சீர்காழி, குருகாவூர்

**குரு பூஜித்த ஸ்தலங்கள்-**

கேதாரம், திருக்கொண்டீசுவரம், பெருஞ்சேரி, மாக்குடி

**சுக்கிரன் பூஜித்த ஸ்தலங்கள்-**

கேதாரம், வாஞ்சியம், சிதம்பரம், திருக்கோடிகா, காஞ்சிபுரம், கரையபுரம்.

**சனி பூஜித்த ஸ்தலங்கள்-**

கேதாரம், வழுவூர், நள்ளாறு, வேதாரண்யம், ஆரூர், செங்காட்டங்குடி.

**ராகு பூஜித்த ஸ்தலங்கள்-**

கேதாரம் , சீர்காழி

**கேது பூஜித்த ஸ்தலங்கள்-**

கேதீசுவரம் (இலங்கை)

**வாரங்கள் பூஜித்த ஸ்தலங்கள்**

கிரகங்களால் ஏற்படக்கூடிய தோசம் நீங்க அந்தந்த கிரகங்களுக்குரிய வாரங்களில் , அந்தந்த வார (கிழமை ) அதிபதிகள் வழிப்பட்ட ஸ்தலங்களுக்குச் சென்று அங்குள்ள புனித தீர்த்தங்களில் நீராடி, சிவபெருமானை வழிபட கிரக தேசங்கள் நீங்கும். மேலும் பஞ்சாங்கங்களில் ஒரு குறிப்பிட்ட கிழமையில் எதைச் செய்தால் நன்மை, எதை செய்தால் தோஷம் என விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கும். ஒரு குறிப்பிட்ட கிழமையில் செய்யக்கூடாததை செய்து விட்டால் அதற்கு தோஷ பரிகாரமாக வாரங்கள் பூஜித்த ஸ்தலங்களுக்கு சென்று வழிபட தோஷம் நீங்கும்.

**ஞாயிறு பூஜித்த ஸ்தலங்கள்**

திருநாகேஸ்வரம், ஸ்ரீவாஞ்சியம், திருத்தாளமுடையார்கோவில், சாயாவனம்.

**திங்கள் பூஜித்த ஸ்தலங்கள்**

திருக்கடையூர், சிவபுரம், திருவாலவாய், காசி

**செவ்வாய் பூஜித்த ஸ்தலங்கள்**

வைத்தீஸ்வரன் கோயில், அத்திப்புலியூர், இலந்துறை

**புதன் பூஜித்த ஸ்தலங்கள்**

வெண்காடு

**வியாழன் பூஜித்த ஸ்தலங்கள்**

பெருஞ்சேரி, திருக்கொண்டீசுவரம், கச்சி, கழுக்குன்றம்,

**வெள்ளி பூஜித்த ஸ்தலங்கள்**

காஞ்சி

**சனி பூஜித்த ஸ்தலங்கள்**

திருநள்ளாறு, ஆரூர்.

**திதிகள் பூஜித்த ஸ்தலங்கள்**

திதி தோசங்களிலிருந்து விடுபட திதிகள் பூஜித்த ஸ்தலங்களுக்குச் சென்று, அங்குள்ள புனித தீர்த்தங்களில் நீராடி சிவபெருமானை வழிபட திதிதோஷங்கள் நீங்கும்.

| | | |
|---|---|---|
| பிரதமை | – | காஞ்சிபுரம் |
| துவிதியை | – | கருவிலி, தாராசுரம், திருச்செங்காட்டங்குடி. |
| திருதியை | – | கேதாரம், சிந்தாமணி |
| சதுர்த்தி | – | செங்காட்டங்குடி, திருவலஞ்சுழி |
| பஞ்சமி | – | தவத்துறை |
| ஷஷ்டி | – | வெண்காடு |
| சப்தமி | – | திருவாடுதுறை, மீயச்சூர், சிதம்பரம், திருவொற்றியூர் |
| அஷ்டமி | – | காசி, ஸ்ரீசைலம், திருவையாறு, மதுரை. |
| நவமி | – | காஞ்சிபுரம், சிதம்பரம், திருவீழிமிழலை. |
| தசமி | – | திருவாரூர் |

| | | |
|---|---|---|
| ஏகாதசி | – | திருச்சி சிந்தாமணி என்ற காவிரிக்கரை, ஐம்புகேஸ்வரம், மாத்ருபூதம்,ரங்கநாதர், இம்மூவருடைய தீட்சண்யம் பெற்ற திருத்தலம். சிதம்பரம். |
| துவாதசி | – | ஸ்ரீரங்கம் |
| திரயோதசி | – | கோகர்ணம் |
| சதுர்தசி | – | கோகர்ணம், ஸ்ரீகாளஹஸ்தி, கேதாரம், காசி, மாத்யாச்சுனம், திருவையாறு, மாயூரம், காளஹஸ்தி, மல்லிகார் ஜீனம். |

நட்சத்திரங்கள் பூஜித்த ஸ்தலங்கள்

நட்சத்திர தோஷங்களிலிந்து விடுபட அந்தந்த நட்சத்திரங்கள் பூஜித்த ஸ்தலங்களுக்குச் சென்று அங்குள்ள புனித தீர்த்தங்களில் நீராடி, சிவபொருமானை வழிபட நட்சத்திர தோஷங்கள் விலகும்.

| | | |
|---|---|---|
| அஸ்வினி | – | திருக்கடையூர் |
| பரணி | – | ஸ்ரீவாஞ்சியம் |
| கிருத்திகை | – | சரவணப்பொய்கை, காசி, அருணாச்சலம் |
| ரோகிணி | – | திருவானைக்காவல், எல்லா விஷ்ணு ஸ்தலங்களும். |
| மிருக சீரிடம் | – | சிவகங்கை |
| திருவாதிரை | – | சிதம்பரம் |
| புனர்பூசம் | – | இராமேஸ்வரம் |
| பூசம் | – | பிரசித்தம் |
| ஆயில்யம் | – | வழுவூர், மாகாளம். |
| மகம் | – | பிரசித்தம் |

| | | |
|---|---|---|
| பூரம் | – | பிரசித்தம் |
| உத்திரம் | – | திருவாரூர் |
| அஸ்தம் | – | திருவாரூர் |
| சித்திரை | – | பிரசித்தம் |
| சுவாதி | – | கேதாரம் |
| விசாகம் | – | பிரசித்தம் |
| அனுசம் | – | திருநெல்வேலி |
| கேட்டை | – | எலந்துறை, திருநெல்வேலி |
| மூலம் | – | மதுரை |
| பூராடம் | – | திருச்செந்தூர் |
| உத்திராடம் | – | சங்கர நயினார் கோயில் |
| திருவோணம் | – | அர்த்கோதயம், மகோதயம் |
| அவிட்டம் | – | காளஹஸ்தி, மல்லிகார்ஜீனம், கோகர்ணம் |
| சதயம் | – | காளஹஸ்தி, மல்லிகாஜீனம், கோகர்ணம் |
| பூரட்டாதி | – | திருவாரூர் |
| உத்திரட்டாதி | – | திருவாரூர் |
| ரேவதி | – | திருக்கடையூர். |

# 42. விரும்பிய இடத்திற்கு இடமாற்றம் பெற செய்ய வேண்டிய பரிகாரம்

யாராவது தனக்கு வேண்டிய இடத்திற்கு இடமாற்றம் பெற விரும்பினால் காலை சூரியன் உதிக்கும் முன் எழுந்து நீராடி சுத்தமான ஆடைகளை உடுத்திக் கொண்டு சூரிய நமஸ்காரம் செய்ய வேண்டும். சூரிய உதயமான பின் சூரிய நமஸ்காரம் செய்ய வேண்டும். சூரிய நமஸ்காரம் செய்யும் போது கையில் 21 மிளகாய் விதைகளை எடுத்து சூரியனுக்கு சமர்பிக்க வேண்டும். இதை குறைந்தது மூன்று நாட்களாவது தொடர்ந்து செய்ய வேண்டும். இவ்வாறு செய்தால் நீச்சயம் வேண்டி இடத்திற்கு இடமாற்றம் கிடைக்கும். சூரிய நமஸ்காரம் செய்யும் போது கீழ்கண்ட மந்திரங்களை செபிக்க வேண்டும்.

ஓம் ஆதித்யாய நமஹ

ஓம் திவாகராய நமஹ

ஓம் பாஸ்காராயா நமஹ

ஓம் ப்ரபாகராய நமஹ

ஓம் சஹஸ்த்ர்ன்ஷவே நமஹ

ஓம் த்ரிலோசனாய நமஹ

ஓம் ஹரிதாசவயே நமஹ

ஓம் விபாவஷே நமஹ

ஓம் தினக்ருதே நமஹ

ஓம் த்வாதசேத் மகயே நமஹ

ஓம் த்ரையி மூர்த்தயே நமஹ

ஓம் சூர்யாய நமஹ

**விரைவில் திருமணம் நடக்க பரிகாரம்-**

யாருக்காவது திருமண வாய்ப்பு தாமதமாகிக் கொண்டே போனால் ஒவ்வொரு செவ்வாய் கிழமை யன்றும் விரதமிருக்க வேண்டும். அன்றைய தினம் எறும்பு புற்றுகளில் அரிசிமாவை போட்டு வர வேண்டும். இவ்வாறு சில வாரங்கள் செய்து வந்தால் விரைவில் திருமணம் கூடிவரும் எறும்புகளைக் குறிக்கும் கிரகம் செவ்வாயாகும்.



# 43. நவக்கிரகங்களுக்குரிய தாந்திரீக மந்திரங்கள்

**சூரியன்**

"ஓம் ஹ்ரங், ஹ்ரீங், ஹ்ருங்சஹ சூர்யாய நமஹ"

இந்த மந்திரத்தை 7000 தடவை ஜெபிக்க வேண்டும். ஞாயிற்றுக் கிழமை சூரிய உதயத்திற்கும் முன் எழுந்து நீராடி சுத்தமான ஆடைகளை உடுத்தி, சூரியனை நமஸ்காரம் செய்து பின் இமமந்திரத்தை ஜெபிக்க வேண்டும் சூரியனை சிவந்த மலர்கள், சிவப்பு சந்தனம் இவைகளை கொண்டு பூஜிக்கவேண்டும்.

**சந்திரன்**

"ஓம் ஹ்ரங், ஹ்ரீங், ஹ்ருங்சஹ சந்த்ரமஸே நமஹ"

இந்த மந்திரத்தை 11000 தடவை ஜெபிக்க வேண்டும். திங்கள் கிழமை மாலையில் சந்திரதரிசனம் செய்து சந்திர பகவானை வெண்ணிற மலர்களாலும், சந்தனத்தாலும் பூஜிக்கவேண்டும்

**செவ்வாய்**

"ஓம் ஹ்ரங், ஹ்ரீங், ஹ்ருங்சஹ பௌமாய நமஹ"

இம் மந்திரத்தை 10,000 தடவை ஜெபிக்க வேண்டும். செவ்வாய் கிழமை சூரிய உதயத்தில் , செவ்வாயை சிவந்த மலர்களாலும், சிவப்பு சந்தனத்தாலும், பூஜிக்க வேண்டும்.

**புதன்**

"ஓம் ஹ்ரங், ஹ்ரீங், ஹ்ருங்சஹ புதாய நமஹ"

இம் மந்திரத்தை 9000 தடவை ஜெபிக்க வேண்டும். புதன்கிழமை சூரிய அஸ்தமனமாகும் நேரத்தில் புதனை பலவிதமான மலர்களை கொண்டு பூஜிக்க வேண்டும்.

குரு

"ஓம் ஹ்ரங், ஹ்ரீங், ஹ்ருங்சஹ குருவே நமஹ"

இம்மந்திரத்தை 19000 தடவை ஜெபிக்க வேண்டும். வியாழக்கிழமை மாலை நேரத்தில் குருபகவனை மஞ்சள் நிறப் பூக்களை கொண்டு பூஜிக்க வேண்டும்.

சுக்கிரன்

"ஓம் ஹ்ரங், ஹ்ரீங், ஹ்ருங்சஹ சுக்ரயா நமஹ"

இம் மந்திரத்தை 16000 தடவை ஜெபிக்க வேண்டும். வெள்ளிகிழமை சூரியோதயத்தில் வெள்ளை மலர்களாலும், சந்தனத்தாலும் சுக்கிரனை பூஜிக்க வேண்டும்.

சனி

"ஓம் ஹ்ரங், ஹ்ரீங், ஹ்ருங்சஹ சனியே நமஹ"

இம்மந்திரத்தை 24,000 தடவை ஜெபிக்க வேண்டும் சனி கிழமை நண்பகல் நேரத்தில் சனிபகவான் சன்னிதியில் நல்லெண்ணெய் விளக்கேற்றி வைத்து நீலமலர்களால் சனி பகவானை பூஜிக்க வேண்டும்.

ராகு

"ஓம் ஹ்ரங், ஹ்ரீங், ஹ்ருங்சஹ ராகுவே நமஹ"

இம் மந்திரத்தை 18,000 தடவை ஜெபிக்க வேண்டும். இரவு நேரத்தில் மந்திர ஜெபம் செய்யவேண்டும், புதன் கிழமை நடுஇரவில் ராகுவிற்கு பூஜை செய்தல் வேண்டும்.

கேது

"ஓம் ஹ்ரங், ஹ்ரீங், ஹ்ருங்சஹ கேது நமஹ"

இம் மந்திரத்தை 1800 தடவை ஜெபிக்கவேண்டும். ஞாயிற்று கிழமை காலையில் அரளி மலர்களால் கேது பகவானை பூஜிக்கவேண்டும்.

# 44. ராசி, நவக்கிரகங்கள் - அரிய தகவல்கள்

## ராசி தேவதைகள்

| | | |
|---|---|---|
| மேசம் | – | முருகன் |
| ரிசபம் | – | மீனாட்சி |
| மிதுனம் | – | மகா விஷ்ணு |
| கடகம் | – | ஆதிபராசக்தி |
| சிம்மம் | – | பிரம்மா |
| கன்னி | – | மகாலட்சுமி |
| துலாம் | – | சரஸ்வதி |
| விருச்சிகம் | – | ஐயப்பன் |
| தனுசு | – | கோதண்ட ராமன் |
| மகரம் | – | ராஜராஜேஸ்வரி |
| கும்பம் | – | பரமேஸ்வரி |
| மீனம் | – | அன்னவாகன தேவி |

## ராசிக்குரிய ஸ்தலங்கள் ( பொதுவானது)

| | | |
|---|---|---|
| மேசம் | – | ராமேஸ்வரம் |
| ரிசபம் | – | திருப்பதி |
| மிதுனம் | – | பழனி |
| கடகம் | – | ராமேஸ்வரம் |
| சிம்மம் | – | திருவாஞ்சியம் |
| கன்னி | – | திருக்கழுக்குன்றம் |
| துலாம் | – | திருத்தணி |

| | | |
|---|---|---|
| விருச்சிகம் | – | காஞ்சிபுரம் |
| தனுசு | – | மயிலாடுதுறை |
| மகரம் | – | சிதம்பரம் |
| கும்பம் | – | ராமேஸ்வரம் |
| மீனம் | – | வைத்தீஸ்வரன் கோயில் |

## நவக்கிரக தேவதைகள்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | சிவன் |
| சந்திரன் | – | பார்வதி |
| செவ்வாய் | – | சுப்பிரமணியர் |
| புதன் | – | திருமால் |
| குரு | – | பிரம்மா |
| சுக்கிரன் | – | இந்திரன், லட்சுமி |
| சனி | – | எமன் |
| ராகு | – | பத்ர காளி |
| கேது | – | சித்திர குப்தன், கணேசர். |

## திருமாலின் நவக்கிரக அவதாரங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | இராம அவதாரம் |
| சந்திரன் | – | கிருஷ்ண அவதாரம் |
| செவ்வாய் | – | நரசிம்ம அவதாரம் |
| புதன் | – | கல்கி அவதாரம் |
| குரு | – | வாமன அவதாரம் |
| சுக்கிரன் | – | பரசுராம அவதாரம் |

| | | |
|---|---|---|
| சனி | – | கூர்ம அவதாரம் |
| ராகு | – | வராக அவதாரம் |
| கேது | – | மச்ச அவதாரம் |
| குளிகன் | – | பலராம அவதாரம் |

## நவகிரக தானியங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | கோதுமை |
| சந்திரன் | – | நெல் |
| செவ்வாய் | – | துவரை |
| புதன் | – | பச்சைப்பயிறு |
| குரு | – | கடலை |
| சுக்கிரன் | – | மொச்சை |
| சனி | – | எள்ளு |
| ராகு | – | உளுந்து |
| கேது | – | கொள்ளு |

## நவகிரகங்களுக்கு செய்ய வேண்டிய தானங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | கன்று ஈன்ற பசு |
| சந்திரன் | – | பால் நிறச் சங்கு |
| செவ்வாய் | – | சிவப்பு நிற எருது |
| புதன் | – | தங்கம் |
| குரு | – | வெண்பட்டு |
| சுக்கிரன் | – | வெள்ளி |
| சனி | – | எருமைக்கடா |

| | | |
|---|---|---|
| ராகு | – | கருப்புநிற வெள்ளாட்டுக்கடா |
| கேது | – | யானை, சேவல் |

## நவகிரகங்களுக்குரிய நைவேத்யம்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | சர்க்கரைப் பொங்கல் |
| சந்திரன் | – | நெய் கலந்த பாயாசம் |
| செவ்வாய் | – | துவரை அன்னம் |
| புதன் | – | பால் அன்னம் |
| குரு | – | தயிர்சாதம் |
| சுக்கிரன் | – | நெய், அன்னம் |
| சனி | – | எள்ளுசாதம் |
| ராகு | – | உளுந்து சாதம் |
| கேது | – | சித்ரான்னம் |

## நவகிரக மந்திதங்களின் ஜெப எண்ணிக்கை

| | | |
|---|---|---|
| சூரியன் | – | 7000 |
| சந்திரன் | – | 11000 |
| செவ்வாய் | – | 11000 |
| புதன் | – | 9000 |
| குரு | – | 19000 |
| சுக்கிரன் | – | 16000 |
| சனி | – | 23000 |
| ராகு | – | 18000 |
| கேது | – | 1700 |

இந்த விவரம் பராசார ஹோரையில் கொடுக்கப்பட்டுள்ளது.

## நவக்கிரக உலோகம்.

| | | |
|---|---|---|
| சூரியன் | – | தாமிரம் |
| சந்திரன் | – | ஈயம் |
| செவ்வாய் | – | செம்பு |
| புதன் | – | பித்தளை |
| குரு | – | தங்கம் |
| சுக்கிரன் | – | வெள்ளி |
| சனி | – | இரும்பு |
| ராகு | – | கருங்கல் |
| கேது | – | துருக்கல் |

## நவகிரக மலர்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | செந்தாமரை |
| சந்திரன் | – | வெள்ளல்லி |
| செவ்வாய் | – | செண்பகம் |
| புதன் | – | வெண்காந்தன் |
| குரு | – | முல்லை |
| சுக்கிரன் | – | வெண்தாமரை |
| சனி | – | கருங்குவளை |
| ராகு | – | மந்தாரை |

| | | |
|---|---|---|
| கேது | – | செவ்வல்லி |

## நவகிரக ரத்தினங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | மாணிக்கம் |
| சந்திரன் | – | முத்து |
| செவ்வாய் | – | பவளம் |
| புதன் | – | மரகதம் |
| குரு | – | புஷ்பராகம் |
| சுக்கிரன் | – | வைரம் |
| சனி | – | நீலம் |
| ராகு | – | கோமேதகம் |
| கேது | – | வைடூர்யம் |

## நவகிரக சமித்துக்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | எருக்கு |
| சந்திரன் | – | முருங்கை |
| செவ்வாய் | – | கருங்காலி |
| புதன் | – | நாயுருவி |
| குரு | – | அரசு |
| சுக்கிரன் | – | அத்தி |
| சனி | – | வன்னி |
| ராகு | – | அருகு |
| கேது | – | தர்பை |

## நவகிரக வஸ்திரங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | சிவப்பு |
| சந்திரன் | – | வெள்ளை |
| செவ்வாய் | – | சிவப்பு |
| புதன் | – | பச்சைபட்டு |
| குரு | – | மஞ்சள் |
| சுக்கிரன் | – | வெண்பட்டு |
| சனி | – | கருப்பு பட்டு |
| ராகு | – | கருப்பு |
| கேது | – | பலவர்ணம் |

## நவகிரக வழிப்பாட்டுப் பொருட்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | சந்தனம் |
| சந்திரன் | – | சாம்பிராணி |
| செவ்வாய் | – | குங்குமம் |
| புதன் | – | கற்பூரம் |
| குரு | – | ஆம்பில் |
| சுக்கிரன் | – | லவங்கம் |
| சனி | – | கருங்காலி |
| ராகு | – | கடுகு |
| கேது | – | செந்தூரம் |

## நவக்கிரகங்களுக்கு ஏற்ற வேண்டிய தீபங்களின் எண்ணிக்கை

| | | |
|---|---|---|
| சூரியன் | – | 10 தீபங்கள் |
| சந்திரன் | – | 10 தீபங்கள் |
| செவ்வாய் | – | 9 தீபங்கள் |
| புதன் | – | 17 தீபங்கள் |
| குரு | – | 24 தீபங்கள் |
| சுக்கிரன் | – | 9 தீபங்கள் |
| சனி | – | 10 தீபங்கள் |
| ராகு | – | 21 தீபங்கள் |
| கேது | – | 10 தீபங்கள் |

## நவகிரகங்களும் தசமகாவித்யையும்

| | | |
|---|---|---|
| சூரியன் | – | மாதங்கி மகாவித்யா |
| சந்திரன் | – | புவனேஸ்வரி மகாவித்யா |
| செவ்வாய் | – | பகளாமுகி மகாவித்யா |
| புதன் | – | சோடசி மகாவித்யா |
| குரு | – | உக்ர தாரா மகாவித்யா |
| சுக்கிரன் | – | கமலா மகாவித்யா |
| சனி | – | காளிகா மகாவித்யா |
| ராகு | – | சின்னமஸ்தா மகாவித்யா |
| கேது | – | தூமாவதி மகாவித்யா |
| லக்னம் | – | பைரவி |

# 45. இராகு கால பூஜை

நவகோள்களில் ஒன்றான ராகுவின் அதிதேவதை பத்ரகாளி எனப்படும் துர்கையாகும். ஒவ்வொரு நாளும் நல்லன செய்வதற்கு தகாத விசக்கடிகையாக 1.30 மணி நேரம் இராகு காலமாகக் கருதப்பட்டுவருகிறது. அந்த ராகு காலத்தில் ராகுவின் அதிதேவதையாகிய ஸ்ரீ துர்க்கைக்கு நறுமண மலர்மாலை அணிவித்து, தூப தீப வைவேத்யத்துடன் வழிபாடு செய்வதன்மூலம் கிரக தோஷங்களிலிருந்து விடுபடலாம்.

செவ்வாய் கிழமை ராகு காலத்தில் மஞ்சள் நிறப்பூக்களான தங்க அரளி, சாமந்தி, நந்தியாவட்டை ஆகியவற்றை அர்ச்சனைக்கும், மஞ்சள்நிறவாழைப்பழம், பலாச்சுளை, மாம்பழம், மஞ்சள் வண்ண வெண்பொங்கல், எலுமிச்சை சாதம், ஆகியவற்றை நிவேதனத்திற்கும் பயன்படுத்தி ஸ்ரீதுர்க்கையை பூஜிக்க வேண்டும். எலுமிச்சம் பழங்களைக் கோர்த்த மாலை அம்மனுக்கு விசேஷம்.

செவ்வாய்க் கிழமையன்று நல்ல மஞ்சள் நிறமுள்ள ஐந்து எலுமிச்சம் பழங்களை எடுத்து இரண்டாக வெட்டிச் சாற்றை அம்பாளின் திருவடிகளில் பிழிந்து விட்டு, எலுமிச்சைத் தோல்களை எதிர்புறமாக மடக்கி கிண்ணம் போல் அமைத்து அதில் சுத்தமான நல்லெண்ணெய் அல்லது நெய் ஊற்றித் திரியிட்டு அம்மன் சன்னிதியில் வைக்கவேண்டும். இவ்வாறு ஐந்து எலுமிச்சை மூடிகளின் மொத்தம் பத்து விளக்குகள் செய்யலாம். அதில் ஒரு மூடியைத் தனியே வைத்துவிட்டு ஒன்பது விளக்குகளைமட்டும் அம்மன் சந்நிதியில் வைக்க வேண்டும். ஆயுள்பலம் பெருக நல்லெண்ணெய்க்குப்பதில் இலுப்பை எண்ணெயைப் பயன்படுத்தலாம்.

இந்த ராகு கால பூஜையின் போது இராகுகால துர்க்காஷ்டகம், ஸ்ரீ லலிதா நவரத்தின மாலை, துக்க நிவாரணாஷ்டகம், ஸ்ரீ லலிதா சஹஸ்ர நாமம் முதலியவற்றை பக்தி பெருக்கோடு பாராயணம் செய்தால் அம்பாளின் அருளைப் பெறலாம்.

பெண்களுடைய ஜாகத்தில் செவ்வாய் தோஷம் மாங்கல்ய தோஷம் இருந்தால் கணவன் அடிக்கடி நோய் வாய்ப்படுவான் அல்லது கணவனைக்கு தீராத நோய் ஏற்படும். அல்லது அந்தப் பெண் இளம் வயதிலேயே விதவையாக நேரிடும். சில பெண்களுக்கு கணவனுடன் கருத்துவேறுபாடு ஏற்பட்டு பிரிந்து வாழ நேரிடும். இத்தகைய பிரச்சினைகளுடைய பெண்கள் செவ்வாய் கிழமை ராகு கால பூஜையைக் கடைபிடித்து வர கணவனுக்கு ஆயுள் விருத்தியாகும்.

ஜாதகத்தில் புத்திர தோஷம் இருந்தால் , குழந்தைகள் பாக்யம் இல்லாமல் போகும். அல்லது குழந்தைகள் இறந்து பிறக்கும், அடிக்கடி கருச்சிதைவு உண்டாகும். பிறந்த குழந்தைகள் அற்ப ஆயுளுடன் இறக்கும். இதுபோன்ற பிரச்சினை உடையவர்களும் செவ்வாய் கிழமை ராகு காலப்பூஜை செய்யலாம்.

மனநிலைப் பாதிக்கப்பட்டோர், தற்கொலை, எண்ணம் உடைபவங்கள், அடிக்கடி விபத்துக்குள்ளானவர்கள், பேய், பிசாசுகள் மற்றும் துஷ்ட தேவதைகளால் பாதிக்கப்பட்டவர்கள் ராகு காலத்தில் துர்க்கையை வழிபட்டால் நிவாரணம் கிடைக்கும்.

ஆண்கள் செவ்வாய்கிழமையன்று விரதமிருந்து ராகு காலத்தில் துர்க்கையை வழிப்பட்டாய் கடன், நோய், தொழில் இடை யூறுகள் போன்ற தொல்லைகளிலிருந்து விடுபடலாம். சத்துருக்கள் நாசமடைவார்கள்.

**கிரக சேர்க்கையும் ராகுகால பூஜையும் -**

சூரியன் + ராகு – ஞாயிற்றுக்கிழமை ராகுகாலத்தில் கர்ப்பேஸ்வரரை பூஜிக்கவேண்டும்.

சந்திரன் + ராகு – திங்கள் கிழமை ராகு காலத்தில் கருமாரி அம்மனை பூஜிக்க வேண்டும்.

செவ்வாய் + ராகு– செவ்வாய் கிழமை ராகு காலத்தில் துர்கையை பூஜிக்கவேண்டும்.

புதன் + ராகு – புதன் கிழமை ராகு காலத்தில் வராஹமூர்த்தியை பூஜிக்க வேண்டும்.

குரு + ராகு – வியாழக்கிழமை ராகு காலத்தில் ருத்திரனை பூஜிக்க வேண்டும்

சுக்கிரன் + ராகு – வெள்ளிக்கிழமை ராகு காலத்தில் காமாட்சியை பூஜிக்க வேண்டும்.

சனி + ராகு – சனிக்கிழமை ராகு காலத்தில் பைரவரை பூஜிக்கவேண்டும்.



## 46. மலர்களும் நட்சத்திரப் பரிகாரங்களும்

ஸ்ரீராமபிரானுக்கு விஸ்வாமித்திரர் மலர்களைப் பற்றிய ரகசியங்களைப் போதித்தார் எனக்கூறப்படுகின்றது. அவைகளைப் பார்ப்போம்.

1. அஸ்வினி நட்சத்திரத்தன்று சூரிய காந்தி பூவைக் கொண்டு சூரிய பகவானை வணங்கிவிட்டு தன்னை விட உயர்ந்தவர்களை, உயர் அதிகாரிகளை சந்தித்தால் காரியம் மிகச் சுலபமாக முடியும்.

2. மிருக சீரிட நட்சத்திரத்தன்று முருங்கை மலர்களால் சிவபெருமானுக்கு வழிபாடு செய்து, அதில் சில மலர்களை கையில் எடுத்துக் கொண்டு வாகனங்கள் , வாங்கச் சென்றால் மேன்மேலும் வண்டி வாகனங்கள் விருத்தியடையும் ,மாடு குதிரை போன்ற கால்நடைகள் வாங்கினாலும் மேன்மேலும் பொருள்கள் சேரும்.

3. அஸ்தம் நட்சத்திரத்தன்று தாழம்பூவைக் கொண்டு , அதன் முனை மேல் நோக்கியவாறு பார்வதியை அர்ச்சித்துவிட்டு பொன் வாங்குதற்கும், பெண் பார்ப்பதற்கும் சென்றால் நல்ல பலன் கிடைக்கும்.

4. அனுசம் நட்சத்திரத்தன்று மாம்பூவினால் சிவபெருமானுக்கு அர்ச்சனை செய்துவிட்டு மிஞ்சுகின்ற பூக்களைக் கையுடன் எடுத்துக்சென்று இரும்பு இயந்திரங்கள், தளவாடச் சாமான்கள், அச்சு எந்திரங்கள் முதலியவை வாங்கினால் அவைகள் பலவிதமாகப் பெருகித் தொழிலை நன்கு வளர்ச்சியுறச்செய்யும்.

5. திருவோணம் நட்சத்திரத்தன்று பவளமல்லிகையில் பெருமாளுக்கு அர்ச்சனை செய்துவிட்டு வெளிநாட்டுப்பயணம் செய்தால் வெற்றியுடன் திரும்பலாம், நிலம் ,வீடுவாங்கச் சென்றால் வெற்றி நிச்சயம்.

6. அவிட்டம் நட்சத்திரத்தன்று அகத்தி மலர்களால் முருகனுக்கு அர்ச்சனை செய்து விட்டு பயணங்கள் செய்தால், அடிக்கடி பயணம் செய்பவர்களுக்கு விபத்து ஏற்படாது.

7. பூசம் நட்சத்திரம் வரும் நாட்களில் சாமந்திப் பூவைக்கொண்டு பெருமானை பூஜித்து வந்தால் நோய் நொடிகளிலிருந்து விடுபடலாம்.

8. மூலம் நட்சத்திரம் வரும் நாளில் அருகம்புல், செம்பருத்தி, இவைகளைக் கொண்டு விநாயகரை வழிப்பட்டால் காரியங்கள் அனைத்தும் தடைகள் இன்றி முடியும்.



# 47. நட்சத்திர விசேசம்

**அஸ்வினி**

அஸ்வினி நட்சத்திரத்தில் உச்சமடையும் கிரகம் சூரியன் சூரியனின் அதிதேவதை சிவன். அரசு சம்பந்தமான விசயங்களுக்கு காரகம் வகிக்கும் கிரகம் சூரியன் எனவே அஸ்வினி நட்சத்திரம் நடப்பில் உள்ள நாளில் சிவபெருமானை வணங்கி விட்டு அரசு சம்பந்தமான காரியங்களில் முயற்சி செய்தால் நிச்சயம்வெற்றி உண்டாகும்.

அரசாங்கத்தில் உயர்பதவியை அடைய விரும்புவார்கள் அரசியலில் செல்வாக்கு பெற விரும்புவார்கள், பேர், புகழ், அடைய விரும்புவார்கள் தொடர்ந்து ஆறுமாத காலம்அஸ்வினி நட்சத்திரம் வரும் நாளில் திருவண்ணமலைக்குச் சென்று அருணாசலேஸ்வரரை வழிப்பாட்டு வந்தால் நிச்சயமாக நினைத்த பதவியை அடையலாம்.ள

**பரணி**

பரணி நட்சத்திரம் அதிபதி சுக்கிரனாகும். சுக்கிரன் காமக்காரகனாகும். பரணி நட்சத்திரத்தின் உருவம் பெண் குறி போன்று உள்ளது. எனவே பாராமுகமாயிருக்கும் கணவனை வசியப்படுத்த விரும்பும் பெண்கள். பரணி நட்சத்திரத்தன்று குளித்து உடலை சுத்தப்படுத்திக் கொண்டு, உடலில் சந்தனம் போன்ற வாசனைத் திரவியங்களைப் பூசிக் கொண்டு கணவனுடன் கூடினால் கணவன் என்றென்றும் பிரியாமல் வசியமாயிருப்பான்.

பரணி நட்சத்திரத்தன்று காஞ்சிக்கும் சென்று காஞ்சி காமாட்சியை வழிப்பட்டால் திருமணத் தடைகள் நீங்கி விரைவில் திருமணம் நடைபெறும். தொடர்ந்து மூன்று மாதங்களு பரணி நட்சத்திரம் வரும் நாளில் காஞ்சிக்குச் சென்று வழிபாடுகள் செய்யவேண்டும்.

**கிருத்திகை**

தனக் காரகனான சுக்கிரனுடைய ராசியையும், ருணக்காரகனான (கடன் காரகன்) செவ்வாயினுடைய ராசியையும் இணைக்கும் நட்சத்திரமான கிருத்திகை நட்சத்திரன்று விரதமிருந்து முருகப்பெருமானின் ஆலயங்களுக்குச் சென்று வழிபடுவதன் மூலம் கடன் தொல்லைகளிலிருந்து விடுபடலாம்.

மேலும் கிருத்திகை நட்சத்திரத்தன்று விரதமிருந்து மாலை நேரத்தில் முருகப்பெருமான் ஆலயத்திற்குச் சென்று வழிபட திருமணம் ஆகாதவர்களுக்கு விரைவில் திருமணம் நடைபெறும் திருமணம் ஆகி பிரிந்து வாழும் தம்பதிகளை மீண்டும் சேர்த்து வைக்கும்.

**ரோகிணி**

ரோகிணி நட்சத்திரத்தன்று சந்திர தரிசனம் செய்தால் கண்பார்வை கோளாறுகள் நீங்கும். முகத்தில் நல்ல பொலிவு ஏற்படும் முகத்தில் வசீகரத்தன்மை ஏற்படும்.

ரோகிணி நட்சத்ஜிரத்தன்று விரதமிருந்து பெருமானை வழிபட்டுவந்தால் வறுமை நீங்கி சுபீட்சம் உண்டாகும். பசிப்பிணி நீங்கும்.

**மிருகசீரிடம்**

மிருகசீரிடம் நட்சத்திரத்தன்று விரதமிருந்து முருகப்பெருமானை வழிப்பட்டு வந்தால் செவிட்டுத்தன்மை நிங்கும்.

மிருகசீரிடம் நட்சத்திரத்தன்று முருப் பெருமானை வணங்கிவிட்டு பிறரிடம் உதவி கேட்கச் சென்றால் நிச்சயம் உதவி கிடைக்கும்.

**திருவாதிரை**

திருவாதிரை நட்சத்திரத்தன்று திருநாகேஸ்வரம் ,சிதம்பரம்,

திருவாலங்காடு போன்ற சிவஸ்தலங்களுக்குச் சென்று சிவனை வழிபட்டால் பேய் பிசாசுகள் தொல்லை, ஆவிகள் தொல்லை இவைகளிலிருந்து விடுபடலாம்.

திருவாதிரை நட்சத்திரத்தன்று சிவனை வணங்கிவிட்டு மருத்துவ சிகிச்சையைத் தொடங்கினால் எந்த நோயாக இருந்தாலும் குணமாகும்.

திருவாதிரை நட்சத்திரத்தன்று பாம்புகடி, விஷக்கடி இவைகளக்குரிய மந்திரங்களை ஜெபித்தால் எளிதில் சித்தி பெறலாம்.

**புனர்பூசம்**

புனர்பூசம் நட்சத்திரம் வரும் நாளில் மருத்துவர்கள் ஸ்ரீரங்கநாதரை வழிபட்டு வந்தால் "கைராசிக்காரர்" என்ற பெயரை எளிதில் பெறலாம்.

பஞ்ச பாண்டவர்களில் ஒருவரான சகாதேவன் ஒவ்வொரு புனர்பூச நட்சத்திரத்தன்றும் 64 கலைகளுக்கும் உரியவளான ஸ்ரீஞான சரஸ்வதியைத் தொழுது அத்துடன் ஸ்ரீ சரஸ்வதியின் குருவாகிய ஸ்ரீ ஹயக்ரீவரை மஞ்சள் நிற சாமந்திப் பூக்களால் ஆன கனத்த திண்டு மாலை சார்த்தி வழிபட்டு வந்தான். இதனால் ஜோதிடம், ஆரூடம்,பட்சி, சாஸ்திரம், வானசாஸ்திரம் போன்ற சகல கலைகளிலும் வல்லவனாய்த் திகழ்ந்தான். எனவே குழந்தைகள் நன்கு படிக்க,ஒவ்வொரு புனர்பூச நட்சத்திரத்தன்றும் ஸ்ரீ ஹயக்ரீவருக்கு சாமந்திப் பூ மாலை சார்த்தி, கற்கண்டு நிவேதனம் செய்து அதை ஏழைக்கு குழந்தைக்குப் பிரசாதமாக வழங்க வேண்டும். இவ்வாறு தொடர்ந்து செய்து வந்தால், கல்வியில் மந்தமாய் உள்ள குழந்தைகள் படிப்பில் ஆர்வம் காட்டுவார்கள்.

**பூசம்**

பூசம் நட்சத்திரத்தன்று திருநள்ளாறு சென்று சனி பகவானை

வழிப்பட்டால் நாம் பல பிறவிகளில் செய்த பாவம் நீங்கும். தீராத நோயினால் துன்பப்படுவர்கள் பூசம் நட்சத்திரத்தன்று திருநள்ளாறு சென்று நளதீர்த்தத்தில் நீராடினால் தீராதநோயும் தீரும்.

சித்த மருத்துவர்கள் பூசம் நட்சத்திரம் வரும் நாளில் மூலிகைப் பறித்தால், அந்த மூலிகைகளில் விசேஷ சக்தி நிரம்பியிருக்கும்.

**ஆயில்யம்**

ஆயில்யம் நட்சத்திரத்தின் உருவம் பாம்பு போல் காணப்படுவதால் இதற்கு சர்ப்பநட்சத்திரம் என்று பெயர். ஜாதகத்தில் நாகதோஷம், காலசர்ப்பதோஷம், உடையவர்கள் ஆயில்யம் நட்சத்திரத்தன்று புற்றுள்ள ஆலயங்களுக்குச்சென்று பால் ஊற்றி வழிபடுவதாலும்,நாக பிரதிஷ்டைகளை பாலாபிசேகம் செய்து வழிபடுவதாலும் மேற்கூறிய தோஷங்களிலிருந்து விடுபடலாம். ஆயில்யம் நட்சத்திரத்தில் பிறந்த பெண்கள் ஆயில்யம் நட்சத்திரத்தன்று அம்மிக் கல்லைத் தானம் செய்ய தோஷம் விலகும்.

**மகம்**

மகம் நட்சத்திரத்தன்று விரதமிருந்து, அன்றைய தினம் பிள்ளையார்ப்பட்டிக்குச்சென்று விநாயகரை வழிப்பட்டால் புத்திரதோஷம் நீங்கி குழந்தை பாக்யம் உண்டாகும். பிள்ளையார்பட்டிக்கு செல்ல முடியாதவர்கள் அருகிலுள்ள பிள்ளையார் கோயிலுக்குச் சென்று வழிபட்டால் போதும்.

**பூரம்**

பூரம் நட்சத்திரத்தின் அதிதேவதை துர்கை என்பதாய் ஏவல், பில்லி, சூன்யம் போன்ற பிரச்சினைகளிலிருந்து விடுபட பூரம் நட்சத்திரத்தன்று விரதமிருந்து துர்க்கைக்கு எலுமிச்சம் பழ தொன்னையில் நெய் ஊற்றி விளக்கேற்றி வழிபட அபிச்சார தோசங்கள் நீங்கும்.

ஆண்டாள் அவதரித்த பூரம் நட்சத்திரம் தன்று ஸ்ரீ

வில்லிப்புத்தூருக்குச் சென்று அங்குள்ள பெருமானை சேவித்தால் விரும்பி வாறு கணவன் அமைவான்.

**உத்திரம்**

உத்திரம் நட்சத்திரத்தின் உருவம் ஆண்குறி போன்று காட்சியளிக்கிறது. எனவே ஆண்மைக்குறைவுடைய ஆண்கள் உத்திரம் நட்சத்திரம் வரும்நாட்களில் விரதமிருந்து சிவபெருமானை வழிப்பட்டு வந்தால் ஆண்மைக்குறைவு நீங்கும்.

தாம்பத்திய உறவில் திருப்தியில்லாமலும், விருப்பம் இல்லாமலும் இருக்கும் பெண்களை வசியப்படுத்த வேண்டுமானால் உத்திரம் நட்சத்திரம் வரும் நாளில் தண்ணீரில் நீராடி உடலில் சந்தனம் புனுகு போன்ற வாசனைத் திரவியங்களைப் பூசிக் கொண்டு பெண்ணைக் கூடினால் அந்தப் பெண் எளிதில் வசியமாவாள் தம்பதிகளாய் இருப்பவர்களுக்கு மட்டுமே இது பொருந்தும்.

**ஹஸ்தம்**

ஹஸ்தம் என்றால் கை என்றுபொருள், எனவே அஸ்தம் நட்சத்திரத்தன்று அம்பாளை வணங்கிவிட்டு , பெண் பார்க்கச் சென்றால், விரைவில் திருமணம் நடைபெறும்.

ஹஸ்தம் நட்சத்திரத்தன்று அம்பாளை வணங்கிவிட்டு ஒப்பந்தங்களில் கையெழுத்திட , ஒப்பந்தங்கள் எளிதில் நிறைவேறும்.

பஞ்ச பாண்டவர்களில் ஒருவரான சகாதேவன் பிறந்த நட்சத்திரம் ஹஸ்தமாகும். இவன் ஜோதிடம் , ஆருடம், பட்சி, சாஸ்திரம், வான சாஸ்திரம் இவைகளில் சிறந்து விளங்கினான். எனவே ஜோதிடம் கற்க விரும்புவார்கள் ஹஸ்தம் நட்சத்திரத்தன்று பாடம் கற்கத்தொடங்குவது நல்லது.

**சித்திரை**

சித்திரை நட்சத்திரத்தின் அதிபதி செவ்வாய், சித்திரை

நட்சத்திரத்தில் நீச்சமடையும் கிரகம் சுக்கிரனாகும். எனவே கணவனுக்கு அடங்காக மனைவியை வசியப்படுத்த விரும்பும் கணவன் சித்திரை நட்சத்திரதன்று விரதமிருந்து முருகப்பெருமானையும், வள்ளி, தெய்வானையையும், வழிபட்டால் மனைவி கணவனுக்கு வசியமாவாள்.

சித்திரை நட்சத்திரத்தன்று விரதமிருந்து முருகப் பெருமானையும் வள்ளியையும் வழிபட்டால் காதல் முயற்சிகள் வெற்றிபெறும் காதலுக்கு எதிரான எதிர்ப்புகள் நீங்கும்.

**சுவாதி**

திருமணம் ஆகி பல வருடங்களாக குழந்தைஇல்லாமல் இருப்பவர்கள் சுவாதி வரும் நாட்களில் மட்டும் தாம்பத்திய உறவில் ஈடுபட்டு வந்தால் கருத்தரிப்தற்கான வாய்ப்புகள் அதிகமாகும்.

சுவாதி நட்சத்திரம் வரும்நாளில் திருவாலங்காட்டிற்குச் சென்று சிவபெருமானை வழிபட்டால் களத்திரதோஷம், புத்திரதோஷம், அபிச்சார தோஷம் நீங்கும்.

**விசாகம்**

விசாகம் நட்சத்திரத்தில் பிறந்தவன் விக்னேஷ்வரன் விசாகம் நட்சத்திரத்தில் பிறந்த பெண்கள் விசாக நட்சத்திரத்தன்று விரதமிருந்து விக்னேஷ்வரனை வழிபட்டுவந்தால் திருமணத்தடைகள் நீங்கும்.

விசாகம் நட்சத்திரத்தன்று விரதமிருந்து, விநாயகருக்கும், சிவனுக்கும் அர்ச்சனை செய்து வழிப்பட்டு பின் ஒரு முறத்தில் பச்சரிசி, வெல்லம், வாழைப்பழம், அருகம்புல், கரும்புத்துண்டு இவைகளை வைத்து, அதை கோயில் யானைக்கு கொடுக்க அனைத்து விதமான தடைகளும் நீங்கும். விசாகம் நட்சத்திரத்தின் உருவம் முறம் என்பது குறிப்பிடத்தக்கது.

**அனுசம்**

அனுசம் நட்சத்திரமானது காலப்புருச லக்னமான மேசத்திற்கு எட்டாம் வீடான விருச்சிகத்தில் அமைந்துள்ளது. எட்டாம் பாவம் ஆயுள் ஸ்தானம் எனப்படும் அனுசம் நட்சத்திரத்தின் அதிபதி சனியாகும். சனிக்கு ,ஆயுள் காரகன் என்றுபெயர் எனவே மாரக தசை நடப்பில் உள்ளவர்கள். கோட்சாரத்தில் மாரகஸ்தானத்தில் சனி, அஷ்டமஸ்தானத்தில் சனி இருப்பவர்கள் அனுசம் நட்சத்தித்தன்று விரத மிருந்து சிவபெருமானை வழிப்பட்டால் ஆயுள் தோசம் நீங்கும்.

அனுசம் நட்சத்திரத்தின் அதிதேவதை லட்சுமியாகும். இந்த நட்சத்திரம் காலப்புருச லக்னத்திற்கு எட்டாம் பாவத்தில் அமைந்துள்ளது. எட்டாம் பாவம் எதிர்பாராத தன வரவைக் குறிக்கும். எனவே அதிர்ஷ்ட வாய்ப்புகளை அடைய விரும்பவர்கள் அனுசம் நட்சத்திரத்தன்று விரதமிருந்து வில்வ இலைகளைக் கொண்டு சிவபெருமானை வழிப்பட்டால் அதிர்ஷ்ட வாய்ப்புகள் தேடிவரும்.

புதையல் எடுக்க விரும்புபவர்கள் அனுசம் நட்சத்திரத்தன்று விரதமிருந்து பைரவரை வழிபட்டால் முயற்சி வெற்றி அடைய வாய்ப்புண்டு.

**கேட்டை**

கேட்டை நட்சத்திரத்தின் உருவம் ஈட்டியாகும்., இந்நட்சத்திரம் காலப்புருச லக்னமான மேசத்திற்கு எட்டாம் பாவத்தில் அமைந்துள்ளது. எட்டாம் பாவம் ஆயுள் ஸ்தானம் என்ப்படும். கேட்டை நட்சத்திரத்தில் நீச்ச மடையும் கிரகம் ராகு வாகும். ராகுவிற்கு மரணக்காரகன் என்று பெயர் எனவே மரண பயத்திலிருந்து விட பட விரும்புவார்கள் கேட்டை நட்சத்திரத்தன்று விரதமிருந்து முருகனை வழிப்பட்டு முருகனுக்கு வேல் காணிக்கை செலுத்த மரண பயம் நீங்கும்.

யாருக்காவது அடிக்கடி விபத்து ஏற்பட்டாலோ, அல்லது மரணத்திற்கு ஒப்பான கண்டங்கள் ஏற்பட்டலோ, மேற்கண்ட பரிகாரத்தைச் செய்வதன் மூலம் நிவாரணம் பெறலாம்.

**மூலம்**

மூலம் நட்சத்திரத்தில் பிறந்த பெண்கள் மூலம் நட்சத்திரம் வரும் நாளில் ஒரு முறத்தில் பச்சரிசி, வெல்லம், வாழைப்பழம், அருகம்புல், கரும்பு இவைகளை வைத்து கோயில் யானைக்குக் கொடுக்க மூலம் நட்சத்திரத்தில் வந்த தோஷம் விலகும் யானைக்குக் கொடுக்க முடியாதவர்கள் மேற்கண்ட பொருட்களை பசுமாட்டிற்குக் கொடுக்கலாம்.

மூலம் நட்சத்திரத்தில் பிறந்தவர் ஆஞ்சநேயர், எனவே மூலம் நட்சத்திரத்தன்று விரதமிருந்து ஆஞ்சநேயரை வழிப்பட்டால் மூலநட்சத்திரத்தால் வந்த தோஷம் விலகும். யானைக்கு கொடுக்க முடியாதவர்கள் மேற்கண்ட பொருட்களை பசுமாட்டிற்குக் கொடுக்கலாம்.

மூலம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் ஆஞ்சநேயர், எனவே மூலம் நட்சத்திரத்தன்று விரதமிருந்து ஆஞ்சநேயரை வழிப்பட்டால் மூலநட்சத்திரத்தால் வந்த தோஷம் நீங்கும். மூலநட்சத்திரத்தன்று குரங்குகளுக்கு வாழைப்பழம், கொய்யாப்பழம் இவைகளைக் கொடுத்தாலும் மூல நட்சத்திரத்தால் தோஷம் நீங்கும்.

மூலம் நட்சத்திரம் வரும் நாளில் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள பாபநாசம் சென்று அங்குள்ள அகத்தியர் கோயிலுக்குச் சென்று வழிப்பட்டால் சகலபாவங்களும், தடைகளும், நீங்கும் பாபநாசம் செல்பவர்கள் அங்கு குரங்குகள் கூட்டம் கூட்டமாக இருப்பதைக் காணலாம். எனவே குரங்குகளுக்கு வாழைப்பழம் வாங்கி தரலாம்.

**பூராடம்**

பூராடம் நட்சத்திரத்தின் உருவம் தண்டம் ஆகும். கையில் தண்டம் வைத்திருப்பவர்கள் சித்தர்கள் மற்றும் ரிஷிகளாகும். பூராடம் நட்சத்திரம் காலபுருச லக்னமான மேசத்திற்கு ஒன்பதாம் வீடான தனுசு ராசியில் அமைந்துள்ளது. ஒன்பதாம் வீடு தெய்வ பக்தி, குரு பக்தி இவைகளைக் குறிக்கும் எனவே பூராடம் நட்சத்திரத்தன்று விரமிருந்து ஜீவசமாதி அடைந்த சித்தர்களின் சமாதிக்குச் சென்று வழிபட்டால் சகல தோஷங்களும் நீங்கும்.

பூராடம் நட்சத்திரத்தின் அதிதேவதை வருணன் ஆகும். வருணன் மழைக்கு அதிபதி. மழையின்றி நதிகள் இல்லை, எனவே புனித நதிகளின் உற்பத்திக்கு வருண பகவான் காரணமாகிறான். பூராடம் நட்சத்திரத்தன்று புனித நதிகளில் நீராடினால் சகல பாவங்களும் நீங்கும்.

**உத்திராடம்**

உத்திராடம் நட்சத்திரத்தன்று விரதமிருந்து ஐயப்பனையோ அல்லது சங்கர நாராயணரையோ வழிபட்டு வந்தால் நல்ல உத்யோகமோ அல்லது தொழிலோ அமையும்.

உத்திராடம் நட்சத்திரத்தன்று எடுக்கும் அனைத்து முயற்சிகளும் எந்த வித தடைகளுமின்றி வெற்றி அடையும்.

**திருவோணம்**

திருவோணம் நட்சத்திரத்தன்று பெருமானை வணங்கிவிட்டு வெளிநாட்டுப் பயணம் செய்தால் வெற்றியுடன் திரும்பலாம். திருவோணம் நட்சத்திரத்தின் அதிபதி சந்திரன், சந்திரன், பயணங்களைக் குறிக்கும் கிரகம், திருவோணம் நட்சத்திரத்தின் அதிதேவதை மகாவிஷ்ணு

திருவோணாம் நட்சத்திரத்தன்று பெருமானை வழிப்பட்டு வந்தால் தொழில் விருத்தி, வியாபார விருத்தி உண்டாகும்.

**அவிட்டம்**

அவிட்டம் நட்சத்திரத்தின் அதிபதி செவ்வாயாகும். செவ்வாயின் அதிதேவதை முருகனாகும். விபத்திற்கு காரகம் வகிக்கும் கிரகம் செவ்வாயாகும். செவ்வாய் கிரகமானது தனது சொந்த நட்சத்திரமான அவிட்டம் நட்சத்திரத்திலேயே உச்சமடைகிறது.

எனவே அடிக்கடி விபத்துக் குள்ளாவர்கள் அவிட்டம் நட்சத்திரத்தன்று விரதமிருந்து முருகப்பெருமானை வழிப்பட்டுவந்தால் விபத்துக்கள் நேராது. விபத்துக்கள் ஏற்பட்டாலும் காய மின்றி தப்பலாம்.

தொழிற்போட்டியை சமாளிக்க அவிட்டம் நட்சத்திரத்தன்று விரதமிருந்து அருகிலுள்ள முருகன் ஆலயத்திற்குச் சென்று வணங்கி வர தொழிற்போட்டிகள் குறைகள்.

**சதயம்**

கைகால் மூட்டுகளில் வலி உடையவர்கள் சதயம் நட்சத்திரம் வரும்நாளில் சிவாலயங்களுக்குச் சென்று அங்குள்ள காலபைரவருக்கு மண் விளக்கில் நல்லெண்ணெய் ஊற்றி தீபமேற்றி வழிபட உடம்பில் உள்ள எல்லாவிதமான வலிகளும் நீங்கும். செய்வினைக் கோளாறுகளிலிருந்து விடுபடவும் இந்த பரிகாரத்தை செய்யலாம்.

**பூரட்டாதி**

பூரட்டாதி நட்சத்திரத்தன்று விரதமிருந்து தட்சிணா மூர்த்தியை வணங்கி வந்தால் விரும்பியபடி நல்ல உத்யோகமோ, தொழிலோ அமையும்.

பூரட்டாதி நட்சத்திரத்தன்று விரதமிருந்து தட்சிணா மூர்த்தியை வணங்கி வந்தால் விரும்பயபடி நல்ல உத்யோகமோ, தொழிலோ அமையும்.

பூரட்டாதி நட்சத்திரத்திற்கு காமதேனு என்று ஒரு பெயர் உள்ளது. எனவே பூரட்டாதி நட்சத்திரத்தன்று பசு மாட்டிற்கு அருகம்புல்லோ அல்லது அகத்திக்கீரையோ வாங்கி கொடுத்து வந்தால் வறுமை நீங்கும்.

## உத்திரட்டாதி

உத்திராட்டாதி நட்சத்திரத்தன்று கோ பூஜை செய்தால் தொழில் விருத்தி அடையும். உத்யோகத்தில் மேன்மை ஏற்படும். உத்திரட்டாதி நட்சத்திரத்தில் நீச்சமடையும் கிரகம் புதனாகும்.

புதனுக்கு அதிதேவதை விஷ்ணுவாகும். விஷ்ணு சயன கோலத்திலிருக்கும் ஆலயங்களுக்கு சென்று உத்திரட்டாதி நட்சத்திரத்தன்ற வழிபட்டு வந்தால் செல்வம் பெருகும்.

## ரேவதி

ரேவதி நட்சத்திரத்தில் உச்சம் பெறும் கிரகம் சுக்கிரனாகும். சுக்கிரனின் அதிதேவதை மகாலட்சுமி ரேவதி நட்சத்திரம் காலப்புருசனான விஷ்ணுவின் பாதங்களைக் குறிக்கும். விஷ்ணுவின் பாதத்தில் அமர்ந்திருப்பவள் லட்சுமியாகும் எனவே ரேவதி நட்சத்திரத்தன்று மகாலட்சுமியை வழிபட்டால் கையில் பணஇருப்பு, சேமிப்பு போன்றவை சாத்தியப்படும்.



# 48. நவக்கிரகங்களுக்குரிய அர்ச்சனை மந்திரங்கள்

**சூரியன்**

ஓம் பாநவே நமஹ

ஓம் ஹம்ஸாய நமஹ

ஓம் பாஸ்கராய நமஹ

ஓம் சூர்யாய நமஹ

ஓம் ஸீராய நமஹ

ஓம் தமோஹராய நமஹ

ஓம் ரதிநே நமஹ

ஓம் விச்வத்ருதே நமஹ

ஓம் அவ்யாப்த்ரே நமஹ

ஓம் ஹரயே நமஹ

ஓம் வேதமயாய நமஹ

ஓம் விபவே நமஹ

ஓம் சுத்தாம்ஸவேஸ நமஹ

ஓம் சூப்ராம்ஸ வேஸ நமஹ

**சந்திரன்**

ஓம் சந்தராய நமஹ

ஓம் அத்ரி நேத்ர ஸமுத்பவாய நமஹ

ஓம் தாராதிபாய நமஹ

ஓம் ரோஹிணீசாய நமஹ

ஓம் சம்புமூர்த்திக்ருதாலயாய நமஹ்

ஓம் ஔஷதிட்டாய நமஹ

ஓம் ஔஷதிபதயே நமஹ

ஓம் ஈச்வரதராய நமஹ

ஓம் ஸீதாநிதயே நமஹ

ஓம் ஸகலாஷ் லாதநகராய நமஹ

**செவ்வாய்**

ஓம் பௌமாய நமஹ

ஓம் பூமிஸீதாய நமஹ

ஓம் பூதமான்யாய நமஹ

ஓம் ஸமுத்பவாய நமஹ

ஓம் ஆர்யாய நமஹ

ஓம் ஆக்னிக்ருதே நமஹ

ஓம் ரோஹிதாங்காயநமஹ

ஓம் ரக்த வஸ்த்ரதராய நமஹ

ஓம் சூசயே நமஹ

ஓம் மங்களாய நமஹ

ஓம் அங்காரகாய நமஹ

ஓம் ரக்தமாலிதே நமஹ

ஓம் மாயாவிசாரதாய நமஹ

**புதன்**

ஓம் புதாய நமஹ

ஓம் தாராஸீதாய நமஹ

ஓம் ஸௌம்யாய நமஹ

ஓம் ரோஹிணி கர்ப்ப ஸம்பூதாய நமஹ

ஓம் சந்த்ராத்மஜாய நமஹ

ஓம் ஸோம வம்சகராய் நமஹ

ஓம் ச்ருதி விசாரதாய நமஹ

ஓம் ஸத்ய ஸந்தாய நமஹ

ஓம் ஸத்ய ஸிந்தவே நமஹ

ஓம் விது ஸீதாய நமஹ

ஓம் விபுதாய் நமஹ

ஓம் விபவே நமஹ

குரு

ஓம் வாக்ப்ருதே நமஹ

ஓம் ப்ராஹ் மணாய நமஹ

ஓம் ப்ரஹ்மணே நமஹ

ஓம் தீஷ்ணாய நமஹ

ஓம் சுபவேஷதராய நமஹ

ஓம் கீஷ்பதயே நமஹ

ஓம் குரவே நமஹ

ஓம் இந்த்ரபுரோஹிதாய நமஹ

ஓம் ஜீவாய நமஹ

ஓம் நிர்ஜரபூஜிதாய நமஹ

ஓம் பீதாம்பராலங்க்ருதாய நமஹ

சுக்கிரன்

ஓம் ப்ருகவே நமஹ

ஓம் பார்கவஸம்பூதாய நமஹ

ஓம் நிசா சரகுரவே நமஹ

ஓம் கவயே நமஹ

ஓம் த்ருப்யகேதஹராய நமஹ

ஓம் ப்ருகுஸீதாயநமஹ

ஓம் வர்ஷக்ருதே நமஹ

ஓம் தீநராஜ்யதாய நமஹ

ஓம் சுக்ராய நமஹ

ஓம் சுக்ரங்வரூபாய நமஹ

ஓம் ராஜ்யதாய நமஹ

ஓம் லயக்ருதாய நமஹ

சனி

ஓம் கோணாய நமஹ

ஓம் சனைச்சராய நமஹ

ஓம் மான்யாய நமஹ

ஓம் சாயா ஹ்ருதயநந்த நாய நமஹ

ஓம் மார்தாண்ட ஜாய நமஹ

ஓம் பங்கவே நமஹ

ஓம் பாநுத்நூபவாய நமஹ

ஓம் யமாநுஜாய நமஹ

ஓம் அதிபயக்ருதே நமஹ

ஓம் நீலாய நமஹ

ஓம் ஸீர்ய வம்சஜாய நமஹ

ஓம் நிர்மாம் ஸதேஹாய நமஹ

ராகு

ஓம் ராஹவே நமஹ

ஓம் ஸவர்பாநவே நமஹ

ஓம் ஆதித்ய சந்ர்த்வேஷிணே நமஹ

ஓம் புஜாய்கமாய நமஹ

ஓம் ஸிம்ஹிகேசாய நமஹ

ஓம் குணாவதே நமஹ

ஓம் ராத்ரி பதிபீடிதாய நமஹ

ஓம் அஹிராஜே நமஹ

ஓம் சிரோஹீநாய நமஹ

ஓம் ரவிக்ருதே நமஹ

ஓம் ராஹீ ரூபத்ருதே நமஹ

ஓம் மஹாகாயாய நமஹ

ஓம் மஹாபூதாய நமஹ

**கேது**

ஓம் கேதவே நமஹ

ஓம் கேதுஸ்வரூபாயநமஹ

ஓம் கேசராய நமஹ

ஓம் சுக்ருதாலயாய நமஹ

ஓம் ப்ரஹ்ம விதே நமஹ

ஓம் ப்ரஹ்ம புத்ராய நமஹ

ஓம் குமார காய நமஹ

ஓம் ப்ராஹ் மணப்ரீதாய நமஹ



# திருமணத் தடைகளை நீக்குவதற்கு பரிகாரம்

**பெண்களுக்கு :**

பெண்களுக்கு காலாகாலத்தில் திருமணம் ஆகாமல் தாமதப்பட்டுக்கொண்டிருந்தாலோ அல்லது ஏதாவது ஒரு காரணத்தினால் தடைப்பட்டு நின்றாலோ அத்தகைய பெண்கள் கீழ்க்கண்ட பொருட்களை ஒரு வியாழக்கிழமையன்று காலையில் குளித்து முடித்தபின் சேகரிக்கவேண்டும்.

1. மஞ்சள் – 7
2. பாக்கு – 7
3. வெல்லம் – 7
4. மஞ்சள் தடவப்பட்ட பூணூல் – 7
5. மஞ்சள் பூக்கள் – 7
6. கொண்டை கடலை – 70 கிராம்
7. காசு (நாணயம்) – 7
8. மஞ்சள் துணி – 70 செ.மீ.

சேகரித்தப் பொருட்களை சிவனும் பார்வதியும் திருமணக்கோலத்தில் இருக்கும் போட்டோ அல்லது படத்தின் முன் வைத்து திருமணத்தடைகள் நீங்கி தனக்கு விரைவில் திருமணம் நடைபெற வேண்டுமென்று மனதிற்குள் வேண்டிக் கொள்ளவேண்டும். மனதிற்குள்ளேயே ஒரு குறிப்பிட்ட தொகையை காணிக்கையாக அளிப்பதாக தெய்வத்திடம் தெரிவிக்கவேண்டும். பின் மேற்கண்ட பொருட்களையும், காணிக்கை தொகையையும் ஒரு மஞ்சள் துணியில் கட்டி, யாருக்கும் தெரியாத மறைவிடத்தில் வைக்கவேண்டும். தொடர்ந்து 40 நாட்கள் சிவனையும் பார்வதியையும் வழிபட்டுவரவேண்டும். அவ்வாறு வழிபடும்போது தன்னுடைய எண்ணம் நிறைவேற அருள்புரியுமாறு வேண்டிக்கொள்ள

வேண்டும். 40–ம் நாள் காலையில் குளித்து முடித்த பின் சிவனும், பார்வதியும் எழுந்தருளியுள்ள ஆலயத்திற்குச் சென்று வழிபட்டு பின் மேற்கண்ட பொருட்களையும், காணிக்கையையும் கோயில் பூஜாரிக்கு தானமாக கொடுத்துவிடவேண்டும்.

**ஆண்களுக்கு :**

காலாகாலத்தில் திருமணம் ஆகாத ஆண்கள் கீழ்கண்ட பொருட்களை ஒரு வெள்ளிக்கிழமையன்று காலையில் குளித்து முடித்த பின் சேகரிக்கவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| 1. சந்தனக்கட்டிகள் | – 7 | 5. லவங்கம் | – 7 |
| 2. காசு (நாணயம்) | – 7 | 6. பூணூல் | – 7 |
| 3. கற்கண்டு | – 7 | 7. வெள்ளை மலர் | – 7 |
| 4. அரிசி | – 70 கிராம் | 8. வெள்ளைத்துணி | – 70 செ.மீ. |

சேகரித்த பொருட்களை சிவனும், பார்வதியும் திருமணக்கோலத்தில் இருக்கும் போட்டோ அல்லது படத்தின் முன் வைத்து திருமணத்தடைகள் நீங்கி தனக்கு விரைவில் திருமணம் நடைபெற வேண்டும் என மனதிற்குள் வேண்டிக்கொள்ளவும் மனதிற்குள்ளேயேஒரு குறிப்பிட்ட தொகையை காணிக்கையாக அளிப்பதாக தெய்வத்திடம் தெரிவிக்கவேண்டும். பின் மேற்கண்ட பொருட்களையும், காணிக்கை தொகையையும் ஒரு வெள்ளை துணியில் கட்டி, யாருக்கும் தெரியாத மறைவிடத்தில் வைக்கவும். தொடர்ந்து 40 நாட்கள் சிவனையும் பார்வதியையும் வழிபடவேண்டும். அவ்வாறு வழிபடும்போது தன்னுடைய எண்ணம் நிறைவேற அருள்புரியுமாறு வேண்டிக்கொள்ள வேண்டும். 40–ம் நாள் குளித்து முடித்த பின் சிவனும், பார்வதியும் எழுந்தருளியுள்ள ஆலயத்திற்குச் சென்று வழிபட்டு பின் மேற்கண்ட பொருட்களையும், காணிக்கையையும் கோயில் பூசாரிக்கு தானமாக கொடுக்கவும்.

இவ்வாறு முழு நம்பிக்கையுடன் செய்தால் திருமணத்தடைகள் நீங்கி விரைவில் திருமணம் நடைபெறும்.

---

# 49. கடன் தொல்லைகளிலிருந்து விடுபடுவது எப்படி?

மானிட வாழ்க்கையில் ஏற்படும் பல்வேறு பிரச்சினைகளுக்கும் ஜோதிட சாஸ்திரத்தில் பரிகாரங்கள் கூறப்பட்டுள்ளது. கடன் தொல்லை என்பது ஒரு மனிதருக்கு வரக்கூடாத பிரச்சினைதான், வந்து விட்டால் என்ன செய்வது? வாங்கிய கடனை திருப்பிக் கொடுக்க முடியவில்லையே எனக் கவலைப்படுகிறீர்களா? கவலை வேண்டாம். நம் முன்னோர்கள் கூறியுள்ள பரிகாரங்களை நம்பிக்கையுடன் ஏற்றுச் செய்தால் நிச்சயமாகக் கடன் தொல்லைகள் தீரும்.

வாங்கியக் கடனை திருப்பிக் கொடுக்க முடியாமல் தவிப்பார்கள், வருடத்தில் ஒருசில குறிப்பிட்ட நாட்களில் கடன் தொகையில் ஒரு சிறு பகுதியை திருப்பிக் கொடுத்தால், விரைவிலேயே முழுக்கடனையும் திருப்பிக் கொடுக்கும் வல்லமையும், வாய்ப்பு வசதிகளும் உருவாகும் எனக் கூறப்படுகிறது. அத்தகைய நாட்கள் எவை என்பதைப் பார்ப்போம்.

1. அஸ்வினி நட்சத்திரமும், மேஷ லக்னமும், அனுஷம் நட்சத்திரமும் விருச்சிக லக்னமும் கூடிய காலத்திற்கு மைத்ர முகூர்த்தம் என்று பெயர். இந்த முகூர்த்தத்தில் கடன் தொகையில் ஒரு சிறு தொகையைக் கொடுத்தால் கொடுக்க வேண்டிய கடன்தொகை எவ்வளவு அதிகமாக இருப்பினும் அக்கடன் முழுவதும் விரைவில் தீர்ந்து விடும்.

2. செவ்வாய்கிழமையும் நவமி திதியும், ஞாயிற்றுக்கிழமையும், சதுர்தசி திதியும், சனிக்கிழமையும், சதுர்த்தி திதியும் சேர்ந்து விடும் நாளில் குளிகன் உதயமாகும் சமயத்தில் கொடுக்கவேண்டிய கடன் தொகையில் சிறிதளவு கொடுத்தாலும் மிக விரைவில் கடன் தொல்லையிலிருந்து விடுபடலாம்.

3. மேற்கண்ட தினங்களில் ஷஷ்டி கரணத்தில் குளிகன் சேரும்பொழுது கடனைத் திருப்பிக் கொடுக்கலாம்.

4. சனிக்கிழமை பிரதோஷ காலத்தில், சர லக்கினங்களான மேஷம், கடகம், துலாம், மகரம் ஆகிய லக்கினங்கள் உதயமாகும் சமயத்தில் கடனைத் திருப்பிக் கொடுக்கலாம்.

5. செவ்வாய்கிழமை பிரதோஷ காலத்தில் சூரிய அஸ்தமனத்திற்கு 90 நிமிடங்களுக்கு முன்பு கடனைத் திருப்பிக் கொடுக்கலாம்.

6. லக்னத்தில் ராகுவும், வியாதிபாதயோகமும் கூடிய காலத்தில் கடனைத் திருப்பித் தரலாம்.

7. சூரிய, சந்திர கிரகணம் ஏற்பட்டு கிரகணம் விலகும் சமயம் கடனைத் திருப்பித் தரலாம்.

8. செவ்வாய்க்கிழமை செவ்வாய் ஓரையில் கடனைத் திருப்பித் தரலாம்.

மேற்கண்ட நாட்களை பஞ்சாங்கங்களைப் பார்த்து தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஜோதிடம் தெரிந்தவர்கள் தாமாகவே தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம். ஜோதிடம் தெரியாதவர்கள் ஜோதிடர்களை அணுகி மேற்கண்ட நாட்களைத் தேர்ந்தெடுத்து பயனடைவீர்களாக!

# 50. நவரத்தின பரிகாரங்கள்

நவ ரத்தினங்களில் ஒளிபுகும் தன்மையுடையவை என்றும், ஒளிபுகா தன்மையுடையவை என்றும் இரண்டு வகையான ரத்தினங்கள் உண்டு. அவைகளைப் பார்ப்போம்.

**ஒளிபுகும் தன்மையுடைய ரத்தினங்கள் :**

1. மாணிக்கம் – சூரியன்
2. மரகதம் – புதன்
3. புஷ்பராகம் – குரு
4. வைரம் – சுக்கிரன்
5. நீலம் – சனி

**ஒளிபுகாத தன்மையுடைய ரத்தினங்கள் :**

1. முத்து – சந்திரன்
2. பவளம் – செவ்வாய்
3. கோமேதகம் – ராகு
4. வைடூரியம் – கேது

நவகிரகங்களை விதியை இயக்கும் கிரகங்கள் என்றும் விதியை முடக்கும் கிரகங்கள் என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

**விதியை இயக்கும் கிரகங்கள் :**

1. சூரியன்
2. புதன்
3. குரு
4. சுக்கிரன்
5. சனி

**விதியை முடக்கும் கிரகங்கள் :**

1. சந்திரன்
2. செவ்வாய்
3. ராகு

4. கேது

விதி இயங்கவில்லை என்றால் வாழ்க்கை என்பதே கிடையாது. எனவே மனித வாழ்க்கையில் விதி எப்பொழுதும் இயங்கிக் கொண்டேதான் இருக்கும். விதியைக் குறிக்கும் கிரகம் சனியாகும். விதிக்காரகன் சனியோடு விதியை இயக்கும் கிரகங்கள் சேர்க்கை பெற்றிருந்தால் விதிப்படி ஒரு மனிதனுக்கு கிடைக்க வேண்டிய பலன்கள் எதுவும் தடைபடாமல் கிடைத்து விடும். விதிக்காரகன் சனியோடு விதியை முடக்கும் கிரகங்கள் சேர்க்கைப் பெற்றிருந்தால் விதிப்படி ஒரு மனிதனுக்கு கிடைக்க வேண்டிய பலன்கள் நடப்பதில் தடைகள் உண்டாகும். உதாரணமாக ஒருவருடைய ஜாதகத்தில் சனி, சுக்கிர சேர்க்கை இருந்தால் ஜாதகருக்கு சுகபோகமான வாழ்க்கை அமையும், இந்த சேர்க்கையில் கேதுவும் சேர்ந்துவிட்டால் எவ்வளவு சொத்து சுகங்கள் இருந்தாலும் ஜாதகர் அவற்றை அனுபவிக்க முடியாது. இதற்கு காரணம் விதியை முடக்கும் கிரகமான கேதுதான். இதற்கு பரிகாரமாக கேதுவிற்குரிய ரத்தினமான வைடூரியத்தை கை விரல்களில் அணிந்து கொண்டால் கேதுவினால் ஏற்படக்கூடிய தடைகள் நீங்கும்.

பொதுவாக நவரத்தினங்கள் விரல்களில் மோதிரங்களாக அணியப்படுகின்றன. எனவே கைரேகை கலைக்கும் நவரத்தினங்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. கையில் தனித்தனியாக இயங்கும் தன்மையுடையவை விரல்கள். நவக்கிரகங்கள் ஒன்பது என்றாலும், நவரத்தினங்கள் ஒன்பது என்றாலும் ஒன்பது ரத்தினங்களையும் தனித்தனி விரல்களில் அணிந்து கொள்வதற்கு வசதியாக கையில் ஒன்பது விரல்கள் இல்லை. ஐந்து விரல்கள் மட்டுமே உள்ளன. ஐந்து விரல்களும் ஐந்து கிரகங்களைக் குறிக்கும்.

மோதிரவிரல் (சூரிய விரல்) – சூரியன்

நடுவிரல் (சனி விரல் – சனி

ஆள்காட்டி விரல் (குருவிரல்) – குரு

பெருவிரல் (சுக்கிரவிரல்) – சுக்கிரன்

சிறுவிரல் (புதவிரல்) – புதன்

மேற்கண்ட ஐந்து கிரகங்களைத் தவிர மற்றுள்ள நான்கு கிரகங்களுக்கும் கையில் மேடுகள் மட்டுமே உண்டு. கைவிரல்கள் குறிக்கும் ஐந்து கிரகங்களே விதியை இயக்கும் கிரகங்களாகும். ஐந்து விரல்களும் நகக்கண்கள் வழியாக அந்தந்த கிரக கதிர்களை கிரகித்து உடலில் செலுத்திக் கொண்டிருக்கும். மேலும் விதியை இயக்கும் கிரகங்களுக்குரிய ரத்தினங்கள் ஒளிபுகும் தன்மை உடையவை என்பதால் இந்த ரத்தினங்களை அணிவதும் ஒன்றுதான், அணியாததும் ஒன்றுதான். அதாவது ஒளிபுகும் தன்மையுடைய ரத்தினங்களை அழகுக்காக வேண்டுமானால் அணிந்து கொள்ளலாம். இதனால் கெடுதி ஒன்றும் ஏற்படாது. இந்த ரத்தினங்களை அணியாவிட்டாலும் விரல் நகக்கண்கள் மூலம் விதியை இயக்கும் கிரகங்களில் இருந்து வெளிப்படும் கதிர்கள் உடலில் கிரகிக்கப்படும். உடலில் ஏதாவது நோயிருந்தால், அதை நகக்கண்களை பார்த்து தெரிந்து கொள்ளலாம். இதன் மூலம் கிரகக் கதிர்கள் நகக்கண்கள் மூலமாகவே கிரகிக்கப்படுகிறது என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

விதியை முடக்கும் கிரகங்களுக்கு கையில் விரல்கள் இல்லை. ஆனால் மேடுகள் மட்டும் உண்டு எனப் பார்த்தோம். கையில் உள்ள கிரக மேடுகளை சமஸ்கிருதத்தில் "பர்வதம்" எனக் குறிப்பிடுவார்கள். "பர்வதம்" என்றால் மலை என்று பொருளாகும். நடந்து செல்லும் பாதையில் மலை குறுக்கிட்டால் மலை ஏறி, இறங்குவது கடினம் தானே. இதுபோல்தான் கையில் மேடுகளை மட்டுமே கொண்ட கிரகங்கள் விதியை முடக்கும் கிரகங்களாகச் செயல்படுகின்றன. கையில் உள்ள கிரக மேடுகள் தனித்தனியாக இயங்க முடியாது. கையில் உள்ள விரல்களால் கிரக மேடுகளை தொட முடியும். விரல்களை கிரக மேடுகளை தொடர்வதற்காக பயன்படுத்தும்போது விரல்கள் இயக்கமில்லாமல் முடங்கி

(மடங்கி)ப்போகும். இதன் காரணத்தினாலேயே விதியை இயக்கும் கிரக்ங்கள், விதியை முடக்கும் கிரகங்களோடு தொடர்பு கொள்ளாமல் இருப்பது நல்லது. விரல்கள் சுதந்திரமாக இயங்க வேண்டுமானால் அவை மேடுகளை நோக்கி மடங்கி இருக்கக்கூடாது. மடங்கி இருந்தால், நேராக விரல்களை நிமிர்த்தி விட்டால் விரல்கள் தன்னிச்சையாக இயங்கும். இதேபோல் விதியை இயக்கும் கிரகங்களும், விதியை முடக்கும் கிரகங்களும் சேர்க்கைப் பெற்றிருந்தால், இவ்விரு கிரகங்களிலிருந்தும் வெளிப்படும் கதிர்களை தனித்தனியாகப் பிரித்துவிட வேண்டும். ஒளிபுகா ரத்தினங்கள் கிரகங்களில் இருந்து வெளிப்படும் கதிர்களை உடலில் புகவிடாமல் விலக்கித்தள்ளும் தன்மையுடையவை. எனவே ஒளிபுகா தன்மை உடைய ரத்தினங்களை கைவிரல்களில் அணிந்து கொண்டால் அவை, விதியை முடக்கும் கிரகங்களிலிருந்து வரும் கதிர்களை உடலில் புகவிடாமல் தடுத்து விலக்கித்தள்ளிவிடும்.

உதாரணமாக ஒருவருடைய ஜாதகத்தில் சனியும் கேதுவும் சேர்க்கைப் பெற்றிருந்தால் சனி கிரகத்திலிருந்து வரும் கதிர்களுடன் கேதுவின் கதிர்கள் கலந்து, சனியிலிருந்து வரும் கதிர்களை உடலில் புகவிடாமல் தடுக்கும். இதற்கு பரிகாரமாக கேதுவினுடைய ரத்தினமான வைடூரியத்தை சனி விரலில் அணிந்து கொண்டால் கேதுவினுடைய கதிர்கள் தடுக்கப்பட்டு சனியினுடைய கதிர்கள் உடலில் சேர வழி ஏற்படும். எந்தெந்த கிரக சேர்க்கைக்கு எந்த விரலில் எந்த ரத்தினத்தை அணிய வேண்டுமென்று பார்ப்போம்.

**சனி + கே :**

நடு விரலில் (சனி விரல்) வைடூரியம் அணிய வேண்டும்.

**குரு + கே :**

ஆள்காட்டி விரலில் (குரு விரல்) வைடூரியம் அணிய வேண்டும்.

**பு + கே :**

சிறுவிரலில் (புத விரல்) வைடூரியம் அணிய வேண்டும்.

**சூ + கே :**

மோதிர விரலில் (சூரிய விரல்) வைடூரியம் அணிய வேண்டும்.

**சு + கே :**

பெருவிரலில் (சுக்கிரவிரல்) மோதிரம் அணிய முடியாது. எனவே கை வளையல் அல்லது காப்பில் வைடூரியத்தை பதித்து அணிந்து கொள்ள வேண்டும். கை வளையல்கள் பெருவிரலின் அடிப்பாகத்தைத் தொட்டுக்கொண்டிருக்கும் என்பதால் இவ்வாறு அணிய வேண்டும்.

**சனி + ரா :**

நடுவிரலில் (சனி விரல்) கோமேதகம் அணிய வேண்டும்.

**சு + ரா :**

கை வளையல்களில் கோமேதகத்தைப் பதித்து அணிந்து கொள்ளலாம்.

**சூ + ரா :**

மோதிரவிரலில் (சூரிய விரல்) கோமேதகத்தை அணிய வேண்டும்.

**குரு + ரா :**

ஆள்காட்டி விரலில் (குருவிரல்) கோமேதகத்தை அணிய வேண்டும்.

**பு + ரா :**

சிறுவிரலில் (புத விரல்) கோமேதகத்தை அணிய வேண்டும்.

**சனி + செ :**

நடுவிரலில் (சனி விரல்) பவளத்தை அணிய வேண்டும்.

**சு + செ :**

கை வளையல்களில் பவளத்தைப் பதித்து அணிந்து கொள்ள வேண்டும்.

**பு + செ :**

சிறு விரலில் (புதவிரல்) பவளத்தை அணிய வேண்டும்.

**சூ + செ :**

மோதிர விரலில் (சூரிய விரல்) பவளத்தை அணிய வேண்டும்.

**குரு + செ :**

ஆள்காட்டி விரலில் (குரு விரல்) பவளத்தை அணிய வேண்டும்.

**சனி + சந் :**

நடுவிரலில் (சனி விரல்) முத்து அணிய வேண்டும்.

**சு + சந் :**

கை வளையல்களில் முத்தைப் பதித்து அணிந்து கொள்ள வேண்டும்.

**சூ + சந் :**

மோதிரவிரலில் (சூரிய விரல்) முத்தை அணிய வேண்டும்.

**பு + சந் :**

சிறுவிரலில் (புத விரல்) முத்தை அணிய வேண்டும்.

**குரு + சந் :**

ஆள்காட்டி விரலில் (குரு விரல்) முத்தை அணிய வேண்டும்.

இங்கே கிரக சேர்க்கை என்பது ஒரு கிரகம் மற்ற கிரகம் இருக்கும் ராசிக்கு திரிகோணமாகவோ (1–5–9) அல்லது சம சப்தமமாகவோ (1–7) அல்லது அடுத்தடுத்த ராசிகளிலோ (2–12) அமைந்திருக்கலாம்.



# ஸ்ரீமத் பகவத்கீதை - நக்ஷத்திர பரிகாரங்கள்

சகல நக்ஷத்திர, கிரக தோஷங்களும் நிவர்த்தியாகி, எண்ணிய பயன்களை எளிதில் அடைய, ஸ்ரீமத் பகவத் கீதையில் உள்ள இந்த இருபத்தேழு சுலோகங்களையும் அந்தந்த தினத்தில் வருகின்ற நக்ஷத்திரத்திற்கு ஏற்ப 108 முறை பாராயணம் செய்யலாம். அல்லது தினமும் இந்த 27 சுலோகங்களையும் பாராயணம் செய்தும் வரலாம். இவ்வாறு செய்வதால் தோஷ நிவர்த்தி நிச்சயம் உண்டாகும். இது பலர் அனுபவத்தில் கண்ட உண்மை.

இவ்வரிய விஷயங்கள், 51 அக்ஷர பீடங்களுள் ஒன்றான சாயா பீடம் என்று அழைக்கப்படும் ஸ்ரீலலிதா பீடமான திருஈங்கோய் மலையில், ஸ்ரீலலிதா மஹிலா ஸமாஜத்தை நிறுவிய, ஸ்ரீஅகத்தியர் வழிவந்த மகான் ஸ்ரீஅத்வயானந்தர் அவர்கள் இயற்றிய 'நக்ஷத்திர கீதா' என்னும் நூலில் உள்ளன.

**அஸ்வினி**

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ:
மாமகா: பாண்டவாச்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய

**பரணி**

யதி மாமப்ரதீகாரம் அசஸ்த்ரம் சஸ்த்ரபாணய:
தார்தராஷ்ட்ரா ரணே ஹந்யு: தந்மே க்ஷேமதரம் பவேத்

**கிருத்திகை**

ஏவ முக்த்வார்ஜுந: ஸங்க்யே ரதோபஸ்த உபாவிசத்
விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோகஸம்விக்ந மாநஸ:

**ரோகிணி**

கார்பண்ய தோஷோ பஹதஸ்வபாவ: ப்ருச்சாமி
த்வாம் தர்மஸம்மூட. சேதா:
யச்ச்ரேய: ஸ்யாந் நிச்சிதம் ப்ரூஹி தந்மே
சிஷ்யஸ்தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்

**மிருகசீரிடம்**

தேஹீ நித்ய மவத்யோயம் தேஹே ஸர்வஸ்ய பாரத
தஸ்மாத் ஸர்வாணி பூதாநி ந த்வம் சோசிது மர்ஹஸி

**திருவாதிரை**

நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண:
சரீர யாத்ராபி ச தே ந ப்ரஸித்த்யே தகர்மண:

**புனர்பூசம்**

த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராச்ரய:
கர்மண்யபிப்ரவ்ருத்தோபி நைவகிஞ்சித் கரோதி ஸ:

**பூசம்**

த்ரவ்ய யஜ்ஞாஸ் தபோ யஜ்ஞா: யோகயஜ்ஞாஸ் ததா பரே
ஸ்வாத்யாய ஜ்ஞாநயஜ்ஞாச் ச யதய: ஸம்சித வ்ரதா:

**ஆயில்யம்**

நைவ கிஞ்சித் கரோமீதி யுக்தோ மந்யேத தத்வவித்
பச்யந் ச்ருண்வந் ஸ்ப்ருசன் ஜிக்ரந் அச்நந் கச்சந் ஸ்வபந் ச்வஸந்

**மகம்**

ப்ரலபந் விஸ்ருஜன் க்ருஹ்ணன் உந்மிஷந் நிமிஷந் அபி
இந்த்ரியாணீந்த்ரியார்தேஷு வர்தந்த இதி தாரயந்

**பூரம்**

சநை: சநைருபரமேத் புத்த்யா த்ருதித்ருஹீதயா
ஆத்ம ஸம்ஸ்தம் மந: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத்

**உத்திரம்**

யுஞ்ஜந்நேவம் ஸதாத்மாநம் யோகீ விகத கல்மஷ:
ஸுகேந ப்ரஹ்ம ஸம்ஸ்பர்சம் அத்யந்தம் ஸுக மச்நுதே

**அஸ்தம்**

மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய
மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ

**சித்திரை**

அப்யாஸ யோக யுக்தேந சேதஸா நாந்யகாமிநா
பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்தாநுசிந்தயந்

**ஸ்வாதி**

யத்கரோஷி யதச்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸியத்
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்பணம்

**விசாகம்**

யத்யத் விபூதிமத் ஸத்த்வம் ஸ்ரீம தூர்ஜிதமேவ வா
தத் ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்ச ஸம்பவம்

**அனுசம்**

இஹைகஸ்தம் ஜகத்க்ருத்ஸ்நம் பச்யாத்ய ஸசராசரம்
மமதேஹே குடாகேச யச்சாந்யத் த்ரஷ்டு மிச்சஸி

**கேட்டை**

யே த்வக்ஷர மநிர்தேச்யம் அவ்யக்தம் பர்யுபாஸதே
ஸர்வத்ரக மசிந்த்யம் ச கூடஸ்தமசலம் த்ருவம்

**மூலம்**

ஸந்நியம் யேந்த்ரிய க்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய:
தே ப்ராப்நுவந்தி மாமேவ ஸர்வபூத ஹிதே ரதா:

**பூராடம்**

இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரம் இத்யபிதீயதே
ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித:

**உத்திராடம்**

க்ஷேத்ரஜ்ஞும் சாபி மாம் வித்தி ஸர்வ க்ஷேத்ரேஷு பாரத
க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞானம் யத் தஜ்ஜ்ஞானம் மதம் மம

**திருவோணம்**

குணாநேதாந் அதீத்ய த்ரீந் தேஹீ தேஹஸ முத்பவாந்
ஜந்ம ம்ருத்யு ஜராது:கை: விமுக்தோம்ருதமச்நுதே

**அவிட்டம்**

தத: பதம் தத் பரிமார்கிதவ்யம் யஸ்மிந் கதா ந நிவர்தந்திபூய:
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா
புராணீ

**சதயம்**

த்வௌ பூதஸர்கௌ லோகேஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச
தைவீஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா

**பூரட்டாதி**

ச்ரத்தயா பரயா தப்தம் தபஸ் தத் த்ரிவிதம் நரை:
அபலாகாங்க்ஷிபிர் யுக்தை: ஸாத்விகம் பரிசக்ஷதே

**உத்திரட்டாதி**

யஸ்ய நாஹங்க்ருதே பாவோ புத்திர் யஸ்ய ந லிப்யதே
ஹத்வாபி ஸ இமாந் லோகாந் ந ஹந்தி ந நிபத்யதே

**ரேவதி**

ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:

# ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகர் அருளிய பரிகாரங்கள்

ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகர் அவர்களின் ஆயிரம் சுலோகங்கள் கொண்டது ஸ்ரீபாதுகா ஸகஸ்ரம் என்னும் அரிய படைப்பாகும். அவற்றில் சில சுலோகங்களை முறைப்படி ஜபம் செய்தால், நினைத்த காரியங்கள் வெற்றி பெறும் என்று முதன் முதலில் தனது சிஸ்யர்களுக்கு உபதேசித்தவர் ஸ்ரீமத் வேதாந்த ராமானுஜ மஹாதேசிகர் ஆவார். இங்கு கொடுக்கப்பட்டுள்ள சுலோகங்களை ஒவ்வொரு கிழமைகளிலும் அதற்குரிய பாடலைப் பாடினால் நினைத்த பலன் நிச்சயம் கிட்டும்.

பாடலைப் பாடுவதற்கு முன் உடல் சுத்தம், மன சுத்தம், உடை சுத்தம் ஆகியவை முக்கியம்.

நாடி சுத்தி செய்துவிட்டு, நினைத்த காரியத்தை மனதில் நிறுத்தி

ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய: கவிதார்க்கிககேஸரீ
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதாத்தாம் ஸதாஹ்ருதி

என்று சொல்லி பாடலைப் பாடவேண்டும்.

தினம்தோறும் 48 அல்லது 108 முறை என்னும் நியமம் வைத்துக் கொண்டு ஜெபித்து வரவேண்டும். குறைந்தது 1 மண்டலமாவது (48 நாட்கள்) ஜெபிக்க வேண்டும். குறிப்பிட்ட காலத்திற்குள் கோரிய பலன் கிடைக்கும் கிடைக்காது என்று அதைர்யமோ சந்தேகமோ வெறுப்போ கொள்ளலாமல் ஜபம் செய்ய வேண்டும். இறைவனின் திருவடியை மட்டுமே மனத்தில் நிறுத்தி ஜபம் செய்ய வேண்டும். ஜபம் முடிந்த பின்

கவிதார்க்கிகஸிம்ஹா கல்யாண குணசாலிநே
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம:

என்று சொல்ல வேண்டும்.

**1. ஞாயிற்றுக்கிழமை**

பாபாதபா பாத பாபா பாத பாத தபா தபா
தபா தபா பாத பாத பாதபாத தபா தபா.

**2. திங்கட்கிழமை**

பரதாராதிதாம் தாராம் வந்தே ராகவ பாதுகாம்
பகதாபாதி தாந்தாநாம் வந்த்யாம் ராஜீவமேதுராம்.

**3. செவ்வாய்க்கிழமை**

ஸாகேத த்ராண வேலா ஜநித ததநிஜ ப்ராங்கண ஸ்ரீப்ரபாஸா
ஸாபா ப்ரஸ்ரீ ரடவ்யாமிய மமமயமி வ்யாபது ச்சேதி லாஸா.

**4. புதன்கிழமை**

காதுபாஸ்ய ஸதாலோகா காலோதாஹ்ருத தாமகா
தாமதாத்வ ரிரம்ஸாகா காஸா ரங்கேச பாதுகா.

**5. வியாழக்கிழமை**

ஸுூரா ஸுூரார்ச்சிதா தந்யா துங்க மங்கல பாலிகா
சராசரார்ச்சிதா மாந்யா ரங்க புங்கவ பாதுகா.

**6. வெள்ளிக்கிழமை**

காவ்யாயாஸ்தி தமாவர்க வ்யாஜயாதக மார்ககா
காமதா ஜகத: ஸ்தித்யை ரங்க புங்கவ பாதுகா.

**7. சனிக்கிழமை**

பாபா கூபார பாலீபா த்ரிபாதீ பாத பாதபா
க்ருபாரூபா ஜபா லாபா ஸ்வாபா மாபாந் ந்ருபாதிபா.

# அருளாளர்கள் அருளிய பரிகாரங்கள்

தெய்வத்தமிழ் மொழியில், பலவித அற்புதங்களை நிகழ்த்திக் காட்டியவர்கள் சைவ ஆச்சாரியர்கள். தமது திருமுறைப் பதிகங்கள் மூலம் பல இன்னல்களைப் போக்கி, நல்வழிப்படுத்தியுள்ளனர். இங்கு பதிகத்தின் முதல் பாடல் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. மேலும் பலன் பெற முழுப் பதிகத்தையும் பாடுவது மிகச்சிறப்பாகும். பலனுக்குத் தகுந்தவாறு பாவங்களைப் பிரித்துக் கொடுத்துள்ளோம்.

## முதல் பாவம்

**ஆயுள் முழுவதும் எந்தவிதக் குறையும் இன்றி வாழ**

துஞ்சலும் துஞ்சல் இல்லாத போழ்தினும்
நெஞ்சகம் நைந்து நினைமின், நாள்தொறும்;
வஞ்சகம் அற்று அடி வாழ்த்த, வந்த கூற்று
அஞ்ச உதைத்தன, அஞ்சு எழுத்துமே.

## இரண்டாம் பாவம்

**பொருளாதார நிலை சீர் பெற, வறுமை நீங்க**

இடரினும் தளரினும் எனும் உறு நோய்
தொடரினும் உனகழல் தொழுது எழுவேன்;
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே,

**உணவும் , உடையும் குறைவின்றிக் கிடைக்க**

தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும்
சார்வினும் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே;
எந்தை புகலூர் பாடுமின்; புலவீர்காள்
இம்மையே தரும் சோறும் கூறையும்,
ஏத்தலாம்இடர் கெடலுமாம்

அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு,
யாதும் ஐயுறவு இல்லையே.

**கண்களில் உள்ள கோளாறுகள் நீங்க**

**இடக்கண்ணில் இடர் நீங்குவதற்கு**

ஆலம்தான் உகந்து அமுது செய்தானை
ஆதியை அமரர் தொழுது ஏத்தும்
சீலம்தான் பெரிதும் உடையானைச்
சிந்திப்பார் அவர் சிந்தை உளானை
ஏலவார் குழலாள் உமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பன் எம்மானைக்
காணக் கண் அடியேன் பெற்றவாறே.

**வலக்கண்ணில் இடர் நீங்குவதற்கு**

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப், பிறரை வேண்டாதே
மூளாத் தீப் போல் உள்ளே கனன்று, முகத்தால் மிகவாடி
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங்கு இருப்பீர்? திருவாரூரீர் வாழ்ந்து போதீரே.

**சொல் சோர்வு நீங்க, திக்குவாய் மாறிச் சீர்பெற , சிறந்த பேச்சாளர் ஆக**

பூசுவதும் வெண்ணீறு
பூண்பதுவும் பொங்கு அரவம்,
பேசுவதும் திருவாயால்
மறைபோலும் ? காண் , ஏடி!
பூசுவதும் பேசுவதும்
பூண்பதுவும் கொண்டு என்னை?
ஈசன் அவன், எவ்வுயுர்க்கும்
இயல்புஆனான்; சாழலோ.

**குடும்பத்தில் உள்ள குழப்பங்கள் தீர்ந்து, அமைதியுடன் வாழ**

மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்; வைகலும்
எண்ணில் நல்லகதிக்கு யாதும் ஓர்குறைவு இலை;
கண்ணில், நல்லஃதுஉறும்; கழுமல வளநகர்ப்
பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே.

**கல்வியில் திறம் பெற்று உயர**

சுற்றமொடு பற்று அவை துயக்குஅற அறுத்துக்
குற்றம்இல் குணங்ளொடு கூடும் அடியார்கள்
மற்றவரை வானவர்தம் வான்உலகம் ஏற்றக்
கற்றவன் இருப்பது கருப்பறிய லூரே.

## மூன்றாவது பாவம்

**எடுத்தகாரியம் யாவினும் வெற்றி பெற, விஷசுரம், விஷக்கடி முதலியன நீங்க, தொண்டை கோளாறுகள் நீங்கி குரல் வளம் பெற, செய்வினை, பில்லி, சூனியம் பாதிக்காமல் இருக்க, துணிவுடன் செயலாற்ற, இளைய சகோதரன் நலம் பெற**

"அவ்வினைக்கு இவ்வினை ஆம்" என்று சொல்லும் அஃது அறிவீர்;
உய்வினை நாடாது இருப்பதும் உம்தமக்கு ஊனம் அன்றே?
கைவினை செய்து எம்பிரான் கழல் போற்றுதும்; நாம் அடியோம்;
செய்வினை வந்து எமைத் தீண்டப் பெற; திருநீலகண்டம்.

## நான்காம் பாவம்

**தாயாரின் உடல்நிலை சீர்பெற, பிரசவம் சுகமாக அமைய, உறவினர், நண்பர்களின் தொடர்பு நன்கு அமைய, வீடு, மனை நலமுடன் கட்டி முடிக்க**

நன்று உடையானை, தீயது இலானை, நரைவெள் ஏறு
ஒன்று உடையானை, உமை ஒருபாகம் உடையானை
சென்று அடையாத திரு உடையானை, சிராப்பள்ளிக்
குன்று உடையானைக் கூற என் உள்ளம் குளிரும்மே.

## ஐந்தாம் பாவம்

**மக்கட் செல்வம் வாய்க்க, வாதத்திறமை பெற, எழுத்தாற்றல், தத்துவ ஞானத் தெளிவு பெற**

கண் காட்டும் நுதலானும், கனல் காட்டும் கையானும்,
பெண் காட்டும் உருவானும், பிறை காட்டும் சடையானும்
பண் காட்டும் இசையானும் பயிர் காட்டும் புயலானும்
வெண் காட்டில் உறைவானும், விடை காட்டும் கொடியானே.

## ஆறாம் பாவம்

**வெப்ப நோய்கள் நீங்க**

மந்திரம் ஆவது நீறு; வானவர் மேலது நீறு;
சுந்தரம் ஆவது நீறு; துதிக்கப் படுவது நீறு;
தந்திரம் ஆவது நீறு; சமயத்தில் உள்ளது நீறு;
செந்துவர் வாய் உமை பங்கன், திரு ஆலவாயான் திருநீறே.

**பகை, சிறை வாசத்திலிருந்து விடுபட**

செய்யனே, திரு ஆலவாய் மேவிய
ஐயனே, 'அஞ்சல்' என்று அருள் செய்; எனைப்
பொய்யராம் அமணர் கொளுவும் சுடர்,
பையவே சென்று, பாண்டியதற்கு ஆகவே.

**கடன் தொல்லை நீங்கி, பொருளாதாரம் மேம்பட**

வேத வேள்வியை நிந்தனை செய்து உழல்
ஆதம் இல்லி அமணொடு தேரரை
வாதில் வென்று அழிக்கத் திரு வுள்ளமே?
பாதி மாதுடன் ஆய பரமனே.
ஞாலம் நின் புகழே மிக வேண்டும், தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.

**இரத்த அழுத்தம், நீரிழவு நோய் நீங்க, போதைப் பழக்கத்தில் இருந்து விடுபட**

துணிவளர் திங்கள் துளங்கி விளங்க,
சுடர்ச்சடை சுற்றி முடித்து,
பணிவளர் கொள்கையர் பாரிடம் சூழ,
ஆரிடமும் பலி தேர்வர்
அணிவளர் கோலம் எலாம் செய்து,
பாச்சிலாச் சிராமத்து உறைகின்ற
மணிவளர் கண்டரோ, மங்கையை வாட
மயல் செய்வதோ, இவர்மாண்பே?

**தீராத வயிற்றுவலி, குடல் தொல்லைகள், மஞ்சள் காமாலை நோய் நீங்க**

கூற்று ஆயினவாறு விலக்ககிலீர்;
கொடுமை பலசெய்தன நான் அறியேன்;
ஏற்றார், அடிக்கே இரவும் பகலும்
பிரியாது வணங்குவன், எப்பொழுதும்
தோற்றாது என் வயிற்றின் அகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேன் அடியேன்; அதிகைக் கெடில
வீரட்டானத்து உறை அம்மானே.

**எலும்பு முறிவு, இளம்பிள்ளை வாதம், பக்கவாதம் நீங்க**

விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள்
பாடல் விளை யாடல் அரவம்,
மங்குலொடு நீள் கொடிகள் மாடம்மலி
நீடு பொழில் மாகறல் உளான்
கொங்கு விரி கொன்றையொடு கங்கை வளர்
திங்கள் அணி செங்சடையினான்;
செங்கண் விடை அண்ணல் அடி சேர்பவர்கள்
தீவினைகள் தீரும் உடனே.

## ஏழாம் பாவம்

### சர்ப்ப தோஷம் நீங்க

சடையாய் எனுமால்; சரண் நீ எனுமால்;
விடையாய் எனுமால்; வெருவா விழுமால்;
மடையார் குவளை மலரும் மருகல்
உடையால் தகுமோ, இவள் உள் மெலிவே

### திருமணத் தடை நீங்க

நீறுவரி ஆடுஅரவொடு ஆமை மனவு என்புநிரை பூண்பர் இடபம்
ஏறுவர் யாவரும் இறைஞ்சு கழல் ஆதியர் இருந்த இடம் ஆம்
தாறுவிரி பூகம்மலி வாழை விரை நாறஇணை வாளை மடுவில்
வேறுபிரியாது விளையாட வளம் ஆகும் வயல் வேதி குடியே.

### தாம்பத்திய உறவு நலமுடன் விளங்க

அயில் ஆரும் அம்பு அதனால் புரம் மூன்று எய்து
குயில் ஆரும் மென் மொழியாள் ஒருகூறு ஆகி
மயில் ஆரும் மல்கிய சோலை மணஞ்சேரிப்
பயில்வானைப் பற்றி நின்றார்க்கு இல்லை, பாவமே.

## எட்டாம் பாவம்

### சகல கிரக பீடைகள் நீங்க

வேயுறு தோளி பங்கன் விடம் உண்ட கண்டன்
மிக நல்ல வீணை தடவி,
மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்து, என்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு, திங்கள், செவ்வாய், ப்புதன், வியாழன், வெள்ளி,
சனி, பாம்பு இரண்டும் உடனே
ஆசுஅறும்; நல்ல நல்ல; அவை நல்ல நல்ல,
அடியார் அவர்க்கு மிகவே.

**அட்டமச்சனி, ஏழரைச் சனி, கண்டகச் சனி தோஷம் நீங்க**

போகம் ஆர்த்த பூண்முலையாள் தன்னோடும் பொன்னகலம்
பாகம் ஆர்த்த பைங்கண் வெள்ஏற்று அண்ணல் பரமேட்டி
ஆகம் ஆர்த்த தோல் உடையன், கோவண ஆடையின் மேல்
நாகம்ஆர்த்த நம்பெருமான் , மேயது நள்ளாறே.

**காரியத் தடை, வீண் பழி நீங்க**

மறை உடையாய்,தோல் உடையாய், வார்சடைமேல் வளரும்
பிறை உடையாய் ,பிஞ்ஞகனே , என்று உனைப்பேசின் அல்லால்
குறை உடையார் குற்றம் ஓராய்; கொள்கையினால் உயர்ந்த
நிறை உடையார் இடர்களையாய்; நெடுங்களம் மேயவனே.

**இழந்த பொருளை மீட்க**

பொன் செய்த மேனியினீர் , புலித்தோலை அரைக்கு அசைத்தீர்;
முன்செய்த மூஎயிலும் எரித்தீர் முதுகுன்று அமர்ந்தீர்;
மின் செய்த நுண்இடையாள் பரவை இவள்தன் முகப்பே,
என்செய்தவாறு அடிகேள், அடியேன் இட்டளம் கெடவே

## ஒன்பதாம் பாவம்

**தந்தையின் உடல்நலம் மேம்பட, புண்ணிய காரியங்கள் செய்ய**

ஓர்உரு ஆயினை மான் ஆங் காரத்து
ஈர் இயல்பாய் ஒரு விண்முதல் பூதலம்
ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும்
படைத்து அளித்து அழிப்ப, மும்மூர்த்திகள் ஆயினை;
இருவரோடு ஒருவன் ஆகி நின்றனை.

## பத்தாம் பாவம்

**வேலை கிடைக்க, செயலில் பாராட்டு பெற, புண்ணிய பலன் பெற**

வாழ்க அந்தணர், வானவர் ஆன்இனம்;
வீழ்க தண்புனல்; வேந்தனும் ஓங்குக;
ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே
சூழ்க; வையகமும் துயர் தீர்க்வே.

**தொழில் நிரந்தரம் பெற**

மட்டுஇட்ட புன்னை அம் கானல் மடமயிலைக்
கட்டுஇட்டம் கொண்டான் கபாலீச் சரம் அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்கு
அட்டுஇட்டல் காணாதே போதியோக பூம்பாவாய்.

## பதினோராம் பாவம்

**தொழில் லாபம், மூத்த சகோதரர் நலன், வழக்கில் வெற்றி பெற**

வாசி தீரவே, காசு நல்குவீர்;
மாசு இலு மிழலையீர்; ஏசல் இல்லையே

இறைவர் ஆயினீர்; மறைகொள் மிழலையீர்;
கறைகொள் காசினை, முறைமை நல்குமே

செய்ய மேனியீர்; மெய்கொள் மிழலையீர்;
பைகொள் அரவினீர்; உய்ய நல்குமே.

நீறு பூசினீர்; ஏறு அது ஏறினீர்;
கூறு மிழலையீர்; பேறும் அருளுமே

காமன் வேவ, ஓர் தூமக் கண்ணினீர்;
நாம மிழலையீர்; சேமம் நல்குமே

பிணிகொள் சடையினீர்; மணிகொள் மிடறினீர்;
அணிகொள் மிழலையீர்; பணிகொண்டு அருளுமே

மங்கை பங்கினுர்; துங்க மிழலையிர்;
கங்கை முடியினீர்; சங்கை தவிர்மினே

அரக்கன் நெரிதர, இரக்கம் எய்தினீர்;
பரக்கும் மிழலையீர்; கரக்கை தவிர்மினே.

அயனும் மாலுமாய் முயலும் முடியினீர்;
இயலும் மிழலையீர்; பயனும் அருளுமே.

பறிகொள் தலையீனார், அறிவது அறிகிலார்;
வெறிகொள் மிழலையீர்; பிரிவத அரியாதே.

காழிமா நகர் வாழி சம்பந்தன்,
வீழிமிழலே மேல். தாழும் மொழிகளே.

## பன்னிரண்டாம் பாவம்

**மறுபிறப்பைப் தவிர்த்து, இறைவனோடு கலக்க,**

காதல் ஆகிக் கசிந்து, கண்ணீர் மல்கி,
ஓதுவர்தமை நன்னெறிக்கு உய்ப்பது;
வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது
நாதன் நாமம், நமச்சி வாயவே.



## ஸ்ரீஆரோமிரா பிரசுரத்தின் புதிய வெளியீடுகள்



**காலபுருஷத் தத்துவமும் ராசி மண்டலமும்**

**- மதுரை P.A.பொன்னையா**

ராசிகளின் தத்துவம், குணம், வாழ்வியல் கோட்பாடுகள், பின்பற்ற வேண்டியவை, பஞ்ச பூதங்களும் ராசி தத்துவங்களும், சீற்றமுள்ள–மௌனமான–பாசமான–வேகமான–லட்சியமான ராசிகள் என காலபுருஷ தத்துவத்தின்படி ராசிகளை ஆய்வு செய்யும் பொக்கிஷம் – இந்நூல்.



**வாழ வழிகாட்டும் கைரேகைக் கலை**

**- சின்னாளப்பட்டி R.தங்கவேலு**

200க்கும் மேற்பட்ட விளக்கப் படங்களுடன், மருத்துவர்களும் நோயாளியின் கைரேகையைக் கொண்டு சிகிச்சை அளிக்கும் முறைகளை பல உதாரண கைரேகைகளோடு விளக்குவதோடு, எல்லோரும் இக்கலையை எளிதில் கற்கும் அளவிற்கு கைரேகைக் கலையின் அகராதியாகத் திகழ்கிறது – இந்நூல்.



**ஆரோக்கியம் நாடி (மருத்துவ ஜோதிடம்)**

**- புலவர் நவமணி சண்முகவேலு**

நோய்க்கான ஜாதக அமைப்பு–காரணம், எத்தகைய நோய்–எப்போது தீரும், மருந்து சாப்பிடுவது எப்படி? போன்ற ஆய்வுடன் பல சந்தேகங்களுக்கு வினாவிடை மூலம் பதில்களும் தந்து, தத்துவம், ஜோதிடம், மருத்துவம் என்னும் அனைத்து விதமான விஷயங்களையும் தாங்கி நிற்கும் அற்புதப் படைப்பு – இந்நூல்.

## ஸ்ரீஆரோமிரா பிரசுரத்தின் புதிய வெளியீடுகள்

**காலதேவன் கணக்கும் ஏழாம் பாவமும்**

**- முத்தூர் இராமசாமி**



அரிய ஜோதிட பழம்பாடல்கள், அனுபவ விளக்கங்கள், கிரகங்களின் பலவித பெயர்கள், நெட்நெடுப்பு கணக்கு எனும் சுருக்கமான பலன் கூறும் அரிய முறை, ஜோதிடத்தின் எளிமையான – ஆழமான விளக்கங்கள் என முற்றிலும் புதுமையாக ஜோதிடத்துறைக்கு வந்துள்ள வரப்பிரசாதம் – இந்நூல்.

**ஜாதகத்தை இயக்கும் கிரகங்கள்**

**- நக்கீரர் S.நடராஜன்**



கிரகங்களின் ஆஸ்ரேய பலன்கள், பாவங்களின் ஆஸ்ரேய பலன்கள், கிரகங்களுக்கான பல்வேறு பெயர்கள், ஜோதிட முத்துச் சிதறல்கள், சித்தர்களின் 365 ஜோதிட பொன்மொழிகள் என இன்னும் பல விஷயங்களை வேத சாஸ்திர முறைப்படி விளக்கும் சிறப்பு மிகுந்தது – இந்நூல்.

**திருமணப் பொருத்தங்களும் அதன் சூட்சுமங்களும்**

**- நக்கீரர் S.நடராஜன்**



தசவித பொருத்தங்களில் உள்ள விதிவிலக்குகள், கிரகங்களைக் கொண்டு பொருத்தம் பார்க்கும் அற்புத முறைகள், எளிதில் பொருத்தம் காண உதவும் பலவித அட்டவணைகளுடன் வேத சாஸ்திரங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட அற்புதப் படைப்பு – இந்நூல்.

# ஸ்ரீஆரோமிரா பிரசுரத்தின் புதிய வெளியீடுகள்



**ஜோதிடத்தில் பரிகார சூட்சுமங்கள்**

**- சித்தயோகி சிவதாசன்ரவி**

எல்லா பிரச்சனைக்கும் பரிகாரம் உண்டா? பரிகாரம் என்றால் என்ன? ஏன் சிவன் கோவிலில் பரிகாரம் செய்கிறோம்? விரதங்களின் பலன்கள், தசாபுத்திகளும் ராமாயணமும், பகவத்கீதை கூறும் நட்சத்திர பரிகாரங்கள், விருட்சங்களும் தெய்வீக சக்திகளும் என்னும் விஷயங்கள் உள்ள பல அரிய கட்டுரைகளின் தொகுப்பு – இந்நூல்.




**ஜாமக்கோள் ஆருடம்**

**- ஜாமக்கோள் ஜாம்பவான் A.அமிர்தலிங்கம்**

ஜாமக்கோள் என்றால் என்ன? ஜாமக்கோளைக் கொண்டு எவற்றை அறியலாம்? ஜாமக்கோள் கணிப்பது எப்படி? ஜாமக்கோள் சில உதாரண ஜாதகங்கள் என பலவித கேள்விகளுக்கு விளக்கங்கள் அடங்கிய சிறந்த படைப்பு – இந்நூல்.



**உங்கள் அதிர்ஷ்ட காலம் எப்போது?**

**- கோட்டையூர் N.சிவசுப்ரமணியம்**

வக்கிர கிரகங்கள் தரும் வளமான வாழ்வு, மங்களங்கள் வழங்கும் மங்கையர், அதிர்ஷ்டகாலம் தேர்ந்தெடுப்பது எப்படி? திதிகள், யோகங்கள் இவற்றை பயன்படுத்தும் முறை, கிரகங்களை வசீகரிக்க வழிகள், மக்கள் செல்வாக்கைத் தரும் பலவித அரிய யோகங்களைப் பற்றி மிகவும் விளக்கமாகக் கூறுகின்றது – இந்நூல்.

## ஸ்ரீஆரோமிரா பிரசுரத்தின் புதிய வெளியீடுகள்



**திருமணப் பொருத்தமும் வாழ்க்கை ரகசியங்களும்**

**- கடகம் இராமசாமி**

பத்துப் பொருத்தம் மட்டுமல்லாமல் பலவித பொருத்தங்கள், திருமணம் செய்யும் பொழுது கவனிக்க வேண்டியவை, திருமணத்திற்குப் பின் வாழ்க்கை, சரியாக பொருத்தம் .பார்க்கும் முறை, தெய்வ–குரு உத்தரவு பெற்று திருமணம் செய்வது எப்படி என்று விளக்கிக்கூறுகிறது – இந்நூல்.

## அச்சில் உள்ள அரிய படைப்புகள் ...

**உலகியல் ஜோதிடம் - சித்தயோகி சிவதாசன் ரவி**

பிரபஞ்ச ரகசியத்தை வெளிப்படுத்தும் அரிய படைப்பு.

**பஞ்சாங்க நுட்பங்கள் - சித்தயோகி சிவதாசன் ரவி**

பஞ்சாங்கத்தை பயன்படுத்தும் முறை, பஞ்சாங்கத்தில் உள்ள விஷயங்களுக்கான விளக்கங்கள் போன்றவற்றை மிகவும் விரிவாகக் கூறும் நூல்.

**நட்ட கல்லும் பேசும் - புலவர் நவமணி சண்முகவேலு**

கோவிலின் அமைப்பு முறை மற்றும் மகத்துவத்தை வாஸ்து முறையில் விளக்கம் அளிக்கும் முதல் தமிழ் நூல்.

**ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் - பெ.ரஜினி**

"ஸௌந்தர்ய லஹரீ – மந்த்ர – யந்த்ர – ப்ரயோக முறைகள்" என்னும் புத்தகத்தைப் போன்று, முற்றிலும் புதிய கோணத்தில் தக்க ஆதாரங்களுடன் அன்னையின் ஆயிரம் நாமங்களுக்கும் விளக்கம் அளிக்கும் நூல்.

## விரைவில் உங்கள் அபிமான கடைகளில்

## ஸ்ரீ ஆரோமிரா பிரசுரத்தின் SUPER HIT வெளியீடுகள்

### சித்தயோகி சிவதாசன்ரவி அவர்களின் அற்புதப் படைப்புகள்



**நாடி ஜோதிட விளக்கங்கள்**
**4–ஆம் பதிப்பு**




**நாடியில் கிரகச் சேர்க்கைகளும்**
**கோட்சார பலன்களும்**
**3–ஆம் பதிப்பு**



**சித்தர்கள் அருளிய**
**பிரசன்ன ஆரூட முறைகள்**
**(2ம் பதிப்பு)**



**அடிப்படை ஜோதிட நுட்பங்கள்**
**(1ம் பதிப்பு)**

## ஸ்ரீஆரோமிரா பிரசுரத்தின் SUPER HIT வெளியீடுகள்



**துணையறிவோம் தொழில்புரிவோம்**

**- முனைவர் க.இராதாகிருஷ்ணன்**

தொழில் ஸ்தானமான பத்தாம் பாவமும், பத்திற்குப் பத்தாம் பாவமான 7 ஆம் பாவத்தையும் இணைத்து மிகவும் விரிவாக விளக்கும் அற்புதப் படைப்பு – இந்நூல்.




**உங்களுக்குள் நீங்கள்**

**- ஜே.மணவழகன்**

தன்னம்பிக்கை ஊட்டும் விதமாக பலவிதமான குட்டிக் கதைகள், கட்டுரைகள், கோட்டோவியங்கள், மேற்கோள்கள் என்று நூலின் ஒவ்வொரு எழுத்திலும் நம்பிக்கை விதைகளை விதைத்து, மாணவர்கள், இளைஞர்கள், சொற்பொழிவாளர்கள், சுயதொழில் செய்வோர் அனைவரையும் எழுச்சிபெறச் செய்கிறது – இந்நூல்.




**ஸௌந்தர்யலஹரீ மந்த்ர-யந்த்ர-ப்ரயோக முறைகள்**

**- பெ.ரஜினி**

மந்த்ர சாஸ்த்ரம் கூறும் 100 சக்தி வாய்ந்த யந்த்ரங்கள், மந்த்ரங்கள், அவற்றைப் ப்ரயோகம் செய்யும் முறைகள், அதற்கான பலன்கள், நவக்கிரக தோஷத்திற்கான எளியமுறை பரிகாரங்கள், அன்னையின் 100 அற்புதப் படங்களுடன் எளிய விளக்க-உரையுடன் கூடியது – இந்நூல்.



# சித்தயோகி சிவதாசன்ரவி

## விரத சூட்சுமங்கள்

சிலை வழிபாடு ஏன்?

ஆயுள் தோஷமும் பரிகாரமும்

ஆலய வழிபாட்டின் சூட்சுமங்கள்

சுகபிரசவம் அடைய கர்ப்ப சடங்குகள்

பரிகாரம் செய்ய ஏற்ற இடம், காலம்எது?

ஜாதகம் இல்லாதவர்களுக்கு பொதுவான பரிகாரங்கள்

ஸ்ரீ இராமாயண, பகவத்கீதையில் பரிகார சூட்சுமங்கள்

பரிகாரம் கூறுவதில் சகுனங்களின் பங்கு

எளிய வாஸ்து பரிகாரங்கள்





உண்மையின் வருகைக்கு வணக்கம்

ஸ்ரீஆரோமிரா பிரசுரம்

SRIAUROMIRRA PRASURAM

1,ஏரப்பக்கவுண்டர்சந்து, நடுவீதி,

தம்மம்பட்டி-636113

சேலம்மாவட்டம்

9943277955 9486498452


